Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor*: P. B. ANNANGARACHARYA, L. KANCHEEPURAM

# ஸ்ரீராமாநுஜன் 224

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி * — ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

31—7—1967ல் வெளியிடப்பட்டது.

# ஸ்ரீ ராமாநுஜன் — 224



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 19 | ப்லவங்கஸு ஆவணிமாதத்திற்காக 5-8-67ல் வெளியிடப்பட்டது. | ஸஞ்சிகை 9

## திருவாய்மொழி நூற்றந்தாதி—99.

சூழ்ந்துநின்ற மால்விசும்பில் தொல்லைவழிகாட்ட*
ஆழ்ந்ததனை முற்றுமநுபவித்து—*வாழ்ந்தங்
கடியருடனே யிருந்தவாற்றை யுரைசெய்தான்*
முடிமகிழ்சேர் ஞானமுனி.

| | |
|---|---|
| முடி மகிழ் சேர் ஞானம் முனி | திருமுடியிலே வகுளமாலை யணிந்த ஞானமுனிவராகிய ஆழ்வார் |
| சூழ்ந்து நின்ற மால் | தம்மைச் சூழ்ந்து நின்ற எம்பெருமான் |
| விசும்பில் | பரமபதத்தில் |
| தொல்லை வழி காட்ட | அநாதி மார்க்கமான அர்ச்சிராதி மார்க்கத்தைக் காட்டிக் கொடுக்க |
| அதனை முற்றும் ஆழ்ந்து அநுபவித்து | அங்குள்ள அநுபவங்களை யெல்லாம் ஆழ்ந்து அநுபவித்து |
| அங்கு வாழ்ந்து | அவ்விடத்தே வாஸம் பண்ணி |
| அடியருடனே இருந்த ஆற்றை | நித்யமுக்தர்களுடனே யிருந்த படியை |
| உரைசெய்தான் | அருளிச் செய்தார். |

* * *—எம்பெருமான் ஆழ்வாரைத் திருநாட்டிலே கொண்டுபோய் வைத்து இவரும் தானுமாக அநுபவிப்பதாய் மநோரதித்து இவர்க்கு அர்ச்சிராதி மார்க்கத்தையும் அங்குள்ளார் பண்ணும் ஸத்கார விசேஷங்களையும் பரமபத ப்ராப்தியையும் அங்கு நடைபெறும் விசேஷங்களையும் தன்னுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளையும் விசதமாக

இவர் கண்டநுபவிக்கலாம்படி பரஜ்ஞாந தசையைப் பிறப்பித்துக் காட்டிக்கொடுக்க, இவரும் அவற்றை அழகிதாகத் திருப்புளியாழ்வாரடியிலிருந்துகொண்டே கண்டநுபவித்து *அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்து தாம் பெற்ற அப்பேற்றை *சூழ்விசும்பு பதிகத்திலருளிச் செய்தாரென்றதாயிற்று.

இதற்குக் கீழ்ப்பதிகத்தில் *இன்றென்னைப் பொருளாக்கித் தன்னையென்னுள் வைத்தான், அன்றென்னைப் புறம்போகப் புணர்த்ததென்செய்வான்?* என்று எம்பெருமானை மடிபிடித்துக் கேள்வி கேட்டாராழ்வார்; அதற்கு ஹேது தன்னுடைய நிரங்குச ஸ்வாதந்திரியமொழிய வேறென்றில்லையென்று ஆழ்வாரும் நன்கறிந்தவர், எம்பெருமானும் நன்கறிந்தவன். ஆகவே 'ஆழ்வீர்! அன்று உபேக்ஷித்திருந்ததற்கும் ஸ்வாதந்திரியமே காரணம், இன்று ஆதரிப்பதற்கும் ஸ்வாதந்திரியமேதான் காரணம்' என்று பதில் சொல்ல வேண்டும். தான் பரமகாருணிகனுயிருந்துவைத்து இங்ஙனே பதில் சொல்லத் தகாதாதலால் ஒருவகையான உத்தரமுஞ் சொல்லாதே தலைகுனிந்து நின்றுன். ஆழ்வாரைப் பரமபதத்தேறக் கொண்டுபோக விரைவுகொண்ட தான் இப்படி ஆழ்வாருடைய கேள்விக்கு பதில் சொல்லமாட்டாமல் வெள்கி நிற்கிற நிலையை மறைப்பதற்காக ஒருவழி பண்ணினுன்; கலியாணங்களில் சடங்கு காட்டும் உபாத்யாயர்கள் சொல்லவேண்டிய மந்த்ரம் தோன்றுவிட்டால், மேளதாளங்களைக் கொட்டச்சொல்லி வாத்யகோஷத்தாலே அத்தை மறைத்துவிடுமாபோலே இப்போது நிருத்தரனுனதானும் மேகஸமுத்ர பேரீகீதகாஹள சங்க ஆசீஸ் ஸ்துதி கோலாஹலங்களைச் செய்தான்: அதாவது, *"சூழ்விசும்பணி முகில் தூரியம் முழக்கின ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின" என்று, ராஜகுமாரர் போம்போது மங்களவாத்யகோஷம் பண்ணுவாரைப்போலே பரமபதத்துக்குப் போமவர்களைக் கண்ட ப்ரீதியாலே முழங்குவது கோஷிப்பதாகா நிற்கும் மேக ஸமுத்ரங்களாகிற பேரிகளின் கோலாஹலத்தை யுண்டுபண்ணினுன்; கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள்* என்கிற கீதங்களைச் செவிப்படுத்தினுன்; *காளங்கள் வலம்புரி கலந்தெங்குமிசைத்தன* என்கிற காஹள சங்கங்களினுடைய முழக்கத்தை மூட்டினுன்; *வாளொண்கண் மடந்தையர் வாழ்த்தினர்* என்கிற ஆசீஸ்ஸின் ஆரவாரத்தைக் கிளப்பினுன்; *தொடர்ந்தெங்கும் தோத்திரஞ் சொல்லினர்* என்கிற ஸ்தோத்ர கோலாஹலங்களைப் பிறப்பித்தான். ஆக இப்படிப்பட்ட கோலாஹலங்களை விளைவித்த மாத்திரமேயன்றிக்கே, அர்ச்சிராதி கதியையும் ஆதிவாஹிக ஸத்காரத்தையும் (பரமபத) திவ்ய தேசப்ராப்தியையும் அங்குள்ளாருடைய பஹுமானத்தையும் ஆனந்தமயமான ஆஸ்தானத்திலிருப்பையும் ஸ்வசரணகமல ப்ராப்தியையும் பெற்றுராகப் பேசும்படி பண்ணிவைத்தான். அதெல்லாம் பேசப்படுகிறது இத்திருவாய்மொழியில். ... ❋

# ஸ்ரீ வைஷ்ணவவுலகமெல்லாம் குறிக்கொள்ளவேண்டும். ஸ்ரீமதாண்டவனும் அவரடியார்களும் விசேஷித்து நோக்குக.

ஸ்ரீமதாண்டவன் அநுக்ரஹம் பெற்றுச் சிலவாண்டுகளாக நடந்துவரும் ஸ்ரீரங்கநாத பாதுகா என்னும் மாதப் பத்ரிகையில் நிகழும் பிலவங்கவூ ஆடி மாத ஸஞ்சிகையில் "கலியைக் கடிந்திடும் கவிதார்க்கிக சிங்கம்" என்று மகுடம் புனைந்த ஓர் வியாஸம் 'ஈ. தே. ஸ்ரீநிவாஸன்' என்பவர் பெயரால் வெளிவந்துளது. ஸ்ரீராமாநுஜர் எழுந்தருளியிருந்த காலத்தில் (அதாவது ஆயிரமாண்டுகட்கு முன்பு) அந்த ஆசார்ய ஸார்வ பௌமர்க்கும் கலிபுருஷனுக்கும் ஸம்பாஷணையொன்று நடந்ததாக மேலே கண்ட 'ஸ்ரீநிவாஸன் எழுதியுள்ளார். (என்னவென் றெழுதியுள்ளாரென்னில்) உடையவர் கலி யைக் கெடுத்து க்ருதயுக தருமங்களைச் செழிப்பித்ததனுல் கோபங்கொண்ட கலிபுருஷன் உடையவரிடம் நெருங்கிவந்து தன்னை இன்னுனென்று தெரிவித்து 'என்னை நீர் அநியாய மாய்க் கொலை செய்துவிட்டீரே, இது தருமமா' என்று பலபலவும் சொல்லிக்கத்தின வளவிலே உடையவர் சாந்தமாக பதில் சொல்லியும் அந்த கலிபுருஷன் கேளாமல் வெகு ஆத்திரமாகக் கதறிக்கொண்டு 'நான் உமது மதத்தில் சேர்ந்தவனுகவே பிறந்து எனக்குப் பிடித்த சில தூர்சக்திகளையும் பிறக்கச்செய்து உம் மதத்தை அடியோடு அழிக்காவிடினும், அந்த விசிஷ்டாத்வைதத்தைப் பலவிதமாகக் குழப்பிவிடுகிறேன். அதன்மூலமாகவாவது நான்ஜீவிக்கிறேன்" என்ன, அதற்குமேல் பாஷ்யகாரர், அப்பா நீ என்னவிதத்தில் கெடுக்கப் போகிருய்? என்று கேட்க, அதற்குக் கலிபுருஷன் "பரமனுக்கு உலகோர் செய்யும் அபசாரமே போக்கியம். அதையே செய்வோம் என்று பறையறைவேன். மஹாலக்ஷ்மி நம்மைப்போல் ஓர் சாமானியஜீவன் என்று அடித்துப் பேசிக் கலக்குவேன். ஆழ்வார்களைப் பல ஜென்மம் எடுத்த நித்ய பத்த ஸம்ஸாரிகள் என்று நம்பச்செய்வேன். சரணுகதி வேண்டவே வேண்டாமென்று சொல்வேன். வேதமார்க்கத்தின் வழி வரும் ஆசாரங்கள் அவ்வளவு அவசியமல்லவென்று வாதாடுவேன். அஷ்டகா சிராத்தம், மஹாளய சிராத்தம் முதலியவைகளை விட்டொழிக்கச் செய்வேன். இன்னும் பலபல செய்வேன் என்ன ஆகிறது என்று பார்க்கலாம்" என்றுன். ஸ்ரீபாஷ்யகாரர் "இந்த விசிஷ்டாத்வைத ஸம்ப்ர தாயத்தின் பெருமை அளவிடமுடியாதது. பரமனே ப்ரவர்த்தகன் இதற்கு. இதற்கு ஏதேனும் ஊறுவிளைக்க யாரேனும் முற்பட்டால் அவனே பகவத் கீதையில் சொல்லியபடி ஓர் அவதாரமும் செய்வான். எனக்குப் பின்பு இந்த ஸம்ப்ரதாயத்தைக் காக்கத் திருவேங் கடமுடையானே காஞ்சீபுரத்தில் திருத்தண்காவில் விசுவாமித்திர கோத்திரத்தில் அவதரிக் கப்போகிருர். அவர் பெயர் நடையாடுமிடங்களில் உன் பலம் செல்லாது. ஆதலால் ஏ கலிபுருஷனே; அம்மஹான் வேங்கடநாதார்ய, வேதாந்தாசார்யர் புகழ் பரவாத இடமாகப் போய்ச் சேர்" என்று சொல்லக் கலிபுருஷன் ஓடிவிட்டான்."

அன்பர்களே! மேலேயெழுதப்பட்ட பங்க்திகளெல்லாம் பாதுகா பத்ரிகையில் அப்படியப்படியே உள்ளவையேயன்றி அர்த்தாநுவாதமாக நாம் எழுதியதல்ல. இந்த கட்டுரையினுல் என்ன தெரிவிக்கப்பட்டதென்பதை நாம் மறுபடியும் விவரிக்கவேணுமோ? ஸ்ரீராமாநுஜர்க்கும் வேதாந்தவாசிரியர்க்கும் இடையில் அவதரித்த ஆசாரியர்கள் கலி

புருஷனுடையவும் அவனுடைய பரிகரமான துர்சக்திகளினுடையவும் அவதாரபூதர்களென்றும், அவ்வாசாரியர்கள் எம்பெருமானை தோஷபோக்யனென்று பேசுவர்கள், பிராட்டியை இழிவாகக் கூறுவர்கள், ஆழ்வார்களையும் பத்தஸம்ஸாரிகளென்று பழிப்பர்கள், சரணாகதியை வெறுப்பர்கள், வேதோக்தகர்மானுஷ்டானங்களையும் விட்டொழிப்பர்கள் என்றும், வேதாந்தவாசிரியர் தோன்றி இந்த கலிகோலாஹல பிசாசிகையைத் தொலைத்து மீண்டும் க்ருதயுகதர்ம ஸஞ்ஜீவனம் செய்தருள்வரென்றும் தெரிவிப்பதே இந்தக் கட்டுரையின் ஸாரம்.

இந்த ஈ. தே. ஸ்ரீனிவாஸரோ இவரை ஆளாக்கிவைத்த ஆண்டவனடியார்களோ மற்றையோர்களோ கல்வி பயின்றவர்களும் விவேகிகளுமாயிருந்தால் மேலே காட்டின தோஷபோக்யத்வாதி விஷயங்களில் சாஸ்த்ரீயமான சர்ச்சைகளைச் செய்து உண்மை காண முற்படவேண்டும். அதற்கு வழியில்லை, யோக்யதையுமில்லை. சாஸ்த்ர சர்ச்சை செய்தால் இக்கட்டுரையை எழுதினவர்களும் பிரசுரித்தவர்களும் வ்ருதா ஆக்ரஹிகளேயொழிய விஷய தத்வமறிந்தவர்களல்லர் என்பது கல்வெட்டாகத் தேறும். ஸர்வாத்மநா அஸங்கதமாகவும் அஸம்பத்தமாகவும் மூலை முடுக்குகளில் பேசுவதற்கும் எழுதிவைப்பதற்கும் இப்படி சில வ்யக்திகள் தலையெடுத்திருக்கிறார்கள். ஸந்தான கோபாலாசாரியரென்று ஓர் உபந்யாஸகராம். அவர் பாம்பே நகரத்தில் ஒரு ஸபையில் அப்ரஸக்தமாகத் திருமலையுடையவருடைய திருக்கோலத்தைப்பற்றியும் தென்னாசாரியர்களைப்பற்றியும் அவத்யகனமாகப் பேசி அது வெளிவந்து அதற்கு மறுப்பு தோன்றியுள்ளது. ஸந்தான கோபால ஸாஹஸோன்மூலனமென்னும் பெயருடைய அந்த சதகோடி க்ரந்தத்தை இந்த ஸ்ரீ ராமாநுஜனிதழிலேயே கண்ணாரக் காணுமுலகம். அதையெழுதினவர் என்னுடைய ஸங்கிஹித அநுபந்தியே. அதில் நூறு கேள்விகள் கேட்டிருக்கிறார். அந்தக் கேள்விகளெல்லாம் பெரும்பாலும் என்னுடைய நூல்களிலிருந்து திரட்டியவையேயென்று தெரிவித்திருக்கிறார். அது உண்மையே. அதன்மேல் ப்ரதிவாதங்களெழுந்தால் நான் முன்னின்று ப்ரத்யாக்க்யானம் பண்ண ஸஜ்ஜனாகவேயிருக்கிறேன். ப்ரக்ருத கலிகோலாஹலக் கட்டுரையில் காணும் கலிபுருஷ வசனங்களுக்குங்கூட அதிலேயே பரிஹாரங்கள் வந்திருப்பது காண்க. ஆயினும் மேலே 23வது பக்கம் தொடங்கி தனிப்படவும் காண்க.

வர்த்தமானஸ்ரீமதாண்டவன் மஹாஜ்ஞானநிதி. ஸ்வஸம்ப்ரதாயத்தில் பரிபூர்ண விச்வாஸமுடையவரேயாயினும் பரகீயஸம்ப்ரதாயத்தில் எள்ளளவும் விப்ரதிபத்தியுடையவரல்லர். ஜ்ஞானலவதுர்விதக்தர்களான சில பாமரர்களைப்போல் அஸப்யமாகப் பேசுவதையோ எழுதுவதையோ இளமை தொடங்கியே இறையேனுமறியாதவர். *அஹம் வேத்மி மஹாத்மாநம்* என்கிற முறையிலே இதை ஹார்த்தமாக விஜ்ஞாபிக்கிறேன். அப்படிப்பட்ட மஹானுடைய நியமனங்கொண்டு நடைபெறுகின்ற பத்ரிகையில், சர்ச்சைக்கு ஈஷத்தும் நிற்கமாட்டாத விஷயங்கள் தலைகாட்டுவது தகாதென்பதையும், கார்யதரிசிகளுக்குக் கடுமையான கட்டளை பிறப்பித்தருளவேணுமென்பதையும் ஸாஞ்ஜலிபந்தம் விஜ்ஞாபயே. இதை ஆண்டவன் ஸன்னிதிக்கு நேராகவும் விஜ்ஞாபித்திருக்கிறேன்.

'அஸம்ப்ரதிபந்நமாக ஒன்றும் எழுதவில்லை, ஸம்ப்ரதிபந்நமானதுதான் எழுதப்பட்டுள்ளது' என்று ஸாதிக்கத் திருவுள்ளமாகில்......தழை நல்லவின்பந்தலைப் பெய்தெங்குந் தழைக்குமே. ... ... ...



# உண்மை ஸ்ரீ வைஷ்ணவர்

ஸ்ரீ வைஷ்ணவர்களைப் பற்றிப் பேசவந்த சாஸ்த்ரங்கள் பலவும் பல முகமாகப் பேசியுள்ளன. "யே கண்டலக்நதுலஸீநளிநாக்ஷமாலா: யே பாஹுமூலபரிசிஹ்நித சங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா: தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி" என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்ததேயாகும். ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இருக்க வேண்டிய வெளி வேஷங்களை மட்டும் இந்தச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்தக்கரணத்தில் இருக்கவேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற ச்லோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மிக மலிந்து கிடக்கின்றன. அவற்றையும் கேளீர்.

பகவத் கீதையில் பத்தாவது அத்தியாயத்தில் (ச்லோ. 5) "அஹிம்ஸா ஸமதா" என்ற விடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளாநின்ற நமது பாஷ்யகாரர், "ஸமதா— ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்" என்று உரைத்தருளினர். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் நிகமாந்த மஹாகுரு *ஸமமதி ராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே— இதி பகவத்பராசரவசந மிஹ தத்தத்பதை: ஸ்மாரிதம்* என்றருளிச் செய்தார். ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் (3-7-20) *நசலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதி ராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சை: ஸிதமநஸம் தமவேஹி விஷ்ணுபக்தம்* என்றுள்ள சுலோக ரத்நமே இங்கு எடுத்துக் காட்டப்பட்டதாயிற்று. இதில் *ஸமமதிராத்மஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே* என்கிற இரண்டாவது பாதம் முக்கியமாகக் கணிசிக்கத் தக்கது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகை பாராட்டுமவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியை யுடையவனாயிருப்பவன் எவனோ அவனே ஸ்ரீ வைஷ்ணவன் என்று இதனால் தெரிவிக்கப்படுகின்றது.

இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டு வருகின்றோமத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக் காண முடியுமோ என்று பார்த்தால் முடியாதென்றே முடிவுகட்ட வேண்டியதாகும்.

முற்காலத்தில் பட்டர் நஞ்சீயர் பிள்ளை போல்வாருடைய சில இதிஹாஸங்களை நாம் கேட்கும் போதும் புத்தகங்களில் வாசிக்கும் போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமா!' என்று அதிசங்கிக்குமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர 'நாமும் அந்த நடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயலவேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும்.

ஸ்ரீவசநபூஷணத்தில் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்றவிடத்து ஜநந்யாசாரியருடைய வியாக்கியானமான ஆய்ப்படியில்—"பட்டர் ஒருநாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணுகிற்க, சிலர் செவிபொறுக்கவொண்ணாத பருஷோக்திகள் பண்ணக் கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப் பார்த்து, இவர்கள் பருஷித்ததுக்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று;

நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றக் கொடுத்தேனத்தனை........ என்றருளிச் செய்தார் '' என்று காண்கிறது. பட்டர் தம்மை தூஷித்தவர்களுக்கு பூஷண தாநமும் பீதாம்பர தாநமும் செய்தருளியதாக இங்ஙனே இதிஹாஸம் காண்கிறோம். இதை யெல்லாம் நாம் பிறர்க்கு எடுத்துரைக்கும் போது கல்லும் கரையும்படி உரைக்கின்றோம்; கேட்பவர்களும் கண்ணுங்கண்ணீருமா யிருந்து புளகாஞ்சிதராய்க் கேட்கிறார்கள். ஆனால் அவரவர்களுடைய அநுஷ்டானம் எங்ஙனேயிராநின்றதென்று பார்த்தால் வாய்திறக்க வழியேயில்லை.

நமக்கு நைச்யாநுஸந்தாநம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் "நீசனேன் நிறை யொன்றுமிலேன்" என்றும் "சீலமில்லாச் சிறியன்" என்றும் பலவாறு பாசுரங்களையும் ச்லோகங்களையும் முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக்கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளி வந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்துரைக்கத் தொடங்கினால் 'என்னையா நீசனெனென்கிறாய்? என்னையா நிறையொன்றுமில்லாதவ னென்கிறாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்கிறாய்? பாவீ! நீயன்றோ இப்படிப் பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம்தம் அனுபவத்தில் இதை நிச்சய மாகக் காணலாம்.

சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந்! ஸ்ரீபாத தீர்த்தம் ஸாதிக்க வேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் 'ஐயோ அடியேனுக்கென்ன யோக்யதையுண்டு? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பலபடியாக நிகர்ஷாநுஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ள வாறு செய்கிறபடியா? அல்லது இங்ஙனே சொல்லிக்கொள்ளவேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா? என்று நாம் யோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்துகொள்ள முடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டினவிடத்தும், (அதாவது நீர் மிகவும் அயோக்கியர் என்று பிறர் சொன்னவிடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பார்களாயின் அப்போதுதான் அவர்களுடைய நைச்யாநு ஸந்தானத்தை நாம் ஸஹ்ருதய மென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர:' என்று நைச்யாநு ஸந்தானம் பண்ணு மவர்கள் "த்வம் அமர்யாத:, த்வம் க்ஷுத்ர:" என்கிற பரோக்திகளை உகந்திருக்கிறார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙனமிருந் தார்கள் என்றுதான் சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதிஸத்காரம் செய்யப் புறப்படுமவர்கள் தாங்கள் செய்துகொள்ளும் நிகர்ஷாநுஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

"ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு" என்று பிரஸங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கையோங்கும்போதே என்ன நடக்குமென்பதைக் கூறவேணுமோ நாம்?

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்றுகூட இராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று கால்மணிகாலம் சொல்லி முடிப்பர்கள். இதே வார்த்தையை அவர் அயலார் வாயில் கேட்பராகில் கோபாவேசங்கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று "எனக்கா ஒன்றும் தெரியாது, நானு தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்" என்று ஆரம்பித்து (அவரே) ப்ரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக் காண்கின்றோம். ஆசார்ய பீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களேயல்லது, தம்மைப்பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர் களாக இல்லையே? அப்படிப்பட்டவர்களன்றோ ஸ்ரீவைஷ்ணவத்வ பூர்த்தியுடையவராவர்.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீ வைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. *ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம ப்ராஹ்மண்யம்* [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ் மண்யம்] என்று சொல்லுவதுபோல, *வைஷ்ணவ்யாம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம்* [ஸ்ரீ வைஷ்ணவ யோனியில் பிறப்பதே ஸ்ரீ வைஷ்ணவத்வம்] என்று சொல்ல ப்ராப்தமாகிறது. அப்படிப்பட்ட ஸ்ரீ வைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்கவேண்டியது நமது கடமையேயாகும். ... ❃

# ராமாநுஜத்வயம்செய்த காளியமர்த்தனம்.

*ஹே ராமாநுஜ! ஹே ஜகத்த்ரயகுரோ! ஹே புண்டரீகாக்ஷ! மாம் ஹே கோபீ ஜநநாத! பாலய பரம் ஜாநாமி ந த்வாம் விநா* என்ற முகுந்தமாலை சுலோகத்தில் ராமாநுஜ னென்றழைக்கப்பட்ட கண்ணபிரானும் அவனுடைய திருநாமத்தைக்கொண்ட எம்பெருமானாரும் இங்கு ராமாநுஜத்வயமாகக் கருதப்பட்டது. கண்ணபிரானுடைய சேஷ்டிதங்களுள் காளியமர்த்தனமுமொன்று; அதனை எம்பெருமானார் தாமும் செய்தருளி யிருக்கிறாரென்பது ஈண்டு நிரூபிக்கப்படுகிறது.

யமுனையாற்றில் ஓர் மடுவிலிருந்துகொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினி யினால் கொதிப்படைந்த நீருள்ளதாக்கிப் பெருங்கேடு விளைத்த காளியனென்னுங் கொடிய நாகத்தைக் கண்ணபிரான் கொழுப்படக்கினனென்பது காளியமர்த்தன வரலாறு. இவ்வரலாற்றை வேதாந்தவாசிரியர் யாதவாப்யுதயத்தில் கூறுமிடத்து நான்காவது ஸர்க்கத்தில் (ச்லோ. 125.) *விவிதமுநிஜநோப ஜீவ்ய தீர்த்தா விசமித ஸர்ப்பகணா பரேண பும்ஸா, அபஜத யமுநா விசுத்திமர்யாம் சமித பஹிர்மத ஸம்ப்லவா த்ரயீவ* என்கிற ச்லோகத்தினால் கூறினர். ஆசார்ய ஸார்வபௌமரான ஸ்வாமி ராமாநுஜர் செய்தருளின செயலையே கண்ணபிரான் செய்த செயலுக்கு உவமையாகக் காட்டியுள்ளார். எங்ஙனே யென்னில், ஐந்தலைவாய் நாகமாகிய காளியன் யமுனையாற்றைக் கலக்கிக் கெடுத்ததானது— விஷவாக்குக்களான புறமதத்தவர்கள் மனம்போனபடியெல்லாம் கூறும் தவறான பொருள்களாலே வேதங்களைக் கெடுத்தபடியாம். அந்தக் கெடுதியைக் கண்ணபிரான்

நீக்கி எமுனையை எல்லாரும் இனிமையாகப் பருகும்படி செய்ததானது—ஸ்வாமி ராமாநுஜர், பிறர் கூறின தவறான பொருள்களை யகற்றி நல்ல பொருள்களை வெளியிட்டு வேதத்தை ஸத்துக்களுக்கு உபஜீவ்யமாக ஆக்கினபடியாம். யமுனையாற்றின் ஸ்தானத்தில் வேதம் கொள்ளப்பட்டது; காளியன் ஸ்தாநத்தில் குதர்க்கவாதிகள் கொள்ளப் பட்டார்கள்; கண்ணனுடைய ஸ்தானத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் கொள்ளப்பட்டார். *தூய பெருநீர் யமுனைத் துறைவனை* என்னும்படி யமுனையாறு இடையறாத பகவத் ஸம்பந்தத்தை யுடையதாயிருந்ததுபோல, வேதமும் பகவத் ஸம்பந்தத்தை நியதமாக வுடையதாயிருக்கையாலே வேதத்தை யமுனையாற்றின் ஸ்தானத்தில் கொள்வது பொருந்தும். குதர்க்கவாதிகளை காளியன் ஸ்தானத்தில் கொள்வதற்கான பொருத்தம் இனி உபபாதிக்கப்படுகிறது.

காளியன் ஐந்து தலைகளாலும் நஞ்சை உமிழ்ந்து நாசத்தை விளைத்தானென்று புராணங்கூறும். அப்படியே குதர்க்கவாதிகளும் ஐந்துவிதமான துர்வாதங்களாலே பரமார்த்த நாசத்தை விளைவிக்கின்றனர். எங்ஙனேயென்னில்;

1. ஈச்வரனென்று ஒருவனைக் கொள்வது கூடாது; ஈச்வரனேயில்லை—என்பது ஒரு குத்ஸிதவாதம். நிரீச்வரவாதிகளென்று ப்ரஸித்தமே.

2. ஈச்வரனுளனென்று இசைந்தாலும் அவன் அநுமாநத்தினால் ஸித்திப்பவனே யன்றி சாஸ்திரத்தால் ஸித்திப்பவனல்லன் என்பது மற்றொரு குத்ஸிதவாதம்.

3. சாஸ்திரங்களைக்கொண்டே ஈச்வரனை அங்கீகரித்தும் அவனுக்குக் குணங் களும் விக்ரஹமும் இல்லையென்று வாதித்தல் வேறொரு குத்ஸிதவாதம்.

4. ஈச்வரன் ஒருவனே யென்பதில்லை, பலபல ஈச்வரர்களுளரென்று பல தெய்வங் களுக்கு ஈச்வரத்வம் காட்டி வாதித்தல் இன்னுமொரு குத்ஸிதவாதம்.

5. பிரபஞ்சமே கிடையாது. எல்லாம் சூனியம் என்று ஸர்வ சூன்யவாதம் பண்ணுகை ஸர்வோத்துங்கமான குத்ஸிதவாதம்.

ஆக இப்படிப்பட்ட ஐவகையான அபார்த்த வாதங்களினால் வேதத்தைக் கெடுத்த குதர்க்கவாதிகள் காளிய ஸ்தானத்திலே கொள்ளப்படுவது பொருந்தும். இக்கெடுதல்களையெல்லாம் நம் ஆசார்ய ஸார்வபௌமர் ஸதர்த்த நிரூபணங்களினாலே போக்கியருளினர்.

இங்கே மற்றொரு விசேஷமும் காணலாம். *வாய்த்த காளியன்மேல் நடமாடிய கூத்தனார்* என்று சூடிக்கொடுத்த சுடர்க்கொடி பணித்தபடி காளியன் தலையிலே கண்ணபிரான் அடியிட்டு நடனம் புரிந்தாப்போல, ஸ்வாமி யெம்பெருமானாருடைய ஸம்பந்த ஸம்பந்தமுடைய நாம் *நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர் தலைகள் மீதே* என்று திருமாலை முதற்பாசுரத்தில் தொண்டரடிப்பொடி யாழ்வாரருளிச்செய்த கணக்கிலே யமகிங்கரர்களின் தலையிலே அடியிட்டுக் கூத்தாடப் பெறுவோம். "ததங்யமத துர்மதஜ்வலிதசேதஸாம் வாதிநாம் சிரஸ்ஸு நிஹிதம் மயா பத மதக்ஷிணம் லக்ஷ்யதாம்" என்ற யதிராஜஸப்ததி ஸூக்தியின்படியுமாகும். ... ...

# நம்மாழ்வாருடைய அந்யாபதேசப் பாசுரங்கள்

நம்மாழ்வாரருளிச் செய்த நான்கு திவ்யப் பிரபந்தங்களுள் திருவாசிரியத்திலும் பெரிய திருவந்தாதியிலும் அந்யாபதேசப் பாசுரம் கிடையாது. அவருடைய பிரதமப் பிரபந்தமான திருவிருத்தத்திலும் சரமப் பிரபந்தமான திருவாய்மொழியிலும் அவை மலிந்துள்ளன. தாமான தன்மையிற்பேசாமல் தலைமகள் பேச்சாகவும் தாய் பேச்சாகவும் தோழி பேச்சாகவும் பேசுவன அந்யாபதேசப் பாசுரங்களாம். திருவிருத்தத்திலுள்ள அந்யாபதேசப் பாசுரங்களைப்பற்றி மற்றொருகால் ஆராய்ச்சி செய்வோம். திருவாய் மொழியிலுள்ள அந்யாபதேசப் பாசுரங்களைப்பற்றி இப்போது ஆராய்ச்சி செய்ய எழுகின்றோம். தலைமகள் பேச்சாக நிகழ்ந்த பதிகங்கள் பதினேழென்று கணக்கிடுகின்ற ஆசார்ய ஹ்ருதய திவ்ய க்ரந்தம் (134.) *ஸகி வெறிவிலக்கி* இத்யாதி சூர்ணையில் "புத்ரீ பலகால் ஆள்விட்டு" என்று தூதுவிடும் பதிகங்களை முந்துறமுன்னம் எடுத்துக்காட்டியிருக்கையாலே அந்த நான்கு பதிகங்களின் ப்ரமேயத்தை முன்னம் விளக்கப் புகுகின்றேன்.

முதல் தன்னிலே முக்கியமாக விமர்சிக்கவேண்டியதொன்றுண்டு; ஆழ்வாரால் தூதுவிடப்படுகின்றவர்கள் யாவரென்று பார்க்கில், மேகம் வண்டு குயில் மயில் அன்றில் நாரை கொக்கு குருகு கிளி பூவை என்னுமிவையே யென்பது ஸ்பஷ்டம். கரணபாடவமில்லாத விவற்றை மஹா விவேகியான ஆழ்வார் தூது விடலாமோ வென்கிற சங்கை தோன்றக் கூடியது. இதைப்பற்றிச் சிறிது கேண்மின். காளிதாஸ மகாகவி மேக ஸந்தேச மென்றொரு காவியமியற்றினர். குபேர சாபத்தினால் மண்ணுலகம் வந்து சேர்ந்த ஒரு யக்ஷன் தன்னுடைய காதலிக்குச் செய்தி சொல்லியனுப்ப மேகத்தைத் தூது விடுவதாகக் கதை அமைக்கப்பட்டது. அதில் "தூம ஜ்யோதிஸ் ஸலில மருதாம்" இத்யாதி ச்லோகத்தில் கவிதானே ஒரு சங்கையைக் கிளப்பி சங்காபரிஹாரமும் தானே செய்து முடித்தான். புகை சோதி நீர் காற்று இவற்றின் கூட்டரவு தானே மேகமென்பது; இதனால் என்ன செய்தி அறிவிக்க முடியும்? கை கால் வாய் முதலானவுறுப்புகள் செவ்வனே யிருந்தாலொழியத் தூது செல்லவோ தூது சொல்லவோ முடியாதே; இது அந்த யக்ஷனுக்குத் தெரியாதா? என்று சங்கை. காமாதுரனும் விவேகத்தையிழந்து தூது விட்டான் என்று ஸமாதானம்.

ஆழ்வார் இங்ஙனே அவிவேகத்தினால் தூதுவிட்டபடியன்று. மருமத்தை ஆழ்வார் தாமே வாய்விட்டு வெளியிட்டுள்ளார். திருவிருத்தத்தில் (54) *வீசுஞ்சிறகால் பறத்திர், விண்ணாடும் நுங்கட்கெளிது, பேசும்படி அன்னபேசியும் போவது, நெய்தொடுவுண்டேசும்படி அன்னசெய்யுமெம் மீசர் விண்ணோர் பிரானார்மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே* என்கிற பாசுரம் வண்டுவிடு தூது. இதில் "விண்ணோர் பிரானாரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும்" என்று வண்டுகளுக்கிட்ட அடைமொழியினால் சங்கையுதிக்க இடமறுக்கப்பட்டதாயிற்று. இந்தப் பாசுரத்தையும், *உபாப்யாமேவ பக்ஷாப்யாம் ஆகாசே பக்ஷிணாம் கதி:, ததைவ ஜ்ஞாநகர்மப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம:* என்கிற சுலோகத்தையும் அடியொற்றி ஆசார்ய ஹ்ருதயத்தில் "சேர்ப்பாரைப் பக்ஷிகளாக்கி ஜ்ஞான கர்மங்களைச் சிறகென்று குரு ஸப்ரஹ்மசாரி புத்ரசிஷ்ய

ஸ்தாநே பேசும்" என்கிற சூர்ணை அவதரித்தது. அதற்கு மேலுள்ள சூர்ணைகளில் இதற்குச் சேர அற்புதமான நிருபணங்கள் வியாக்கியானங்கொண்டே உணரத்தக்கன.

பூருவர்களில் ஒரு ஸ்வாமி விநோதமாகப் பணித்தாராம்—"கையுங்காலுங் கொண்டு அறியலாமே" என்று. எதையறியலாம்? தூது விடப்படும் பக்ஷிகளின் உண்மையறியலாம். கையுங்காலுங்கொண்டு அறிவதாவதென்னென்னில்; இரண்டாவது தூது பதிகமான *வைகல்பூங்கழிவாயில் "குருகினங்காள்!* என்று விளித்து "கைகள் கூப்பிச் சொல்லீர் வினையாட்டியேன் காதன்மையே" என்றும் "புணர்த்தகையினராய் அடியேனுக்கும் போற்றுமினே" என்றும் அருளிச் செய்துள்ளார். பறவைகளுக்குக் கை கிடையாதென்பது தெரிந்திருக்கச் செய்தேயும் *கைகள் கூப்பி* என்றும் *புணர்த்த கையினராய்* என்றும் பணித்திருப்பது கொண்டு அறியலாமன்றோ. மேலே கடைத் தூதாகிய *எங்கானல்கங்கழிவாயில் *செங்காலமட நாராய்! * என்று விளித்து "நுங்கால் களென்தலைமேல் கெழுமீரோ நுமரோடே" என்று அநுபந்திகளோடுங்கூடத் திருவடி களைத் தமது தலைமீது வைத்திடுமாறு வேண்டியிருத்தலால் "வாழ்த்துவார்தம் மலரடி யென் சென்னிக்குமலர்ந்த பூவே" என்ன நின்ற மஹநீயர்களே தூதர்களாக விவக்ஷிதர்களென்பது எளிதாகத் தெரியுமன்றோ—என்பது அந்த ஸ்வாமியின் ஆழ்ந்த திருவுள்ளம். இனி, தூது பதிகங்களிலுள்ள விசேஷங்களை விளக்குவோம்.

திருவாய்மொழியில் தூதுவிடும் பதிகங்கள் நான்கென்று கூறினோம். அவை யாவன—முதற்பத்தில் *அஞ்சிறையமடநாரை. ஆறும்பத்தில் *வைகல் பூங்கழிவாயும் *பொன்னுலகாளீரும். ஒன்பதாம்பத்தில் *எங்கானலகங்கழிவாய். ஆக இந்த நான்கு பதிகங்களிலும் தூதுவிடுகிறது பொதுவாக எம்பெருமானைக் குறித்தேயாகிலும், பாசுரங் களிலே உட்புகுந்து ஆராயுங்கால் சில விசேஷங்கள் தெரியும். (அதாவது)—எம்பெரு மான் பரவ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரரூபேண ஐவகைப்பட்டிருக்கையாலே அந்த ஐந்து நிலைமைகளிலும் தூதுவிடுகிறாரென்பது சொற்போக்கில் காணக்கிடக்கின்றது.

(1) *அஞ்சிறையமடநாரையில் *கடலாழி நீர் தோற்றி அதனுள்ளே கண் வளரு மடலாழியம்மானைக் கண்டக்காலிது சொல்லி* என்று அருளிச் செய்கையாலே அப்பதிகம் வ்யூஹநிலையில் தூதுவிடுவதாகும். *கடலாழி நீர் தோற்றி அதனுள்ளே கண் வளருகை தானே வ்யூஹாவஸ்தை யென்பது.

(2) இனி *வைகல்பூங்கழிவாயில் *மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்று உகந்த ஏறு சேவகனார்க்கு* என்று இலங்கையெரித்த இராமபிரானிடம் செல்லும்படி தூது விடுகையாலே அப்பதிகம் விபவாவதாரத்தில் தூதுவிடுவதாகும். ராமாவதாரம் விபவாவ தாரங்களுள் ஒன்றுதலால். இப்பதிகம் மலைநாட்டிலுள்ள திருவண்வண்டூர்த் திருப்பதி விஷயமாகையாலே இது அர்ச்சாவதாரத்தில் தூதுவிடுகிறபடியல்லவோ வென்று சங்கிக்க வேண்டா; மேலே யெடுத்துக்காட்டிய பாசுரத்தின் பண்பு நோக்கி 'இது விபவாவ தாரத்தில் விடும் தூது' என்கை மிகப் பொருந்தும்.

(3) *பொன்னுலகாளீரில் பரத்வத்திலும் அந்தர்யாமித்வத்திலும் தூது விடப் படுவதாக விளங்குகின்றது. இப்பதிகத்தில் *மாமதுவார் தண்டுழாய்முடி 'வானவர்

கோனைக் கண்டு, யாமிதுவோ தக்கவாறென்ன வேண்டும்* என்கிறார். வானவர்கோன்—பரமபதநிலயனை பரவாஸுதேவனுகையாலே அவன்பால் தூதுவிடுவதென்பது விளங்கிற்று. இப்பதிகந்தன்னிலேயே *எங்குச் சென்றாகிலுங்கண்டு இதுவோ தக்கவாறென்மினே* என்னும் பாசுரமுள்ளது, அப்பெருமான் எங்கேனும் தன்னை யொளித்துக்கொண்டு கிடந்தாலும் அங்கும் புகுந்து சொல்லுமாறு தூதுவிடப்படுகையாலே அந்தர்யாமித்வத்தில்தூதும் இப்பதிகத்திலேயே காணலாயிராநின்றது.

(4) இனி *எங்கானலகங்கழிவாயென்னும் பதிகத்தில் *திருமூழிக்களத்தார்க்கே* என்று திருமூழிக்களமென்கிற திருப்பதியில் தூதுவிடுகையாலே இப்பதிகம் அர்ச்சாவதாரத்தில் தூதுவிடுவதாகும். ஆக, தூதுவிடும் பதிகங்கள் நான்குக்கும் எம்பெருமானுடைய பர வ்யூஹ விபவாந்தர்யாமி அர்ச்சாவதார நிலைகள் ஐந்தும் விஷயமென்பது விளக்கப்பட்டது.

ஓரிடத்தில் தூது விட்டுக் காரியமாகவில்லையென்றால் மற்றோரிடத்தில் தூது விடுவது எதற்காக? என்றொரு கேள்வி பிறக்கும். எம்பெருமான் அனந்த கல்யாண குணநிதியாகையாலே, ஒருகுணம் கார்யகரமாகாவிட்டால் மற்றொருகுணம் பலிக்கப் பெறலாமே; அக்குணமும் விபலமானால் வேறொரு குணம் பயன் பெறுவிக்கத் தகுமே என்கிற நசை ஸம்பாவிதமாகையால் பலகால் தூதுவிடத் தகும். தூதுவிடும் பதிகமொவ்வொன்றுக்கும் ஒவ்வொரு திருக்குணத்தை விளங்கச் செய்வதிலே நோக்காயிருக்குமென்றதாயிற்று. இதனை அடைவே விவரிப்போம்.

(1) முதல் தூதாகிய *அஞ்சிறையமடநாரையில் *என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு* என்று எம்பெருமானைக் கேட்குமாறு சொல்லியனுப்புகையாலே அப்பெருமானுடைய க்ஷமாகுணத்தைப் பற்றாசாகக் கொண்டு இத்தூது விடுவதாக விளங்குகின்றது. மேலெடுத்த பாசுரத்தின் கருத்தாவது [திருவடியின் தகவினுக்கு என் பிழைத்தாள்] ஸ்வாமியான தேவரீருடைய கருணைக்குப் போதும்படி என்ன பிழை செய்தாள்? என்றவாறு. உண்மையில் தான் பிழை செய்தது உண்டாகிலும் எம்பெருமானது பொறுமையின் பெருமையைக் காணுமிடத்து 'அதன் வயிறு நிறையுமாறு நாம் பிழை செய்யவில்லையே, நாம் செய்த பிழை அக்குணத்திற்கு எந்த மூலைக்கு? அதன் வயிற்றிற்கு ஒரு கவளத்திற்கும் போதாதே' என்று நினைக்கவேண்டும்படியாக இருத்தலால் இங்ஙனஞ் சொல்லக் குறையில்லை யென்க. இங்கே ஈடுமுப்பத்தாறுயிரப்படி ஸ்ரீ ஸூக்தி காண்மின்;—"என் குற்றத்தைப் பார்த்து தமிக்க நினைத்தாராகில், .......... ஸ்வாமிகளான தம் பொறை வயிறு நிறைய எங்களால் குற்றஞ்செய்யப் போமோ? என்னுங்கோள்" என்பதாம். எத்தனை பிழைகள் செய்திருந்தாலும் ஒரு நொடிப் பொழுதில் அவற்றைக் கபளீகரிக்கவல்ல திருக்குணம் அப்பெருமான் பக்கலில் இருக்க, பிழையென்று வாய்திறக்கவும் வழியுண்டோவென்று கருத்து.

ஸ்ரீ ராமபிரான் வாலியை வதைத்து ஸுக்ரீவ மஹாராஜர்க்கு முடிசூட்டிக் கிஷ்கிந்தைக்குப் போகவிட்டு வர்ஷாகாலம் முடிந்தவாறே இலங்கைக்குப் புறப்படப் படை திரட்டிக்கொண்டு வருமாறு நியமித்துவிட்டுத் தானும் மால்யவானிலே கலங்

கழியாநிற்க, நாளடைவிலே மாரிகாலமும் முடிந்தும் ஸுக்ரீவன் காமபரவசனாய்க் கிடந்து வாராதேயிருக்க. பெருமாள் சீறிச்சிவந்து இளையபெருமாளையனுப்பி நாணொலியெழுப்பி அச்சமுறுத்த, அப்போது தாரை எழுந்துவந்து கேட்கிறாள்—*கிம் கோப மூலம் மநுஜேந்த்ரபுத்ர!* என்கிறாள். இங்ஙனே சீறிவருவதற்குக் காரணமென்? என்பது இவளுடைய கேள்வி. கோபத்திற்குக் காரணம் தெரியாமையில்லையே யிவளுக்கு; நன்றாகத் தெரிந்திருந்தும் *கிம் கோபமூலம்? என்றதன் கருத்து என்னவென்னில்; உங்களுடைய க்ஷமாகுணத்தை நம்பியன்றோ நாங்கள் பராக்காயிருந்தது, அப்படி விச்வஸிக்கத்தக்க க்ஷமையையுடையீர்களான நீங்கள் சீறலாமோ? என்பதன்றோ தாரையின் கேள்விக்குக் கருத்து. அதுபோலவே இங்குமென்க. ஆக முதல் தூதில் *என் பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு* என்கிற பாசுரம் உயிராகக் கொள்ளப்பட்டு, க்ஷமா குணம் பற்றாசாக விடுவது இந்தத் தூது என்று தேறிற்று. க்ஷமா குணத்தை அவனுக்கு நினைப்பூட்டுமாறு தூதுவிடப்பட்டதென்க.

இதற்குமேல் ஒரு கேள்வி பிறக்கும்; க்ஷமாகுணம் தனக்குள்ள தென்பதை எம்பெருமான்றான் அறியானோ? இத்தலை நினைப்பூட்டவேண்டிய அவசியம் என்கொல்? என்று. இக்கேள்விக்கு ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியிலிருந்தே நன்கு ஸமாதானம் கிடைக்கின்றது. *என்பிழைத்தாள் திருவடியின் தகவினுக்கு* என்றதற்கு முன்னே *என் பிழையே நினைந்தருளி அருளாத திருமாலார்க்கு* என்றிருக்கையாலே, தம்முடைய பிழைகள் அப்பெருமானுடைய க்ஷமா குணத்தை மறப்பித்ததாகத் தெரிவித்தவாறு. ஆகவே அக்குணத்தை நினைப்பூட்ட வேண்டுவது அவசியமாயிற்று. [என்பிழையே நினைந்தருளி] எனது பிழைகளை மாத்திரம் நினைந்தாரேயல்லது பிழை பொறுக்கவல்ல தமது க்ஷமாகுணத்தை நினைந்தாரில்லையே; அதனை மறந்தாப்போலே எனது பிழைகளையும் மறக்கலாகாதோ? என்னுங்கோளென்கிறாள். [அருளாத திருமாலார்க்கு] பிழையுடையார் பக்கலிலே அருள் செய்யாவிடின் இவர் எங்ஙனம் திருமாலாக இருக்கமுடியும்? அநுக்ரஹமே வடிவெடுத்தவளென்றும் நிக்ரஹமென்பதைக் கனவிலும் கண்டறியாதவளென்றும் புகழ்பெற்றவளான பிராட்டிக்கு அவர் மணவாளராகில் அவளது உபதேசத்தின்படி நடக்கவேண்டியவரன்றோ; *ந கச்சிந் நாபராத்யதி=பிழை செய்யாதவனே உலகில் இல்லை* என்று நிரூபிக்கின்ற பிராட்டியோடே அவர்தாம் ஸம்பந்தம் பெற்று வைத்து இங்ஙனே பிழை கண்டு உபேக்ஷித்தல் தகுதியோ? இத்தன்மையைப் பிராட்டியறிந்தாளாகில் அவள் தானும் உமது முகத்திலே விழியாள் என்று சொல்லுங்கோள்—என்றிவ்வளவும் *அருளாத திருமாலார்க்கு* என்ற சொற்செறிவிலே அடங்கும்.

(2) இரண்டாந்தூதாகிய *வைகல் பூங்கழிவாயில் *புணர்த்தபூந்தண்டுழாய்முடி நம்பெருமானைக்கண்டு புணர்த்த கையினராய் அடியேனுக்கும் போற்றுமினே*. என்பது உயிரான பாசுரம். எம்பெருமான் திருமுடியில் தனிமாலையிட்டிருப்பது தாம் ஆர்த்த ரக்ஷண தீக்ஷிதர் என்பதைக் காட்டுதற்காகவேயன்றோ; அன்றாகில் திருவபிஷேகத்திலே அவர் வளையம் வைக்கவேணுமோ? ஸ்வாமிந்! தேவரீர் ஆர்த்தரக்ஷண தீக்ஷிதராயிருந்து வைத்து ஆர்த்தியே வடிவெடுத்த பராங்குச நாயகியை இப்படி உபேக்ஷித்திருத்தல் தகுதியோவென்று கேளுங்கோள் என்று சொல்லித் தூதுவிடுகையாலே, அப்பெருமா

னுடைய ஆர்த்தரக்ஷண தீக்ஷிதத்வமென்னும் குணத்தைப் பற்றுசாகக்கொண்டு இந்தத் தூதுவிடுவதாக விளங்குகின்றது. அன்றியும் இப்பதிகத்தில் *கைகொள் சக்கரத்தென் கனிவாய்ப் பெருமானைக்கண்டு கைகள் கூப்பிச் சொல்லீர்* என்றும் *கறங்குசக்கரக் கைக் கனிவாய்ப் பெருமானைக்கண்டு இறங்கிநீர் தொழுதுபணியீர்* என்றும் *சொல்லுகையாலே *அருளார் திருச் சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்* என்கிற திருவிருத்தப் பாசுரத்தின்படியே திருவாழியாழ்வானும் ஜகத்ரக்ஷண தீக்ஷிதனுகையாலே அந்தப் பாசுரங்கள் கொண்டும் எம்பெருமானுடைய ரக்ஷண திக்ஷையை நினைப்பூட்டித் தூதுவிடுகிறதாகவுங் கொள்ளலாம். இயற்கையாகவே ரக்ஷா தீக்ஷிதனுயிருக்குமவன் தனக்கு அஸாதாரணமான அக்குணத்தை மறந்திடுவனோ? அதை நினைப்பூட்டவேண்டிய அவசியம் என்கொல்? என்று கேள்விபிறக்கும்; இக்கேள்விக்கும் ஆழ்வார் ஸ்ரீஸூக்தியிலிருந்தே ஸமாதானம் கிடைக்கின்றது. சிறந்த செல்வம் மல்கு திருவண்வண்டூருறையும் என்றருளிச் செய்திருக்கையாலே திருவண்வண்டூரின் ஐச்வர்யச் சிறப்பைக் கண்டு கால்தாழ்ந்து தம்முடைய ரக்ஷாதீக்ஷையை மறந்திருப்பர் என்று தெரிவித்தவாறு. ஆர்த்தரக்ஷணதீக்ஷிதரான நீர் மற்றொன்றில் கால்தாழத்தகுமோ? என்று விண்ணப்பஞ் செய்யுங்கோள் என்று சொல்லித் தூதுவிடுகிறபடி. இப்பதிகத்தில் வேத வேள்வியொலி முழங்குந் தண் திருவண்வண்டூர்* என்றும் சொல்லுகையாலே, வேதவொலி கேட்பதிலும் வேள்வியொலி கேட்பதிலும் பராக்காலே தம்முடைய ரக்ஷாதீக்ஷையை மறந்திருப்பர்; வேதவொலியை நீர் கேட்கும்போதெல்லாம் அந்த வேதங்களில் முறை யிடப்படுகிற உம்முடைய ரக்ஷாதீக்ஷை உமக்கு நினைவுக்கு வரவில்லையா? அதை மறக்க விரகுண்டோவென்று கேளுங்கோள் என்கிறதாகவுமாம். *விடவில் வேதவொலி முழங்குந் தண்திருவண்வண்டூர்* என்ற பாசுரமும் இதற்குப் பாங்காகும்.

(3) மூன்றாந்தூதாகிய *பொன்னுலகாளீரோவென்கிற திருவாய்மொழியில் *தன் மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான்* என்கிற பாசுரம் உயிரானது. *தோளிணைமேலும் நன்மார்பின் மேலும் சுடர் முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மான்* என்கிறபடியே திருத்தோள் முதலான பல அவயவங் களிலும் அவர் திருத்துழாய் அணிந்துகொள்வர்; எதை ஆர்க்குக் கொடுத்தாலும் அடிமே லணிந்து கொள்ளுமது அடியார்களுக்கேயாகையாலே, திருவடிகளில் சாத்தின திருத்துழாயை நமக்கன்றி மற்றையோர்க்குத் தந்திடமாட்டார் என்று இங்கு அறிவிக்கப் படுகிறது. ஐகரஸ்யமென்கிற குணமிது. அதாவது, அடியார்களோடு ஏகரஸனுகை. சேஷியான தன்னுடைய ப்ரஸாதத்தை சேஷபூதர்களுக்குக் கொடுத்தேதீரவேணுமென்று கொண்டிருக்கைதான் இக்குணமாவது. இது பற்றுசாகத் தூதுவிடுகிறுரிதில். இக்குணத்தை நினைப்பூட்டவேண்டும்படி இதனை எம்பெருமான் மறந்தது எதனு லென்னில்; அக்காரணந்தன்னை ஆழ்வாரே அருளிச் செய்கிறுர் —*மூன்னுலகங்களெல்லாம் படைத்த முகில்வண்ணன் கண்ணன் என்னலங்கொண்ட பிரான் தனக்கு* என்று. தன்னுல் படைக்கப்பட்ட ஜகத்தின் பரப்பை ரக்ஷிக்கிற பராக்காலே அடியார்களோடு தனக்குண்டான ஐகரஸ்யத்தை மறந்து நம்மை நினையாதிருந்தானித்தனை என்று தெரிவித்த வாறு. ஆக, ஜகத்ரக்ஷணபராக்காலே மறப்பிக்கப்பட்ட ஐகரஸ்யம் பற்றுசாக விடப்பட்டது மூன்றாந்தூது என்றதாயிற்று.

(4) நான்காந்தூதாகிய *எங்கானலகங்கழிவாயில், *தக்கிலமே கேளீர்கள்—செக்கமலத்தலர்போலுங் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத்திலைபோலுந் திருமேனி யடிகளுக்கே* என்றும் *பூந்துழாய் முடியார்க்குப் பொன்னுழிக்கையாருக்கு* என்றும் ஸௌந்தரியம் பேசப்பட்டுத் தூதுவிடுகையாலே வடிவழகை யுணர்த்திவிட்ட தூது இது என்று தெரியவருகின்றது. பிரிந்தார்க்கு ப்ராணன் கொண்டிருக்கவொண்ணுதபடியான தன் வடிவழகை மறந்து நம்மை நினையாதிருந்தார் திருமூழிக்களத்தார்; இவ்வழகிய வடிவைப் பிரிந்தார் தரிப்பரோவென்று அவ்வழகையறிவித்துவிட்டால் வாராதிரார் என்று கொண்டு அதை யறிவிக்கிறபடி. தம் வடிவழகைத் தாம் அறியாரோ? இவருணர்த்த வேண்டும்படி மறந்திருக்கைக்குக் காரணமென்? என்னில்; இதுவும் அப்பதிகத்திலேயே ஆழ்வாரால் தெரிவிக்கப்பட்டது; *தமரோடங்குறைவார்க்கு* என்பதனுல்; தம்மையுகந்த பாகவதர்களோடு சேர்ந்து வாழ்கிற பெருமாளாகையாலே அந்த பாகவதர்களோடுண்டான சேர்த்தியில் இனிமையாலே தம் ஸௌந்தரியத்தை மறந்துகிடப்பதாகத் தெரிவிக்கப் பட்டது. ஆக, தமரோட்டை வாஸம் மறப்பித்த ஸௌந்தர்யத்தை யுணர்த்திவிடுவது நாலாந்தூது என்றதாயிற்று.

ஆக இவ்வளவு விஷயங்களும், "தம்பிழையுஞ் சிறந்தசெல்வமும் படைத்தபரப்பும் தமரோட்டை வாஸமும் மறப்பித்த க்ஷமா தீக்ஷா ஸாரஸ்ய ஸௌந்தர்யங்களையுணர்த்தும் வ்யூஹ விபவபரத்வத்வயார்ச்சைகள் தூதுநாலுக்கும் விஷயம்" என்ற ஆசார்யஹ்ருதய சூர்ணையில் (156) அற்புதமாக அடங்கியிருக்குமாறு காண்க.

தூதுவிடும் பிரகரணங்களில் இரண்டு வகையான விஷயங்கள் ஆராயத்தக்கவை யுண்டு; தூதுக்கு இலக்கான எம்பெருமானைப் பற்றியவைகளும், தூதனுப்பப்படுகிற பறவைகளின் விஷயங்களும். இவற்றில், எம்பெருமானைப்பற்றிய விஷயங்கள் இப்போது விவரிக்கப்பட்டன. பக்ஷிகளைப்பற்றின விஷயங்கள் உள்ளுறை பொருள் விளக்கில் அடியேனுல் விவரிக்கப்பட்டுள்ளன. அங்கே கண்டுகொள்வது ... ❁

---

# ஸுபாஷிதங்கள்

*அஜ்ஞ: ஸுகமாராத்ய: ஸுகதரமாராத்யதே விசேஷஜ்ஞ:,
ஜ்ஞாநலவதுர்விதக்தம் ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி.*

உலகத்திலுள்ள அதிகாரிகளை மூன்று வகையாகப் பிரிக்கலாம். (1) ஒன்றுமறியாத மூடர்கள். (2) எல்லாம் நன்கு தெரிந்த விசேஷ வித்துக்கள். (3) ஸ்வல்பம் தெரிந்து எல்லாம் தெரிந்துவிட்டதாக நினைத்துக் கொக்கரிக்குமவர்கள் என மூவகை. இவர்களுள், ஒன்றுமறியாத மூடர்களை எளிதில் தெளிவிக்கமுடியும். ஏனென்றால், அவர்கள் நல்லாரிடத்து நல்லது தெரிந்துகொள்ளவேணுமென்கிற விருப்பமுடையவர்களாதலால்.

இவர்களுக்கு மேற்பட்டவர்களான விசேஷ வித்துக்களை த்ருப்திபடுத்துவது மிகவும் எளிது. அவர்கள் பரம ரஸிகர்களாகையாலே அன்னவர்களோடு பேசுவது பரம ரஸமாயிருக்கும். சொல்லுகிற விஷயங்களை மிகவும் ரஸமாகவும் எளிதாகவும் அவர்கள் க்ரஹிக்க வல்லவர்களாதலால் அவர்களை ஆராதிப்பது மிகவெளிது.

மூன்ருமவர்களாகத் தெரிவிக்கப்பட்டவர்களுண்டே, அவர்களைத் தெளிவிக்க ப்ரஹ்மாவாலுமாகாது. எல்லாமறிந்ததாகப் பாவனைகொண்டு எதிலும் குதர்க்கம் செய்வதும், இன்னது சொல்லியிருக்கிறதென்று உணராமலே தூஷிப்பதும் அன்னவர் களது செயலாதலால் அவர்களுடைய வாழ்நாள் அப்படியே கழியவேண்டியதாகுமே யன்றி, தெளிவுபெற்றுக் களிக்க அவர்கள் பாக்கியமற்றவர்களே. ... ❀

*வாசாடோக்தௌ வாகம்ருதே வா ஸுகவீநாம்
ஸ்தோகப்ரஜ்ஞாஸ் துல்யத்ருசோ ஹந்த பவந்தி,
கோமாயூநாம் கோகிலயூநாமபி சப்தேஷு
ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணும்*

உலகத்தில், வீண் வம்பு பேசுகிற வாயாடிகளுமுண்டு, அமுதொழுகுகின்ற இன்சொற்களைப் பொழிகின்ற உண்மைப் பண்டிதர்களுமுண்டு. வாயாடிகளென்பவர்கள் சிறிதும் படிப்பில்லாமல் ஏதையாவது வாய்வந்தபடி பேசிக்கொண்டிருப்பதையே தொழி லாகவுடையவர்கள். ரஸிகர்கள் காதுகொடுத்துக் கேட்கும்படியான பேச்சு அவர்க ளிடத்தில் ஒன்றுமிராது. கசடறக் கற்றுணர்ந்தவர்களோ வென்னில்; அமுத மயமாகப் பேசி "கலையிலங்கு மொழியாளர்" என்னும்படி ஸகல சாஸ்த்ரார்த்தங்களும் ரமணீய மாகத் தொனிக்கும்படியான வாய்வீறு உடையவர்களாயிருப்பர்கள். இவ்விருவகைப் பட்டவர்களுடையவும் பேச்சுக்களை விவேகிகளான ரஸிகர்கள் கேட்டால், வாயாடி களின் பேச்சை வெறுத்து உண்மைப் பண்டிதர்களின் பேச்சை உவப்பர்கள். அறிவிலி களான அற்ப ஜனங்களோ வென்னில், பேச்சில் வாசி அறியமாட்டாமல் இரண்டிலும் ஒரு நிகராயிருப்பர்கள்.

இது என்போல வென்னில்; காட்டில் ஒருபுறத்தில் நரிகள் ஊளையிடுகின்றன; மற்றொருபுறத்தில் குயில்கள் பஞ்சமராகம் பாடுகின்றன; இவ்விரண்டு த்வனிகளும் எருமைக்கடாக்களின் காதிலே விழும்; விழுந்ததனுல் என்னுகும்? ஏதேனும் வாசி தெரியுமோ? அதுபோலவென்க. சொற்களில் ரஸமறிந்து உகப்பார் சிலரேயாவர். ... ❀

*ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம்
பாஸ்வாந் உதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜஸ்ரீ:,
இத்தம் விசிந்தயதி கோசகதே த்விரேபே
ஹா ஹந்த ஹந்த நளிநீம் கஜ உஜ்ஜஹார.*

காட்டில் ஒரு வண்டு; அது தாமரைப் பூவினுள் மதுவைப் பருகவேணுமென்னும் விருப்பத்துடன் ஒரு தாமரை யோடையில் ஒரு கமலத்தினுட்சென்று புக்குப் பருகத் தொடங்கிற்று; அப்பொழுது மாலைப் பொழுதாயிருந்தபடியால் இரவி மறைந்தவாறே அம்மலர் மூடிக்கொண்டது. எவ்வளவு பிரயாஸப்பட்டும் வண்டு வெளிக்கிளம்ப முடிய வில்லை. இரவு முழுவதும் அங்கேயே தங்கியிருக்க நேர்ந்தது. அது மனதில் எண்ணமிட்டுக் கொண்டிருந்ததாவது—'சிறிது பொறுத்துக்கொண்டு இங்கே யிருந்தோமாகில் இராப் பொழுது கழிந்திடப்போகிறது; கதிரவன் வந்து தோன்றப்போகிருன்; தாமரை மலரப் போகிறது; உடனே நாம் வெளியில் யதேஷ்டமாகத் திரிந்து களிக்கப்போகிறோம்'— என்று. இங்ஙனே எண்ணிக் கொண்டிருக்கும்போதே ஒரு காட்டானை வந்து

அவ்வோடையிற் புகுந்து அங்கிருந்த தாமரை மலர்கள் முழுவதையும் ஒரே கபளமாக வாரி விழுங்கிவிட்டது; இவ்வண்டும் அவ்வானையின் வயிற்றினுள்ளே ஜீர்ணித்துவிட்டது.

இதனால் இவ்வுலகில் நாமெல்லாரும் பலபலவாறு எண்ணமிட்டுக் கொண்டிருக்க, நம் எண்ணமெல்லாம் ஊமனுர் கண்ட கனவிலும் பழுதாயொழிய பகவத் ஸங்கல்பமே பலீயஸ்ஸாயிருக்குமென்று காட்டியவாறு. "அந்யோ ஹ்யந்யத் சிந்தயதி ஸ்வச்சந்தம் விததாம்யஹம்," என்று பகவான் தானும் பணித்துளன். ... ... ❀

*அங்குஷ்டாக்ரபரிணாஹ ஜிஹ்வாக்ராயாஸபீரவ:,
ஸர்வாங்கீணபரிக்லேசம் ஸஹந்தே ஹந்த ஸந்ததம்.*

கட்டை விரலின் நுனியளவான நாக்கின் நுனியை இளமையில் சிரமப்படுத்த அஞ்சியிருந்தவர்கள் தங்கள் வாழ்நாள் முழுதும் ஸகல அவயவங்களையும் சிரமப்படுத்தக் கடமைப்பட்டவர்களாவர். இதன் கருத்து யாதெனில், இளமையில் நாவைச் சிறிது சிரமப்படுத்திக் கல்வி பயன்றுவிட்டால் ஸுகமாக ஜீவனம் நடத்திக் கொள்ளலாம்; அங்ஙனம் கல்வி பயிலாதவர்கள் பிறகு ஜீவிகைக்காக ஸகல அவயவங்களினாலும் சிரமப்பட வேண்டியதாகும். தலையாலே மூட்டைகள் சுமந்தும், காலாலே வழி நடந்தும், கையாலே விறகு பிளத்தல் முதலியன செய்தும் ஆகவிப்படிப் பலபல அவயவங்களை சிரமப்படுத்தியே ஜீவிக்க நேரும். ஸ்வல்பகாலம் ஒரு அவயவத்தை சிரமப்படுத்தக் கூசுமவர்களுக்கு வாழ்நாள் உள்ளவரையில் இப்படி சிரமப்பட நேர்கின்றபடியால் கல்வி பயில முயல்வதே நன்று என்று தெரிவித்தவாறு. ... ... ... ❀

*சத்வாரோ தநதாயாதா: தர்மாக்நிந்ருபதஸ்கரா:,
ஜ்யேஷ்டபுத்ராவமாநேந த்ரய: குப்யந்தி ஸோதரா:*

பணத்திற்குப் பங்காளிகள் நான்கு பேர்கள்; 1. தருமம். 2. நெருப்பு, 3. அரசன். 4. கள்ளன். ஆக இந்த நால்வரும் பணத்தைக் கூறுகொண்டு அனுபவிக்கப் பிள்ளைக ளாகப் பிறந்தவர்கள். 'தஸ்மாத் ஜ்யேஷ்டம் புத்ரம் தநேந நிரவஸாயயந்தி" என்று வேதத்தில் சொல்லியபடி மூத்த புதல்வனுக்கு அதிகமான ப்ராப்தி உண்டாதலால் இங்கு மூத்த குமாரனுகச் சொல்லப்பட்ட தருமத்திற்கு அதிக பஹுமானம் அமையவேண்டும். அப்படியல்லாமல் அவனை அவமானம் செய்யுமளவில், மற்ற மூன்று ஸஹோதரர்களும் சீற்றங்கொள்வர்களாம். (அதாவது) செல்வத்திற்கு தர்ம விநியோகம் இல்லையானல் அக்நிநஷ்டமாகவும், அரசர்களால் அபஹ்ருதமாகவும், கள்ளர்களால் கவரப்பட்டதாகவும் இப்படி தீயவழிகளிலே அந்தப் பணத்திற்குச் செலவு ஏற்பட்டுவிடுமென்றபடி. ஆதலால், தர்மத்திலே முக்கியமாகக் கண் செலுத்த வேணுமென்றதாயிற்று. ... ❀

தாதா நாஸ்தீதி வக்தா ச த்வாவிமௌ க்ருதிநௌ மதௌ,
யாஹ்யேஹீதி ப்ருவந் மர்த்ய: தாத்ருக்ஜந்மா பவிஷ்யதி.

தேஹியென்று கேட்டவுடனே கொடுப்பவனும் இல்லையென்று உடனே சொல்லுபவனும் ஸுக்ருதிகள். போ, வா என்றே சொல்லி நாள் தள்ளுபவன் மறுபிறப்பில் போவதும் வருவதுமாகவேயிருப்பான். ... ... ❀

ஆழ்வார் திருவடிகளே சரணம்

# ஆழ்வார் திருநகரியில் அருளிச்செயல் நித்யஸேவையின் அடைவு.

திவ்யதேசமென வழங்கும் திருப்பதிகளில் காலைத் திருவாராதன ஸமயத்தில் திருப்பாவை ஸேவையும், மாலையில் நித்யாநுஸந்தான க்ரமஸேவையும் அநாதிகாலமாக நடைபெற்று வருவது ஸ்ரீவைஷ்ணவகோஷ்டிகளில் ப்ரஸித்தமான விஷயம். ஸ்ரீ காஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதியில் மட்டும் காலைத் திருவாராதன வேளையில் நாலாயிர க்ரமமானஸேவை அநாதிகாலமாக நடைபெற்று வருகின்றதென்பதை ஸ்ரீராமாநுஜன் ஒரு ல் ப்ராஸங்கிகமாக வெளியிட்டிருந்தேன். ஆழ்வார் திருநகரியில் நடைபெற்று வரும் நித்யஸேவாக்ரமம் அதிவிலக்ஷணமென்பதை அடியேன் பலகால் அநுபவித்து அறிந்தவன். அந்த க்ரமத்தையும் உலகமறிய வெளியிட்டுவைக்க விரும்பி ஆழ்வார் திருநகரி ஆசார்ய புருஷர்களில் ஒருவரான ஸ்ரீ உ.வே. ஸ்ரீ ஸூக்திரத்நாகர. இளையவில்லி. சடகோபாசார்ய ஸ்வாமியிடம் குறிப்புப்பெற்று இதனடியில் அதனை வெளியிடுகின்றேன். அந்த க்ரமத்தை முன்னம் சுருக்கமாக விஜ்ஞாபிக்கிறேன். இருபத்தேழு நக்ஷத்திரங்களில் நாலாயிர ஸேவை முடிவடைகின்றது. நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் இம்மூவர் தவிர மற்றையாழ்வார்களின் திவ்யப்ரபந்தங்கள் அவரவர்களினுடைய திருநக்ஷத்ரமாகிய ஒரு திருநாளிலேயே ஸேவித்துத் தலைக்கட்டக் கூடியவையாதலால் திருவோணம் முதலான திருநக்ஷத்திரங்களில் முதல் திருவந்தாதி முதலான திவ்யப் பிரபந்தங்கள் ஸேவித்தாகிறது. நம்மாழ்வார் முதலாக மேலே குறித்த மூவருடைய திவ்யப்ரபந்தங்கள் மட்டும் முன்னுட்களிலேயே தொடங்கி ஸேவித்து வந்து அவரவர்களது திருநக்ஷத்திரத்திலே சாத்துமுறை செய்யப்படுகிறது.

**இனி நக்ஷத்ரக்ரமேண இந்த ஸேவாக்ரமம் விவரிக்கப்படுகிறது.**

1. அச்வினி. திருமங்கையாழ்வாருடைய திவ்யப் பிரபந்தங்கள் க்ருத்திகாநக்ஷத்ரத்தில் சாத்துமுறை செய்யப்படவேண்டியவையாய், பூராடத்தன்று பெரிய திருமொழி தொடங்கி நாடோறும் ஒரு பத்தாக ஸேவித்து வருமடைவில் அச்வினியாகிய இன்று (பெரிய திருமொழி) ஒன்பதாம்பத்து ஸேவித்தாகும்.

2. பரணி. பெரியதிருமொழி பத்தாம்பத்து, திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல்.

3. கார்த்திகை. பெரிய திருமொழி பதினோராம் பத்தும் சேஷித்த மூன்று பிரபந்தங்களும்.

4. ரோஹிணி. அமலனுதிபிரான்மட்டும். திருப்பாணாழ்வார் "மற்றொன்றினைக் காணாவே" என்றவராதலால் போலும் மற்றொரு பிரபந்தமும் இன்று காணப் பெறுகிறது.

5. ம்ருகசீர்ஷம். இன்று நித்யப்படி ஸேவாக்ரமமென்பர். (அதாது) கண்ணிநுண் சிறுத்தாம்பு, திருப்பல்லாண்டு, திருப்பாவை. மேலே அனுஷத்தன்றும் இதே க்ரமம். நக்ஷத்ரப்ரயுக்தமாக ஸேவிக்கவேண்டிய பிரபந்தமின்மையால்.

6. திருவாதிரை. இராமாநுச நூற்றந்தாதி. இத் திருநக்ஷத்ரத்திலும் மேல் திருமூலத்திலும் இதர ப்ரபந்தம் கலசவேண்டாத தன்னேற்றம் குறிக்கொள்ளத் தக்கது.

7. புனர்பூசம். இன்று குலசேகராழ்வார் திருநக்ஷத்ரமாதலால் பெருமாள் திருமொழி ஸேவை ப்ராப்தம். இற்றைக்குப் பத்தாநாள் திருவிசாகமாதலால் திருவாய்மொழி

தொடக்கமும் இன்றாகிறது. ஆக பெருமாள் திருமொழியும் திருவாய்மொழி முதற்பத்தும் இன்று ஸேவை.

8. புஷ்யம். திருவாய்மொழி—இரண்டாம்பத்து.

9. ஆச்ரேஷம். திருவாய்மொழி மூன்றும்பத்து.

10. மகம். திருமழிசைப் பிரானுக்காகத் திருச்சந்த விருத்தமும் நான்முகன் திருவந் தாதியுமாகி, தொடர்ந்துவரும் திருவாய்மொழி ஸேவையில் நாலாம்பத்து.

11. பூரம். திருப்பாவை, நாச்சியார் திருமொழி. திருவாய்மொழி அஞ்சாம்பத்து.

12. உத்தரம். இற்றைக்கு நாலாநாள் பெரியாழ்வார் திருநக்ஷத்ரமாதலால் அவருடைய திவ்யப்ரபந்தம் இன்று தொடங்கவேண்டுதலால் திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழி முதற்பத்தும். அநுவர்த்திக்கும் திருவாய்மொழியில் ஆறும்பத்தும்.

13. ஹஸ்தம். பெரியாழ்வார் திருமொழி இரண்டாம்பத்தும், திருவாய்மொழி ஏழாம் பத்தும்.

14. சித்திரை. பெரியாழ்வார் திருமொழி மூன்றும்பத்து. கண்ணிநுண்சிறுத்தாம்பு. திருவாய்மொழி எட்டாம்பத்து.

15. ஸ்வாதி. பெரியாழ்வார் திருமொழி நாலாம்பத்து தொடங்கி சாத்துமுறை. திருவாய்மொழி ஒன்பதாம்பத்து.

16. திருவிசாகம். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி பத்தாம்பத்து. இன்று ஆழ்வார் பொலிந்து நின்றபிரான் ஸன்னிதிக்கெழுந்தருளி அங்கே ஸேவை சாத்துமுறைகள்.

17. அனுஷம். இன்று நித்யக்ரமமென்பது கீழே (5. ம்ருகசீர்ஷ விவரணத்தில்) காட்டப் பட்டது.

18. கேட்டை. திருமாலை, திருப்பள்ளியெழுச்சி. தொண்டரடிப்பொடி யாழ்வார் பெரிய பெருமாளைத் தவிர வேறொருவரையுமறியாதவ ரென்பதற்கேற்ப இன்று வேறொரு பிரபந்தம் கலசவேண்டாமை வாய்த்தது.

19. திருமூலம். உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி. (திருவாதிரையிற்போல.)

20. பூராடம். பெரியதிருமொழி இன்று தொடங்கினாலன்றித் திருக்கார்த்திகையன்று சாத்துமுறையாகாதாதலால் இன்று பெரியதிருமொழி தொடங்கி முதற்பத்து.

21. உத்தராடம். பெரியதிருமொழி-இரண்டாம்பத்து.

22, 23, 24. திருவோணம், அவிட்டம், சதயம். அடைவே மூன்று திருவந்தாதிகளும் பெரிய திருமொழியில் 3, 4, 5 பத்துக்களும்.

25. பூரட்டாதி. பெரியதிருமொழி ஆறும்பத்து.

26. உத்தரட்டாதி. பெரியதிருமொழி ஏழாம்பத்து.

27. ரேவதி. பெரியதிருமொழி எட்டாம்பத்து.

ஆழ்வாரெம்பெருமானார் மணவாள மாமுனிகளின் திருவருளால் அந்நாள் தொடங்கி இந்நாடோறும் இந்த ஸேவாக்ரமம் இடையறுது நடைபெற்றுவாரா நின்றது.

பொலிக! பொலிக!! பொலிக!!! ஆழ்வார்கள் வாழி. அருளிச்செயல் வாழி.

# ஸ்ரீமதுபயவே. S. ஸத்யமூர்த்திஸ்வாமி

சென்ற ஸ்ரீராமாநுஜனிதழில் இந்த ஸ்வாமியின் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவச் சிறப்புகளை வெளியிட்டிருந்தோம். அப்போது கலியாண தம்பதிகளின் திருவுருவப்படம்



நமக்குக் கிடைக்கத் தாமதமாகி பிறகு கிடைத்தமையால் அந்த ஸ்வாமியருளிய ஒரு வியாஸத்துடன் இவ்விதழில் இங்கு வெளியிடலாகிறது.

# பாகவதாபிமானம்

(ஸ்ரீஉவே. S. ஸத்யமூர்த்தி ஐயங்கார், குவாலியர்.)

(1) ஸ்வரூபத்தை உள்ளபடி உணர்ந்தவர்கள் எம்பெருமான் திறத்தில் சேஷத்வத்தோடு நிற்கமாட்டார்கள். ஏனெனில் பாகவத சேஷத்வபர்யந்தம் போனால்தான் பகவச்சேஷத்வம் ரஸிக்கும். ஆளவந்தார், ஜங்கமஸ்ரீ விமானமென்று குலாவப்படும் பாகவதர்களின் திருமாளிகைகளில் மிகத் தாழ்ந்ததொரு பிறவி கிடைத்தாலும் பரமபோக்யமென்றும், ஏனையவர்களின் வீடுகளில் நான்முகக் கடவுளாய்ப் பிறக்கும் பிறவி வாய்ப்பதானாலும் 'வேண்டேன், வேண்டேன்' என்றுமருளிச்செய்தார். மேலும், எம்பெருமானுடைய திருமேனியை ஒருக்காலாகிலும் ஸேவிக்கப் பெறுகைக்காக, ஐச்வரிய ஸ்வர்க்காநுபவாதிகளோபாதி மோக்ஷ ஸாம்ராஜ்யமும் வேண்டாமென்று உதறித் தள்ளுபவர்கள் எவரோ, எவர்களுடைய பிரிவை ஒரு மாநொடியும் எம்பெருமான் ஸஹிக்ககில்லானே, அத்தகைய மஹான்களுடைய திருமாளிகைகளில் பிறவிபெறுவதாகிற சிறந்த பாக்கியம் வாய்க்காமற்போனாலும் அந்த மஹான்களுடைய கடாக்ஷத்திற்கு இலக்காகும்படி செய்தருளவேணுமென்று எம்பெருமானைப் பிரார்த்திக்கின்றார். அதாவது "இவன் நம்முடையவன்" என்று பாகவதாபிமானத்தில் ஒதுங்கி வர்த்திக்கவேணுமென்றபடி. ரஸவாதிகள் கையிலிருக்கும் ஸ்பர்சவேதியானபொன் ஸ்பர்சமாத்ரத்தாலே இரும்பைப் பொன்னுக்குமாப்போலே விலக்ஷணரான இந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸம்பந்தம் ஸகல தோஷங்களையும் போக்கி இவனையும் விலக்ஷணனுக்கிவிடும். ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதாள் இயற்றியுள்ள 'விஷ்ணு பாதாதிகேசாந்த ஸ்தோத்ரம்' அவருக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்துள்ள பக்திப்பெருக்கை வெளிப்படுத்தி, பாகவத பக்தி பரமகாஷ்டையில் ஸமாபநமாகிறது நோக்கத்தக்கது.

(2) பேற்றுக்கு பாகவதஸம்பந்தமே அமைகிறாப்போலே, ஞானனுஷ்டானங்களிரண்டும் குறையற இருந்தும் பகவத் விஷயத்தை யிழந்துபோவதற்கு பகவதபிமதரான அந்த பாகவத விஷயத்தில் பண்ணும் அபசாரமே ஹேதுவாகிறது. பாகவதாபசாரமாவது பரோத்கர்ஷங்கண்டு ஸஹியாமையையும் ஸ்வோத்கர்ஷபுத்தியையும் உண்டுபண்ணி அநர்த்தத்தை விளைவிக்கும் அஹங்காரமென்ன அர்த்தகாமங்களென்ன, இவையடியாக ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குப் பண்ணும் விரோதம். எம்பெருமானுக்கிது அத்யந்த மஸஹ்யமாயிருக்கையாலே இது அஸஹ்யாபசாரமென்னப்படும். 'ஈச்வரனவதரித்துப் பண்ணின ஆனைத்தொழில்களெல்லாம் பாகவதாபசாரம் பொறாமையாலே' என்று நஞ்சீயர் ஸாதித்தருளினது இங்கு அநுஸந்தேயம். வைஷ்ணவ சின்னங்களாகிற தாஸ்ய நாமமென்ன, ததநுகுணமான ஊர்த்வபுண்ட்ர விசிஷ்டரூபமென்ன, இவற்றை உடையராயிருந்தும், பிறர்மினுக்கங்கண்டு பொறாமல், அஹங்காராதிவச்யராய் பாகவதர்கள் திறத்திலே விரோதத்தைப் பண்ணிப்போருமவர்கள், உருக்குலைய வெந்திருக்கச்செய்தே உருவுடைத்தாப்போலே தோற்றியிருக்கும் தக்தபடத்தோடு ஸத்ருசர்கள். 'மடிபுடவை வெந்தாலுண்டையும் பாவுமொத்துக்கிடக்கும், காற்றடித்தவாறே பறந்துபோம்' என்று லோகாசாரியரின் ஸ்ரீஸூக்தி.

(3) இப்படியாக, பாகவதாபிமானத்தினேற்றத்தையும் பாகவதாபசாரத்தின் க்ரௌர்யத்தையும் நன்கறிந்திருந்தும், இருளும் மருளும் நிறைந்துள்ள சிலர் தம்மை ஸர்வஜ்ஞராய் பாவித்து, நம் பூர்வாசாரியர்கள் பக்கலிலும், உபயவேதாந்த மஹா வித்வானுய், ஜகதாசாரிய ஸிம்ஹாஸனுதிபதியாய், நிஷ்பக்ஷபாத ஸஹ்ருதய ஸுஹ்ருந் மணிகளால் ஸாக்ஷாத் நம்பிள்ளையின் திருவவதாரமேயென்றும், வ்யாஸபராசராதிகளின் புனரவதாரமென்றுங் கொண்டாடப்படுமவராய், ஸகல சாஸ்த்ரங்களையும், இதிஹாஸ, புராண, பகவத்விஷய ரஹஸ்யக்ரந்தங்களனைத்தையும் ஸம்சயவிபர்யயமற க்ரஹித்து அவற்றை உபந்யாஸங்கள், அருளிச்செயல் வ்யாக்யானங்கள், ஸகலபூர்வாசார்ய ஸ்தோத்ர வ்யாக்யானங்கள், நாலுபாஷையிலும் பலதுறைகளிலும் தோன்றி நாற்றிசையும் பரவியுள்ள பற்பல நூல்கள் முதலியன மூலமாக அஸ்மதாதிகளுக்கு விநியோகப்படுத்தி, நம் தரிசனத்துக்குப் பல்லாண்டுகளாக மஹோபகாரம் செய்துகொண்டிருக்கும் நம் ஸ்வாமி திறத்திலும் மேலும் மேலும் விப்ரதிபத்திபண்ணி அனர்த்தப்பட்டுப்போவது *என்னெருவர் தீக்கதிக்கட்செல்லுந்திறமென்று மிகவும் வருந்தத்தக்கதே.

(4) ஸாக்ஷாத் நம்பெருமாள் பெயரிட்டு நாட்டிவைத்த நம் எம்பெருமானுர் தரிசனத்தில் அந்வயமுள்ள பரமபாக்யசாலிகளான நாமெல்லாரும் சீறுபாறென்னுதே, தார்மிகர் நிருமித்த தடாகத்திலே கழுத்தில் கல்லைக்கட்டிக்கொண்டு விழுந்துமடியாமே, ஒருமிடருய் பகவத் குணுநுபவம் பண்ணும்படியான பொன்னடிக்காலத்தை எதிர்பார்த்து நிற்கும் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ பாததூளி. —S. ஸத்யமூர்த்திதாஸன். 15—7—67.



## "வினுவுக்கு உடனே விடை"

ஸ்ரீ ராமாநுஜன் 223-ல் (பக்கம் 39-ல்) ஸ்ரீரங்கநாத பாதுகாஸமீக்ஷா வியாஸத்தில்,

"தேரழுந்தூர் உண்டு, திருவிந்தளூர் உண்டு:
திருவழுந்தூர் இங்கிலவுலகத்தில் இல்லை."

என்றெழுதியிருந்ததாம். இதைக் கடாக்ஷித்த ஒரு பெரியார் நமக்கு எழுதியிருந்தார்— "தேரழுந்தூரை ஆழ்வார்கள் அழுந்தூரென்றே அருளிச் செய்திருக்கையாலே அழுந்தூர் மேல் திரு என்னுஞ் சொல்லையேற்றித் திருவழுந்தூர் என்னக்கூடாதோ? சிறிய திருமடலில் "சேறை திருவழுந்தூர்" என்றுமிருக்கிறதே. அப்படியிருக்க, திருவழுந்தூர் இல்லையென்று தேவரீர் எழுதியிருப்பது எங்ஙனம் பொருந்துவது?" என்று. இந்த வினுவுக்கு நாம் உடனே தெரிவித்த விடையாவது—உலகில் வழங்கிவருவது அழுந்தூரைத் தேரழுந்தூர் என்றேயொழியத் திருவழுந்தூர் என்றல்ல. தேரழுந்தூரைத் தேரழுந்தூரென்றுதான் வழங்கிவருகிருர்கள்; இது ஸரி. திருவிந்தளூரையே திருவழுந்தூர் என்று வழங்கி வருகிருர்கள். இது தவறு. பாதுகாபத்ரிகையில் ஸதஸ்ஸுக்கு வந்திருந்த வித்வான்களைக் குறிப்பிட்டுவருகையில் தேரழுந்தூரிலிருந்து வந்தவர்களைத் தேரழுந்தூர் என்றே குறிப்பிட்டுவிட்டு, திருவிந்தளூரிலிருந்துவந்த வித்வானையே "வானமாமலை சேஷாத்ராச்சாரியர், திருவழுந்தூர்" என்று குறிப்பிட்டுள்ளது. இந்த ப்ரமத்தையே நாம் அகற்றியிருக்கிறேம். திருவிந்தளூருக்குப் பர்யாயமான திருவழுந்தூர் கிடையாதென்று உணர்த்தியிருக்கிறேம். அந்த ஸமீக்ஷா வியாஸத்திலேயே "திருவிழந்தூர் என்றெழுதாமல் திருவழுந்தூர் என்றெழுதினதற்கு ஸந்தோஷப்படவேண்டியதே" என்று நாமெழுதியிருப்பதையும் உற்று நோக்கவேணும்—என்று.

அந்தப் பெரியார் இந்த விடையைப் பெற்றுப் பரமானந்தமடைந்து உடனே நமக்கெழுதியதாவது—"அடியேனுடைய வினுவுக்கு தேவரீர் ஒரு க்ஷணமும் தாமதம் செய்யாமல் இப்படி ஸமஞ்ஜஸமான விடையைத் தெரிவித்து அடியேனை உகப்பித்தது

போல, தேவரீர் ஸ்ரீ ராமாநுஜனில் அடிக்கடி வெளியிட்டுவரும் வினாக்களுக்கு ஒரு வித்வான்கூட விடை தராமல் வாளாவிருப்பது என்னே? தங்களுடைய தவறுகளை அவரவர்கள் ஒப்புக்கொண்டோ, பதில் எழுதியோ பரிஹரித்துக்கொள்ள வேண்டியிருக்க வாளாவிருப்பது வியப்பே; தங்களிடம் சரக்கிருந்தால் வாளாவிருப்பர்களா?'' என்று.

# ஸ்ரீமான். ஒ. மு. பாஷ்யமையங்கார், காஞ்சீ.

நம்முடைய வேதவேதாந்த வைஜயந்திபாடசாலையில் ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளையெல்லாம் குறையறஅதிகரித்து ஸ்வரூப க்ரந்தங்களையும் ஸேவித்து வேதத்திலும் உபயுக்த பாகங்களையோதி ஸதாசார சீலராய் விளங்கும் ஸ்ரீமான் ஒ. மு. பாஷ்யகாரருக்கு நேற்று 6-7-67 மிருகசீர்ஷ நக்ஷத்ரத்தில் சின்ன காஞ்சியில் அவருடைய ஸொந்த க்ருஹத்தில் ஷஷ்டியப்தபூர்த்தித் திருமணம் சிறப்புற நடைபெற்றது. வைதிக க்ரியா கலாபத்திற்குப்பூர்வாங்கமாக அருளிச்செயல் ஸேவை சாத்தும் நடந்தேறியது.



ஸ்ரீமான். ஒ. மு. பாஷியமையங்கார் தம்பதி.

(சுலோகம்.) ஸ்ரீமாந் வத்ஸாந்வவாயோததிவிதுரநக: பாஷ்யகாரார்யநாமா
வாத்ஸ்ய ஸ்ரீமந் ந்ருஸிம்ஹாஹ்வயகுருதநயஸ் ஸாத்விகேஷ்வக்ரகண்ய:,
ஆழ்வாராசார்யஸூக்திஷ்வநுபமதிஷண: ப்ரேமபாத்ரம் ஸமேஷாம்
பூயஷ் ஷஷ்ட்யப்தபூர்த்யுத்ஸவமநுபவதாத் ஹஸ்திசைலேசத்ருஷ்ட்யா.

இத்தமண்ணங்கராசார்யோ ஹார்த்தப்ரேமஸமந்வித:,
ஆசாஸ்தே மங்கலம் ஸ்ரீமத்பாஷ்யகாராய தீமதே. (P.B.A.)

# ஆண்டவன் பத்ரிகைக்கு அருமையான விடையளிப்பு.

ஆண்டவன் பத்ரிகையென்பது சென்னையிலிருந்து வெளிவரும் ஸ்ரீரங்கநாதபாதுகா. இதைப்பற்றிக் கீழே மூன்றும் பக்கத்தில் வாசித்திருக்கிறீர்கள். ஸ்ரீ ராமாநுஜர்க்கும் ஸ்ரீ நிகமாந்த மஹாகுருவுக்கும் இடையில் அவதரித்திருந்த ஆசாரியர்கள் கலிபுருஷனுடைய ஆவேசாவதார பூதர்களாய்ப் பல அபார்த்தங்களை வெளியிட்டு விசிஷ்டாத்வைத ஸம்ப்ரதாயத்தைக் குழப்பிவிட்டார்களென்றும், இந்தக் குழப்பத்தைப் போக்கி உண்மைப் பொருள்களை நிலைநாட்டுதற்குத் திருவேங்கடமுடையானே நிகமாந்த மஹாகுருவாய்த் திருவவதரித்தானென்றும் ஒரு அல்பச்ருதர் கற்பனை செய்திருப்பதை அந்த வியாஸத்திலிருந்து தெரிந்துகொண்டிருக்கிறீர்கள். அந்த அர்த்தங்கள் எவையென்றால்,

1. எம்பெருமான் தோஷபோக்யனுகையாலே எல்லாரும் பாவமே செய்ய வேண்டியது. (இதில் பாதிபாகம் அநுக்தோபாலம்பம்.)
2. ஸ்ரீ மஹாலக்ஷ்மி நம்மைப்போன்ற ஒரு ஜீவவ்யக்தியே.
3. ஆழ்வார்கள் மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்த பத்த ஸம்ஸாரிகள்.
4. அத்ருஷ்டார்த்தமென்றும் பரந்யாஸமென்றும் சொல்லுகிற சரணாகதி செய்துகொள்ளவேண்டா.
5. வேதோக்த கருமங்களையெல்லாம் செய்யவேண்டிய அவச்யமில்லாமையால் பலவற்றை விட்டிடுவது.

ஆக இந்த ஐந்து விஷயங்களை ஸ்பஷ்டமாக எழுதி "இன்னும் பலபல" என்று இத்யாதி வைபவம் காட்டியுள்ளது. மேலே குறித்த அர்த்தங்கள் கலிபுருஷனாலே ப்ரவர்த்திப்பிக்கப் பட்டவையென்றும், கலிகெடத் தோன்றிய தேசிகரால் இவ்வர்த்தங்கள் களையப்பட்டன வென்றும் முடிக்கப்பட்டுள்ளது.

ஆரியர்காள்! மேலே விவரித்த அர்த்தங்கள் தேசிகரால் கனமாகக் காக்கப் பட்டவையேயொழியக் களையப்பட்டவைபல்ல என்பதை ஸப்ரமாணமாக நிரூபிக்கிறேன். கலிபுருஷாவதாரபூதர்களில் தேசிகரும் ஒருவரே என்பதைப் பாதுகாபத்ராதிபர்கள் நன்கு தெரிந்துகொள்ளுவர்கள். முதல் விஷயம் "எம்பெருமான் தோஷபோக்யனுகையாலே எல்லாரும் பாவமே செய்யவேண்டியது" என்பது. இதில் எம்பெருமான் தோஷபோக்யன் என்றவளவு சாஸ்த்ரஸித்தம்; 'எல்லாரும் பாவமே செய்யவேண்டியது என்று ஒரு ஆசாரியரும் எழுதிவைத்ததுமில்லை, ப்ரவசனம் செய்ததுமில்லை. இதைப்பற்றின தத்துவம் கேளீர். கலிபுருஷாவதாரர்களென்று இவர்கள் நினைக்கிற ஆசாரியர்களை விட்டிட்டு தேசிகருக்குமாசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைப் பரக்க விளக்கிப் பிறகு தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளிலே தலைக்கட்டுவோம். எம்பெருமானுடைய திருக்குணங்களை விவரித் தருளாநின்ற நம் பூர்வாசாரியர்கள் "வாத்ஸல்யமாவது—தோஷங்களையும் போக்யமாகக் கொள்ளுகை" என்று காட்டியருளினர்கள். சரணாகதி கத்யத்திற்கு மிகவும் ஸம்க்ஷேப மாக பாஷ்யமிட்டருளின ச்ருத ப்ரகாசிகாபட்டர் "வாத்ஸல்யம் நாம தோஷேஷு குணத்வபுத்தி:" என்றருளிச்செய்தார். அவர் தாமே ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகையிலும்

"ஸம்பந்த விசேஷாங்விதேஷு ப்ரீதி: ஸ்நேஹ:, யஸ்ய விபாகா அஸ்தாநபயசங்கித்வம் தோஷாநவபாஸ: தோஷேபி குணத்வபுத்திரித்யாதய:." என்றருளிச் செய்துள்ளார். இந்த வாக்யத்தில் *தோஷேபி குணத்வபுத்தி:* என்றது நோக்கத்தக்கது. "வாத்ஸல்யம் நாம தோஷேஷ்வபி குணத்வபுத்தி:" என்று ஸமந்வயாதிகரண ச்ருதப்ரகாசிகையிலு முள்ளது. எங்கும் ஒருமிடருன விவரணம். உலகில் ப்ரீதியின் நிலைமைகள் பலவிதமா யிருக்கும். அச்சம் சங்கிப்பதற்கு ஆஸ்பதமில்லாமலிருக்கச் செய்தேயும் என்ன ஆபத்து நேர்ந்துவிடுமோவென்று வயிறுபிடிக்கும்படியாகப் பண்ணிவிடுவது ஒருவகையான ப்ரீதி நிலைமை. ஒருவனிடத்தில் குற்றங்கள் பலபல நிரம்பியிருக்கச் செய்தேயும் அவை புலப்படாதபடியாக்குவதும் ஒரு ப்ரீதி நிலைமை. அக்குற்றங்கள் புலப்படாதவளவே யன்றிக்கே அவற்றையே நற்றமாகக் கொள்ளும்படியாக்குவதும் ஒரு ப்ரீதி நிலைமை. இவ்வர்த்தத்தையே மேலெடுத்துக் காட்டிய ச்ருதப்ரகாசிகா ஸ்ரீஸூக்தியானது விளங்கக் காட்டுகின்றது.

தோஷங்களை அருவருக்கவேண்டியிருக்க அவற்றை குணமாகக்கொண்டு போக்ய மாகக்கொள்ளும் நிலைமையானது ப்ரேமத்தினுடைய மிகச் சிறந்த எல்லைநிலமான பருவ மாகும். ஒருவனுக்கு ஒருவனிடத்தில் எல்லைகடந்த ப்ரீதி சென்றதென்றால் அனைது குற்றங்களையெல்லாம் நற்றமாகக் கொள்வதற்கு மேற்பட வேறென்றுமாகாது. இது லோகஸித்தமான விஷயம். "யதா ஸத்ய: ப்ரஸூதாயா தேநோர் வத்ஸே" என்று ஒரு த்ருஷ்டாந்தமும் காட்டியருளுகிறார் ச்ருதப்ரகாசிகாசார்யர். "எற்றே! தன் கன்றி னுடம்பின் வழுவன்றே காதலிப்பது, அன்றதனை யீன்றுகந்த ஆ" என்பது ஞான ஸாரத்தில் அருளாளப்பெருமாளெம்பெருமானுர் அருளிச்செய்த பாசுரம். அன்றீன்ற கன்றின் பக்கல் தாய்ப் பசுவானது எவ்வகையான ப்ரேமம் கொண்டிருக்கின்றதென்பது அபரோக்ஷம். கன்றினுடம்பிலுள்ள வழுக்களையெல்லாம் பரம போக்யமாகக் கொண்டு நக்குகின்றது பசு. இப்படிப்பட்டவொரு ப்ரேமவிசேஷமே வாத்ஸல்யம் என்று ஸகலாசாரியர்களும் நிரூபிக்கிருர்கள்.

நம் தோஷங்கள் எம்பெருமானுக்கு போக்யமென்றால், போக்ய வஸ்துக்களை ஸமர்ப்பிக்க நாம் மேன்மேலும் ஆசைப்படுவதுபோல தோஷங்களையும் புத்திபூர்வகமாக நாம் செய்ய ஆசைப்படவேண்டி வந்துவிடாதோவென்பது பிறருடைய முக்கியமான ஆக்ஷேபம். அவர்கள் கவனிக்கவேண்டும். எம்பெருமானை தோஷாதர்சி [அதாவது, தோஷங்களைக் காணுதவன்] என்று தெரிந்துகொண்டாலும் தோஷங்களை க்ஷமிப்பவன் என்று தெரிந்துகொண்டாலுங்கூட கீழ்க்கூறிய ஆக்ஷேபம் இடம் பெற்றே நிற்குமன்றே. நாம் என்ன குற்றம் செய்தாலும் எம்பெருமான் அதைப் பாரான் என்றும், பார்த்தாலும் பொறுத்துக்கொள்வன் என்றும் நாம் க்ரஹிக்கலாமென்று இசையும்போது, நாம் குற்றங் களைக் கூசாமல் அஞ்சாமல் செய்யவேண்டிவாராதோவென்று கேட்டால் விடையிறுக்க வழியுண்டோ? "எம்பெருமான் எப்போதும் தண்டதரனுய் நிக்ரஹத்திலேயே ஊற்ற முற்றிருப்பனே யல்லது அவன் பொறுமைக்குண முடையவனல்லன்" என்று க்ரஹித்தா லன்றி அவரவர்கள் பாபபீருக்களா யிருக்கமுடியாது. க்ஷமிப்பவன் என்று அறிந்து விட்டால் பாபஞ்செய்யத் தயங்கவேண்டியதில்லையன்றே. ஆகவே எம்பெருமானை தோஷபோக்யனுகக் கொண்டால் எந்த ஆபத்து வருமென்று ஆக்ஷேபம் செய்யப்படு

கின்றதோ அந்த ஆபத்து எம்பெருமானை தோஷாதர்சியென்றும் க்ஷமாசீலனென்றும் கொள்ளுமவர்களின் பக்ஷத்திலும் அபரிஹார்யமென்று திடமாக அறியக்கடவது.

வஸ்துத: ஒரு ஆபத்துக்கும் இடமில்லாமலே உண்மை யுணர்த்துகிறோம். எம்பெருமானுக்குப் பலவகைப்பட்ட குணங்கள் உள்ளன. அவற்றுள் எந்த குணம் எந்த ஸமயத்தில் எந்த வ்யக்தியின் மீது எந்த விதமாக ப்ரஸரிக்குமென்று நிலையிட வல்லார் ஆருமில்லை. அப்பெருமானது க்ஷமாகுணத்திற்கோ வாத்ஸல்ய குணத்திற்கோ நாமே யிலக்கு என்கிற நிச்சய வுணர்ச்சி நமக்குத் திடமாக இருக்குமாகில் தோஷங்களை நாம் கூசாது செய்ய நேருமென்கிற தூஷணம் இடம்பெறும். *கேவலம் ஸ்வேச்சயை வாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந* என்றருளிச் செய்பவனாக எம்பெருமானை யறிந்து வைத்து ஆஸ்திகனொருவன் புத்திபூர்வகமாகக் குற்றஞ்செய்யத் துணியக் கூடுமோ? நெருப்பு தாஹகத்வ சக்தியுடையது என்று ஒருவன் சிந்தித்த மாத்திரத்திலே அவன் வீடு பற்றி யெரிந்ததாய் விடுமோ? சர்க்கரை மிகவும் தித்திக்குமென்று சொன்னவளவிலேயே நாக்கு தித்திக்குமோ? அதுபோல், வாத்ஸல்யமாவது தோஷபோக்யத்வமென்று குண ஸ்வரூபத்தைப் பேசுமளவால் நம் தோஷங்களெல்லாம் பகவானுக்கு போக்யமாய் விடுமென்றாவது, அவனுக்கு போக்யமான தோஷங்களை நாம் செய்துவிடலாமென்றாவது நினைக்க நேருமோ? ஒருகாலும் நேராது. அவன் திருவுள்ளம் எந்த வ்யக்தியினிடத்தில் எந்த க்ஷணத்தில் எவ்விதமாகப் பெருகுமோ, அதை யார் அறியவல்லார்? யாரும் அறிய கில்லார். அப்பெருமான் தானும் முன்னம் அறியகில்லான். அளவு கடந்த அன்புக்கு இலக்கானாருடைய தோஷங்களை போக்யமாகக் கொள்ளுமியல்வு அவனிடமுள்ள தென்றும், அதுதான் வாத்ஸல்யமென்றும் நிஷ்கர்ஷிப்பது அநவத்யம். நம் தகப்பனார் நம்மிடத்தில் பரம ப்ரீதி வாய்ந்தவர். நாம் தெரிந்தும் தெரியாமலும் குற்றங்களைச் செய்து போருகிறோம். அக்குற்றங்களுக்காகப் பிதா தண்டிக்கிறாரென்பது கிடக்க. சில வேளைகளில் குற்றங்களை மன்னித்ததாகச் சொல்லுகிறார். சில வேளைகளில் குற்றங்களைக் காணாதது போலவே போய்விடுகிறார். சில வேளைகளில் அக்குற்றங்களையும் நற்றமாகக் கொண்டு அணைத்து உச்சிமோந்து உகக்கிறார். அதனால் நாம் அச்சங்கெட்டு புத்தி பூர்வமாகக் குற்றஞ்செய்யத் துணிவதில்லை. அதுபோலவே இங்குங் கொள்க.

எண்ணில் பல் குணங்கட்குக் கொள்கலமான எம்பெருமானிடத்தில் வாத்ஸல்ய மென்கிற வீது மிகச் சிறந்த குணம். நம்மாழ்வார் திருவாய்மொழியில் *நிகரில்புகழ்* என்கிற சொல்லால் இக்குணத்தைக் குறிப்பிடுகிறாரென்று நம் ஆசாரியர்கள் வியாக்கி யானஞ்செய்தருளுகிறார்கள். அங்ஙனம் நிகரற்றதாக ப்ரஸித்தமான இக்குணத்தைப் பழிக்கிறார்கள் பிறர். "தென்னாசார்யர்கள் கேசவனை தோஷ போக்யனாகக் கூறி நிந்திக் கிறார்கள்" என்றும், "நாம் குற்றஞ்செய்தால் எம்பெருமான் தண்டிப்பனே யென்று அஞ்சவேண்டியிருக்க அவனை தோஷ போக்யனாகக் கூறி, அவனுக்கு க்ஷீராந்நம் ஸமர்ப் பிக்கும் ஸ்தானத்தில் தோஷங்களையே மிகமிகச் செய்து அவனை உகப்பிக்கப் பார்க்கிற தென்னாசார்யர்களுக்குப் பாபஞ்செய்வதிலேயே முழுநோக்கு" என்றும் இங்ஙனே பலவாறு பேசியுமேசியும் போருவது இப்போது பாதுகாபத்ரிகையில் ஏறிவிட்டது.

7

நிர்க்குண ப்ரஹ்மவாதிகளான குத்ருஷ்டிகளைக் கண்டித்து எம்பெருமானை அநந்த கல்யாண குணகணமஹோததியாக ஸ்தாபிப்பதே எம்பெருமானார் தர்சனத்தின் மிகச்சீரிய நோக்கு. ஆனது பற்றியே ஆழ்வாரும் திருவாய்மொழி தொடங்கும்போதே *உயர்வற வுயர் நலமுடையவன்* என்றார். "நிர்க்குண ப்ரஹ்மவாதிகளின் மிடற்றைப் பிடித்தாற் போலே இப்படி அருளிச் செய்வதே" என்று கூரத்தாழ்வான் முதலானோர் உள்குழைந் துருகினார்கள். பகவத் குணங்கள் உயர்வறவுயர்ந்திருக்கை யாவது என்ன எனின்; அதை *அநவதிகாதிசய* என்கிற வடசொல்லால் ஆசார்ய ஸார்வபௌமர்கள் விவரித் தருளினார்கள். அதாவது நம்போன்ற மநுஷ்யர்களிற் காணுங்குணம் ஒரு அளவில் நிற்ப தென்றும், எம்பெருமானிடத்தில் அங்ஙனன்றிக்கே ஒவ்வொரு குணமும் எவ்வளவு ஓங்கியிருக்கவேண்டுமோ அவ்வளவும் ஓங்கியிருப்பதென்றும் சொன்னபடி. வாத்ஸல்ய குணம் நம்போன்றவர்களிடத்திலுள்ள அளவுகூட எம்பெருமானிடத்தில் இல்லையென்று வாதிக்கின்றவர்கள், அப்பெருமானைக் கல்யாண குணக்கடலாக இசைந்து பயனென் கொல்? குற்றங்களையும் நற்றமாகக் கொள்வது மிகச்சிறந்த குணமாக லோகாநுபவத்தி லுள்ளது. நூல்களிலுமெழுதப்பட்டுள்ளது. இக்குணம் எம்பெருமான் பக்கலில் பொருந்த மாட்டாதென்று பிரபலமாக வாதிக்க எழுமவர்கள் அந்தோ! எம்பெருமானை குணசாலி யென இசைந்தார்களாக வழியில்லையே. *யதி பாஸ்கர யாதவ ப்ரகாசௌ நிகமாந்த ஸ்திதி நிர்ணயப்ரவீணௌ, அபரை: கிமிவாபராத்தமார்யை: அயதாபாஷண சாதுரீதுரீணை:* (2-92) என்று ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ஸ்வாமி ஸாதித்த ச்லோகம் இவர்களையன்றோ நோக்கியது *யஸ்ய விபாகா:... தோஷேபி குணத்வபுத்திரீத்யாதய:* என்று கீழே யெடுத்துக்காட்டிய ச்ருதப்ரகாசிகா ஸ்ரீ ஸூக்தி விளங்கும்போது ப்ரீதி பரீவாஹரூபமான தோஷ போக்யதாபுத்தி குணமன்றென்று வாய்திறக்கப்போகாது. குணமென்று தேறின விது மநுஷ்யர்களிடத்திற்காட்டில் எம்பெருமானிடத்தில் சத குணாதிகமாக விளங்குகின்றதென்று இசைந்து தீரவேண்டுமே. உலகத்தில் குணமென்று பேர் பெற்றவற்றுள் ஒன்று தப்பாமல் எம்பெருமானிடத்து இருந்தேயாகவேண்டுதலால் இது எம்பெருமானுக்கு ஸம்பவியாதென்று வாதிக்குமவர்கள் திறத்தில் *ஜக்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத் நஷ்ணிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோவிசேஷ:?* என்கிற ஆழ்வான் ஸ்ரீ ஸூக்தியே அநுஸந்தேயமாக வடுக்கும்.

தோஷமென்பது இரண்டுவகை. செய்கைகளில் காணும் தவறுகள் ஒருவகையான தோஷம். *மாம்ஸாஸ்ருக்பூய விண்மூத்ர ஸ்நாயு மஜ்ஜாஸ்த்தி ஸங்குலமான அழுக் குடம்பில் *தீண்டாவழும்புஞ் செந்நீரும் சீயும் நரம்பும் செறிதசையும் வேண்டா நாற்றம்* என்னப்பட்டவை மற்றொருவகையான தோஷம். கடோபநிஷத்தில் [2-4-12] *அங்குஷ்டமாத்ர: புருஷோ மத்ய ஆத்மநி திஷ்டதி, ஈசாநோ பூதபவ்யஸ்ய ந ததோ விஜுகுப்ஸதே* என்றுள்ள ருக்கானது சரீர தோஷங்களும் எம்பெருமானுக்கு போக்ய மாகின்றன வென்பதைக் காட்டிநின்றது இவ்விடத்திற்கு பாஷ்யமுரையாநின்ற ரங்க ராமாநுஜஸ்வாமி "பூதபவ்யேச்வரத்வாதேவ வாத்ஸல்யாதிசயாத் தேஹகதாநபி தோஷாந் போக்யதயா பச்யதி இத்யர்த்த:" என்றுரைத்தார். வேதாந்தவாசிரியர் வரதராஜபஞ்சாசத்திலே *ஔதந்வதே மஹதி ஸத்மநி பாஸமாநே ச்லாக்யே ச திவ்ய ஸதநே தமஸ: பரஸ்மிந், அந்த: கலேபரமிதம் ஸுஷிரம் ஸுஸூக்ஷ்மம் ஜாதம் கரீச!

கதம் ஆதரஞ்ஸ்பதம் தே? * [பரமபதம் முதலிய சிறந்த ஸ்தானங்களை யெல்லாம் இகழ்ந் திட்டுப் பரம ஹேயமான பாவியேனுடலை போக்யமாகக்கொண்டு வர்த்திக்கிறாயே] என்றார். இப்படிப்பட்ட தோஷ போக்யத்வமே வாத்ஸல்யமென்று இந்த ச்லோகத்தின் வியாக்கியானத்திலும் களுர் பெரியார் வரைந்தார். இந்த தோஷ போக்யத்வத்தை *மங்கவொட்டுன் மாமாயை* என்கிற பாட்டிலே ஆழ்வாரும் விளங்கவுரைத் தருளினர். மிகமிக அருவருக்கத்தக்கதான தேஹ தோஷங்களே போக்கியமாகிற தென்று உபநிஷத்தாதி ஸித்தமாம்போது, செய்கைத் தவறுகளான தோஷங்கள் ப்ரீதியின் கனத்தால் போக்கிய மாகின்றன வென்னும் விஷயத்தில் விப்ரதிபத்தி ஸர்வாத்மநா அப்ரஸக்தம்.

தயாசதகத்தில் *மயிதிஷ்டதி ........அபராதசதை: அபூர்ணகுக்ஷி:* என்றும் *ஆலிஹ்ய தாந் நிரவசேஷம் அலப்தத்ருப்தி:* என்றும் *ப்ரபலவ்ருஜிநப்ராப்ருதப்ருதாம்* என்றும் நம் நிகமாந்தகுரு பணித்தவை ஸ்ரீவசனபூஷணத்தின் ப்ரதிச்சந்தம். ப்ராப்ருத மென்று உபஹாரத்திற்குப் பெயர்: "தோஷமே பச்சையாக" என்கிற ஸ்ரீவசனபூஷண மல்லது வேறு மூலமில்லையிதற்கு. ஆகவே இப்படி தோஷபோக்யதையை யருளிச்செய்த தேசிகரும் கலிபுருஷாம்சமேயொழியக் கலிகெடவந்தவரல்லரென்று ஈ. தே. ஸ்ரீ அறிக.



## பிராட்டியை ஸாமான்ய ஜீவனாக நினைத்துப் பேசுகிறார்களென்பதுபற்றி.

ப்ரக்ருத கலிகோலாஹல வியாஸமெழுதினவரும் இவர்க்குத் தோள்தீண்டிகளான வர்களும், ஆசார்யபீடத்திலிருந்து ப்ரவசனம் செய்பவர்களுமுட்பட தேசிகனவதரிப்ப தற்குக் காரணம் கூறப்புகுந்து "இதர ஆசாரியர்கள் பிராட்டி விஷயமாக அபார்த்தங்களை யெழுதி அவளுடைய பெருமைகளைக் குலைத்துவிட்டார்கள்" என்றும் "தேசிகன் அவதரித்து அந்த அபார்த்தங்களையெல்லாம் களைந்து பிராட்டியின் பெருமைகளை ஆச்சரிய மாக ஸ்தாபித்துவிட்டார்" என்றும் ஸ்வகோஷ்டிகளில் பெரும்பான்மையாகப் பேசி வருகிறார்கள். உண்மையில் பிராட்டியின் பெருமை எத்தகைத்து? அதை தேசிகன் எவ்வண்ணமாக நிஷ்கர்ஷித்துள்ளார்? இதில் இதர ஆசாரியர்களின் திருவுள்ளத்திற்கும் தேசிகனுடைய திருவுள்ளத்திற்கும் எவ்வகையான வாசியுள்ளது? என்றிவை முதலான விஷயங்களைச் சிறிதும் அறியகில்லாமலும் ஆராயகில்லாமலும் தாம் மருண்டதோடு நில்லாமல் பிறரையும் மருளச்செய்துவருவது மிகமிக வருந்தத்தக்கது. தேசிகனுடைய கொள்கைகளைத் தெரிந்துகொள்ள சிரமப்படவேண்டியதுண்டோ? அவருடைய திவ்ய ஸூக்திகள் லோபித்துவிடவில்லையே. பிராட்டி விஷயத்தில் நூல்வரம்பைமீறி தேசிகன் ஓரெழுத்து மெழுதிற்றில்லையே. அவர்தாம் ஸுஸ்பஷ்டமாக அருளிச்செய்திருப்பவை இங்கு ஸாரமாக நிரூபிக்கப்படுகின்றன.

ஜகத்காரணத்வம் மோக்ஷப்ரதத்வம் விபுத்வம் ஆகிய இவற்றைப் பிராட்டி யிடத்தில் தனிப்பட நிரூபிக்கும் விஷயத்தில் தேசிகன் சிறிதும் இறங்கவில்லை. யாதவாப்யு தயத்தில் பன்னிரண்டாவது ஸர்க்கம் ருக்மிணிப் பிராட்டி விஷயமானது. அதில் 1, 2.

ச்லோகங்களினால் ஸாக்ஷாத் ஸ்ரீ மஹாலக்ஷ்மியே ருக்மிணிப் பிராட்டியாகத் திருவவதரித்த தாய்ச் சொல்லி உடனே மூன்றுவது சுலோகம், “சிகண்டகம் நிஷ்ப்ரதிமம் ச்ருதீநாம் ச்ருங்கார லீலோபம விச்வக்ருத்யம், அதீயதே தம்மிதுநம் ஸ்வபாவாத் அந்யோந்ய ஜீவாது மநந்ய போக்யம்” என்பதாகவுள்ளது. இதற்கு மேலுள்ள சுலோகங்களெல்லாம் ருக்மிணிப் பிராட்டியை மட்டுமே நோக்கியவை. முதலிரண்டு ச்லோகங்களும் அப்படிப் பட்டவை. இடையில் மூன்றுவதான ச்லோகமொன்று மட்டும் மிதுநம் என்கிற நிர்தேசத்தையுட்கொண்டு தோன்றியுள்ளது. இந்த ச்லோகத்தில், *ச்ருங்கார லீலோபம விச்வக்ருத்யம்* என்பதற்கு வியாக்கியான மென்னவென்றால், “ச்ருங்கார லீலாவத் அநாயாஸ ஸாத்ய-விநோத ரூப-ஜகத்ஸ்ருஷ்டி ஸம்ஹாராதிக்ருத்யம்” என்பதேயாம். இப்படிப்பட்ட க்ருத்யத்தைப் பிராட்டியினிடத்தில் தனியாக இட்டுப் பேசுவதற்குத் திருவுள்ளமில்லாமையினாலேயே தேசிகன் மிதுநம் என்கிற பதத்தை ப்ரயோகித்து இடையிலே இந்தவொரு சுலோகத்தை விலக்ஷணமாக அமைத்தார். முன்னும் பின்னும் பிராட்டியை மாத்திரமே குறித்து ச்லோகங்களை யருளிச்செய்து போருகிறவர் இவ்வொரு ச்லோகத்தில் மிதுநம் என்று இருவரையும் சேர்த்தருளிச் செய்ததை உற்றுநோக்கினால் ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதிகளில் பிராட்டிக்குத் தனிப்பட அந்வயமில்லையென்று தேசிகன் நிச்சயித்திருப்பது திடமாகும்.

ஸ்ரீஸ்துதியிலும், *யத்ஸங்கல்பாத் பவதி கமலே யத்ர தேஹிந்யமீஷாம் ஜந்ம ஸ்தேமப்ரலயரசநா ஜங்கமாஜங்கமாநாம; தத் கல்யாணம கிமபி யமிநாம ஏகலக்ஷ்யம் ஸமாதௌ பூர்ணம தேஜ: ஸ்புரதி பவதீபாதலாக்ஷாரஸாங்கம்* என்கிற இவ்வொரு சுலோகமே போதும் பிராட்டி விஷயத்தில் தேசிகன் திருவுள்ளத்தை உள்ளபடி யுணர. பிராட்டியை ஸ்துதிக்க இழிந்தவர் பிராட்டியினிடத்துள்ளதையன்றே பேசவேண்டும். *ஜங்கமா ஜங்கமாநாம் ஜந்ம ஸ்தேமப்ரலயரசநாம் இந்திரே! த்வம் கரோஷி* என்று ச்லோகமியற்ற அருமையில்லையே. இப்படிச் சொன்னாலன்றே பிராட்டியின் ஸ்துதியாகும். உண்மையில் இவளிடத்திலில்லாததை இருப்பதாகவைத்து எங்ஙனே கவிபண்ணுவர்? கூரத்தாழ்வான் முதலான பூர்வாசார்யர்கள் *ஆபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வந்ஹரி:, யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே* இத்யாதியாக அருளிச்செய்ததைப் பின்பற்றியேதான் தேசிகனுமருளிச் செய்கிறாரென்பது ஸ்பஷ்டம்.

ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்திலும் பரிபூர்ணப்ரஹ்மாநுபவாதிகாரத்தில் “ஈச்வரனுக்கு ச்சத்ரசாமராதிகளைப் போலே லக்ஷணமாகச் சொன்ன ஜகத்காரணத்வ-மோக்ஷப்ரதத்வ-ஸர்வாதாரத்வ-ஸர்வநியந்த்ருத்வ-ஸர்வ சேஷித்வ-ஸர்வசரீரித்வ-ஸர்வசப்தவாச்யத்வ ஸர்வ வேதவேத்யத்வ-ஸர்வலோகசரண்யத்வ-ஸர்வபலப்ரதத்வ-லக்ஷ்மீஸஹாயத்வாதிகள் ப்ரதி நியதங்கள்” என்றருளிச்செய்யப்பட்டது. இந்த மஹாவாக்யத்தில் ஜகத்காரணத்வத்தை முந்துறச்சொல்லி முடிவில் லக்ஷ்மீஸஹாயத்வத்தைச் சொல்லியிருக்கையாலே, லக்ஷ்மியினிடத்தில் லக்ஷ்மீஸஹாயத்வம் எப்படி அஸம்பாவிதமோ அப்படியே ஜகத்காரணத்வமும் அவளுக்கு அஸம்பாவித மென்றும் இவையெல்லாம் பரப்ரஹ்மத்திற்கே பொருந்து மென்றும் காட்டப்பட்டதாயிற்று. இப்படியருளிச் செய்ததும் ஸ்ரீ பாஷ்யத்தில் *விநதவிவித பூதவ்ராதரக்ஷைகதீக்ஷே* என்றவிடத்து ச்ருதப்ரகாசிகையில் “ஜகத்காரணத்வ மோக்ஷப்ரதத்வே ஹி ராஜ்ஞ: ச்சத்ரசாமரவத் ப்ரஹ்மண: அஸாதாரண சிஹ்நம்.” என்றருளிச்

செய்திருப்பதைப் பின்பற்றியதே. முநிவாஹந போகத்தில் ஆதியென்றவிடத்தும் இப்படியேதானுள்ளது. ந்யாயஸித்தாஞ்ஜந ஜீவபரிச்சேதத்திலுமிப்படியேதான். இவ்விஷயத்தில் மிகத்தெளிந்த ஞானமுடையவர் நம் தேசிகன்.

சில்லரை ரஹஸ்யங்களென்றும் சில ரஹஸ்யங்கள் தேசிகன் ஸாதித்திருக்கிறுரே: அவற்றை ஸேவித்தால் இன்னமும் நல்ல தெளிவு உண்டாகும். ரஹஸ்யரத்நாவளி யென்று ஒரு சிறு ரஹஸ்யம். அதில் "ஸ்ரீமானுன நாராயணனொருவனுமே ஸர்வ ஜீவர்களுக்கும் தஞ்சம்......ஸர்வ ஸ்வாமிநியாய் ஸர்வேச்வரனுக்கு சேஷமாய் ஸஹதர்மசாரிணியான பெரிய பிராட்டியார் இத்தலையில் வாத்ஸல்யாதிசயத்தாலும் அத்தலையில் வால்லப்யாதிசயத்தாலும் புருஷகாரமாய்க்கொண்டு இஜ்ஜீவர்களுக்குத் தஞ்சமாகிருள்" என்றருளிச்செய்து, இதை ரஹஸ்யரத்நாவளீ ஹ்ருதயமென்கிற அடுத்த ரஹஸ்யத்தில் தாமே விவரித்தருளினுர். உண்மையில் விவரணுபேக்ஷையேயில்லாத வாக்யமன்ருேவிது. இப்படி நிஸ்ஸந்தேஹமாக வருளிச்செய்தவிடங்கள் ஒன்றிரண்டல்ல; பலபலவிடங்களுண்டு. சதுச்ச்லோகியில் மூன்ருவது ச்லோகத்தின் பாஷ்யத்தில் "மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷூணும் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்றருளிச் செய்ததொன்று போதுமே. "எம்பெருமான்தான் மோக்ஷமளிப்பவன்; அதனைப் பெறுவிப்பவளாகமாத்திரம் பிராட்டி இரா நின்ருள்" என்பது இந்த ஸம்ஸ்கிருத ஸ்ரீ ஸூக்தியின் கருத்து. அதற்கு மேலுள்ள ஸ்ரீ ஸூக்தி களும் பிராட்டிக்கு உபாயத்வமில்லையென்பதையே நிலைநாட்டுவன.

த்வயத்தில் பூர்வகண்டத்தில் பிராட்டிக்கு உபலக்ஷணத்வமா விசேஷணத்வமா வென்று ஒரு விவாதத்தைக் கிளப்பிக்கொண்டு உபலக்ஷணத்வமென்று சிலர் சொல்லுவ தாகவைத்து, அதைக் கண்டித்து விசேஷணத்வமே யுக்தமென்று ஸ்தாபிக்கப்படுகிறது ரஹஸ்யத்ரயஸாரத்தில். இது நம்முடைய பூர்வாசார்யர்களின் திருவுள்ளத்தைக் கண்டிப்ப தென்று நவீனர்கள் மருண்டிருப்பதுண்டு. இது மிகத் தவறு. இங்கு பிராட்டிக்கு விசேஷணத்வமில்லையென்று ஒரு ஆசார்யரும் உரைத்ததில்லை; முமுக்ஷுப்படியில் த்வயப் பிரகரணத்தில் "இப்போதிவளைச் சொல்லுகிறது புருஷகாரமாக" என்ற சூர்ணையின் வியாக்யானத்திலே மணவாளமாமுனிகள்-"(புருஷகாரமாக) என்கையாலே உபாயவஸ்து விசேஷணமாயிருக்கிற ஆகாரத்தையிட்டு இவளுக்கு முபாயத்வத்தில் அந்வயம் சொல்லும் பக்ஷம் நிரஸ்தம்" என்றருளிச் செய்திருக்குமிடத்து விசேஷணத்வத்தைக் கண்டோக்தி யாகவே யருளிச்செய்திருப்பது காண்க. இங்கு உபலக்ஷணத்வம் கொண்டாலும் விசேஷ ணத்வம் கொண்டாலும் வாசி சிறிதுமில்லையென்பதை சாஸ்த்ரஜ்ஞர்கள் உணர்வர்கள். பிராட்டிக்குப் புருஷகாரத்வமுண்டு என்று இசைந்தான பின்பு அவளுக்கு உபாயத்வமு முண்டு என்று வாய்திறக்க வழியே கிடையாது. உபாயத்வமாவது—தானே கொடுக்க சக்தியுடைத்தாகை. அஃதிருக்குமாகில் புருஷகாரக்ருத்யத்தில் நின்று துவளவேண்டிய ப்ரஸக்தியே கிடையாதாகையால் நவீனர்களின் உத்வேலப்ரஸங்கமெல்லாம் தொலைந்தன.

அரசாணிபாலை வேங்கடாத்வரியின் லக்ஷ்மீ ஸஹஸ்ரம் மிகவும் ப்ரஸித்தமானது. அதில் அவர் அநேக ச்லோகங்களில் ஸ்ரீ மஹாலக்ஷ்மிக்கு விபுத்வமுண்டென்றும் அணுத்வ வாதம் அஸங்கதமென்றும் கூறுகிருர். அப்படி அவளுக்கு அணுத்வத்தைச் சொல்லுகிற ஆசாரியர்கள் இன்னுரென்பதை வியாக்கியான கர்த்தா விளக்குகிருர். அதில் ஐச்வர்ய ஸ்தபகத்தில் "ஸ்ரீமத் ராமாவரஜஸரணிம் ச்ரேயஸீமாச்ரிதாநாம் ஆசார்யாணுமபிச குஹசித்

யஸ் தவானுத்வவாத:'' என்கிற சுலோகத்தின் வியாக்கியானத்தில் "பட்ட பராசராதீநாமபிச" என்று எழுதியுள்ளார். இதனால், கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டர் இவர்களுக்குப் பிரதிபக்ஷியென்று ஸ்பஷ்டமாகிறது. தேசிகன் பட்டரை அபர பாஷ்யகாரராக மதித்திருப்பவர். அது அதிகரண ஸாராவளியில் "வ்ருத்தி க்ரந்தேது" என்ற சுலோகத்தினால் விசதம். இங்ஙனே தேசிகன் மஹாசார்யராக மதித்திருக்கும் பட்டரை ப்ரதிபக்ஷியாகக் கொள்ளுமவர்களுடைய மதம் எதுவாயிருக்கவேணுமென்று ஆராய்மின். எதிர்வகுப்பில் மிகப் பெரிய வித்வான்களாயிருந்தவர்களும் ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளுக்கு அத்யந்த வைதேசிகர்களாகவேயிருந்து போந்தார்களென்பதற்கு இது முதன்மையான ஸாக்ஷியாகும். "இன்னின்ன ஆசாரியர்கள் நமக்கு உத்தேச்யர்கள், இன்னின்ன ஆசார்யர்கள் அநுத்தேச்யர்கள்'' என்கிற விவேக சக்திலேசமுமற்றவர்களாகவன்றோ எதிர்த்தலைப் புராதனபண்டித மணிகள் விளங்கியிருந்தார்கள். அந்த மணிகளின் பரம்பரைதானே தொடர்ந்துவருகிறது.

இவ்விஷயத்தை உபஸம்ஹரிக்கிறேன். எம்பெருமானுக்குப் போலவே பிராட்டிக்கும் ஜகத்காரணத்வ–விபுத்வ-மோக்ஷ ப்ரதத்வங்களுண்டென்கிற வாதம் இதர ஸம்ப்ரதாயஸ்தர்களின் திரளில் மலிந்துள்ளது. இவ்விஷயங்களில் இதுகாறும் அடியேன் எழுதி வெளியிட்டிருப்பது அபரிமிதம். வடமொழியிலும் லக்ஷ்மீதத்வ விசிர்ணயம், ஸ்ரீதத்வ சோதனம் முதலான நூல்களில் மிக விரிவான விசாரங்கள் செய்திருக்கிறேன். பிள்ளை லோகாசார்ய ஸ்ரீஸூக்திகளிலோ மணவாள மாமுனிகளின் ஸ்ரீஸூக்திகளிலோ இவ்விஷயங்களைப்பற்றி விரிவான சர்ச்சைகள் கிடையாது. சாஸ்த்ரார்த்த தத்துவத்தை வாதப்ரதிவாத முறையிலன்றிக்கே ஸாரமாக வெளியிட்டுள்ளார்களத்தனை. இதில் வாத ப்ரதிவாத முறைகளை வளர்த்தி மிகவிரிவாக வரைந்தவர் ஸ்ரீமத் வேங்கடநாதார்யர். அவர் சதுச்ச்லோகிபாஷ்யத்தில் சில பக்ஷங்களை உத்க்ஷேபித்து "பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு சச்சி தேக: ப்ரமாணவாந்'' [இந்த ஐந்து பக்ஷங்களுள் ஏதோவொரு பக்ஷம் ப்ராமாணிகம்] என்றார். இப்படி சொல்லுவதனால் ஸந்தேஹமோ விவாதமோ தீருவதற்கு வழியுண்டோ? இதை அவர் தாமே ஆலோசித்து உடனே என்ன ஸாதித்தாரென்றால் (மேலே குறித்த காரிகையின் உத்தரார்த்தம்) *ஸலக்ஷ்மீகஸ்ய ஸாம்ராஜ்யம் ஸர்வதா ஸுப்ரதிஷ்டிதம்* என்று ஸாதித்தார். இதன் பொருள் ஸ்பஷ்டமே. பிராட்டிக்கு எந்தப்பெருமை சொல்லுவதானாலும் தனிப்படச் சொல்லவேண்டா; பிராட்டியோடு கூடிய எம்பெருமானுக்கே சொல்லுவதுதான் நிராபாதமானது—என்பது இதன் பொருள். லக்ஷ்ம்யாஸ் ஸாம்ராஜ்யம் தனிப்படச் சொல்லலாகாதென்று தேசிகன் நிஷ்கர்ஷித்தவிடங்கள் ஒன்றிரண்டல்ல.

ந்யாயஸித்தாஞ்ஜநே ப்ரபத்தியின் அநுபாயத்வத்தை த்ருடீகரிப்பதற்காக ஸாதித்தருளின காரிகை—*இயம் கேவலலக்ஷ்மீசோபாயத்வப்ரத்யயாத்மிகா, ஸ்வஹேதுத்வ நியம் ருந்தே கிம் புநஸ் ஸஹகாரிணும்* என்பது. இதில் ப்ரபத்திவேஷத்தைச் சொல்லுகிற ஸூக்தி "கேவலலக்ஷ்மீசோபாயத்வ ப்ரத்யயாத்மிகா'' என்பது. ஒருஸமயம் குன்றபாக்கம் ஸ்வாமி திருப்புட்குழியப்பா ஸ்வாமியை நோக்கி "லக்ஷ்மீதநீசோபாயத்வப்ரத்யயாத்மிகா'' என்றில்லாமையை கவனித்ததுண்டோ? என்று கேட்க, "பிராட்டிக்குப் புருஷகாரத்வம் தவிர, தனிப்பட மோக்ஷப்ரதத்வமுமுண்டென்று தேசிகன் திருவுள்ளமில்லையே'' என்று சொல்லி நெகிழ்ந்தாராம். அவர் அப்படி சொல்லியிருக்கமாட்டாரென்னில், இப்போதுள்ள பண்டிதமணிகள் எப்படிச் சொல்லவேணுமோ அப்படி சொல்ல முன்வரலாமே.



# 3. ஆழ்வார்களின் பெருமையைப்பற்றின உண்மை.

ஸ்ரீநிகமாந்த மஹாகுரு குருபரம்பரா ஸாரமென்னும் ரஹஸ்யத்தில் "பராங்குச பரகாலாதி ரூபத்தாலே அபிநவமாகவொரு தசாவதாரம் பண்ணி" என்றருளிச் செய்த வுடனே அதே ரஹஸ்யத்தில் நாராயணன் தானே அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே அநேக தேசிகாபதேசத்தாலே அவதரித்தருளினன் என்றுமருளிச் செய்தவுடனே— "இத்தைக் கணிசித்து *கலௌ கலு பவிஷ்யந்தி நாராயண பராயணா:, க்வசித் க்வசிந் மஹாபாகா த்ரமிடேஷு ச பூரிச:, தாம்ரபர்ணீ நதீ யத்ர க்ருதமாலா பயஸ்விநீ, காவேரீ ச மஹாபாகா ப்ரதீசீ ச மஹாநதீ* என்று மஹர்ஷியருளிச்செய்தான்" என்று தலைக்கட்டியுள்ளார். இந்த மஹர்ஷி வசனம் ஸ்ரீ பாகவதத்தில் ஏகாதசஸ்கந்தத்திலுள்ளது. அங்கு உபக்ரமமென்னவென்றால் *க்ருதாதிஷு நரா ராஜந் கலௌ இச்சந்தி ஸம்பவம்* என்றிருப்பதைக் கட்கூடாகக் காணலாம். இதன் பொருள் தெரியுமோ? க்ருதத்ரேதா த்வாபரயுகங்களில் பிறந்திருந்த மஹான்கள் தேஹாவஸாநத்தில் வைகுண்டலோகம் சென்று சேர்ந்திடாமல் 'நாம் கலியுகத்தில் பிறக்கவேணும்' என்னுமபிஸந்தி கொண்டிருந்து மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்துகொண்டே வந்து அப்படியே தாம்ரபர்ணி முதலான நதிகளின் தீரத்திலே ஆழ்வார்களாக அவதரித்தார்கள் என்பதாம். இதை முதன்முதலாக ஆசார்ய ஹ்ருதய திவ்யக்ரந்தமே எடுத்துக் காட்டிற்று. அதை ஸேவித்தே நிகமாந்தகுரு பணித்தருளினர். அதில் "மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடற் சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்றருளிய சூர்ணிகையைக் கொண்டே மேலே சொன்ன குருபரம்பரா ஸாரத்தில் "மேகங்கள் ஸமுத்ர ஜலத்தை வாங்கி ஸர்வோபஜீவ்யமான தண்ணீராக உமிழுமாபோலே" என்ற பங்க்தியைப் பணித்தார். மேலும் அதிலேயே "தமிழ்மாமுனிதிக்கு சரண்யமென்றவர்களாலே *க்வசித்க்வசித்தென் றிவராவிர்ப்பாவம் கலியுங்கெடும்போலே ஸூசிதம்" என்றருளிய சூர்ணையைக்கொண்டே "அகஸ்த்ய ஸேவிதமான தேசத்திலே" இத்யாதி (மேலே காட்டின) பங்க்தியைப் பணித்தார் நிகமாந்த மஹாகுரு. அதிலேயே "அத்ரி ஜமதக்நி பங்க்திரத வஸு நந்தஸூநுவானவனுடைய யுகவர்ணக்ரமாவதாரமோ!" என்கிற சூர்ணையில் பகவதவதாரமோ என்று உல்லேகித்திருந்தபடியைப் பின்பற்றியே "அபிநவமாக ஒரு தசாவதாரம் பண்ணி" என்று மேலே காட்டின குருபரம்பராஸார ஸூக்தி தோன்றியது. பெரியவாச்சான் பிள்ளை, பிள்ளைலோகாசாரியர் (அவருடைய திருத்தம்பியாரான) அழகிய மணவாளப்பெருமாள் நாயனர் என்னுமிந்த ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளில் ஸாபேக்ஷமாக விளைந்துள்ள அர்த்தரத்னங்களையே நிகமாந்தகுரு நிதியாகக்கொண்டு பலவும் பணித்தருளினர். அகாண்டமாத்ஸர்யத்தாலே அந்த ஸ்ரீஸூக்திகளில் கண்செலுத்த மாட்டாதவர்களுக்கு மூலம் தெரியாமையாலே "நம் நிகமாந்தகுரு பணித்தார்; நம் தேசிகன் ஸாதித்தார்" என்று கண்ணீர் பெருக்கவேண்டியதாகிறது. அடியேனுடைய நூல்களைப் பூர்த்தியாக அநுபவிக்குமவர்களுக்கு நிலமல்லாததொன்றுமில்லை.

இவ்விஷயத்தை உபஸம்ஹரிக்கிறேன். "இத்தைக் கணிசித்து மஹர்ஷியருளிச் செய்தான்" என்று குருபரம்பராஸாரத்தில் உதாஹரித்தவதில் *க்ருதாதிஷு நரா ராஜந் கலாவிச்சந்தி ஸம்பவம்* என்பதனால் ஆழ்வார்கள் முந்தின யுகங்களிலிருந்து மாறி மாறிப்

பல பிறப்பும் பிறந்துகொண்டே வந்தவர்களென்பது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. ஆழ்வாரும் இதைக் காட்டினபடியாகவே *மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து* என்று தம் திருவாக்காலருளிச் செய்தார். இதை நைச்யாநுஸந்தான கோடியில் சேர்த்திடாமல் ஸத்கீர்த்தனமாகவேகொண்டு திருக்குருகைப்பிரான் பிள்ளான் வியாக்கியானம் செய்தருளினர். *மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து* என்றருளிச்செய்தவர் தாமே அந்யாபதேசப்பேச்சில் *பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகள்கொல்* என்றுமருளிச் செய்துள்ளார். இந்த விசாரம் இவ்வளவே போதும். ... ... 

## 4. அந்ருஷ்டார்த்தமென்னும் சரணாகதியனுஷ்டானத்தைப்பற்றி.

பரமபுருஷார்த்தமான அரும்பெரும்பேறு பெறுதற்கு உறுப்பாக நாம் ஒரு ஆசார்யரை ஆச்ரயிக்கிறோம்; என்றைக்கு ஆச்ரயிக்கிறோமோ அன்றைக்கு நமக்கு ஸமாச்ரயனமானதாகத் தொன்றுதொட்டு வ்யவஹாரம் நிகழ்ந்து வருகிறது. திருவாழி திருச்சங்குகளினால் இலச்சினை பெறுகையாகிற சக்கராங்கனத்தையே ஸமாச்ரயண மென்று உலகம் க்ரஹித்திருக்கின்றது. உண்மையில் ஸமாச்ரயணமென்பது அவ்வளவே யன்று. "ஆசார்யனை ஆச்ரயித்து அவன் மூலமாக எம்பெருமானையடிபணிதல்" என்னும் பொருளதான ஸமாச்ரயணமென்கிற சொல்லானது ஆசார்யனால் பெறுவிக்கப்படுகிற பேறுகளுக்கெல்லாம் ஸூசகமாக நிற்கின்றது. ஆசார்யனால் க்ருதக்ருத்யனாகச் செய்விக்கப் பெறுகையே ஸமாச்ரயணமெனப்படுகிறது பகவதாச்ரயணத்தில் பர்யவஸித மாகிறது. இந்த ஸமாச்ரயணத்தையே பஞ்ச ஸம்ஸ்காரமென்கிற சொல்லாலும் வழங்கி வருகிறார்கள். "தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாகச்ச பஞ்சம:, அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்ய ஹேதவ:" என்று யாவருமறிந்த ச்லோகமானது பஞ்ச ஸம்ஸ்காரங்கள் இன்னின்னவையென்பதை விவரித்துக் காட்டுகின்றது. தாப: என்பது முதல் ஸம்ஸ்காரம். அதுதான் தப்தசக்ராங்கனமென்பது. திருவிலச்சினையென்பது ஸம்ப்ரதாயவழக்கு. இரண்டாவதான புண்ட்ரஸம்ஸ்காரமாவது த்வாதசோர்த்வபுண்ட்ரதாரணம் செய்வித்தல். மூன்றாவதான நாமஸம்ஸ்காரமாவது 'இந்த சிஷ்யன் ஸ்ரீ வைஷ்ணவனாயினன்' என்பதை விளங்கக் காட்டுகின்ற தாஸ்யநாமகரணம். அவரவர்களின் ஸம்ப்ரதாயப்படி ராமாநுஜ தாஸனென்றும் மதுரகவிதாஸனென்றும் ஸ்ரீவைஷ்ணவதாஸனென்றும் இப்புடைகளிலே வழங்கிவருவன காண்க. இனி நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரமாவது திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயத்தை உபதேசிக்கப் பெறுகை. ஐந்தாவதான யாகமாவது 'யஜ—தேவபூஜாயாம்' என்கிற தாதுவிலிருந்து தேறுகிற யாகசப்தம் திருவாராதனத்தைச் சொல்லுகிறதாகையாலே பகவதாராதனத்திற்கு அதிகாரம் பெறுகை. இதற்கு மற்றொரு வகையாகவும் பொருள் கூறுவர். அது நிற்க.

இவற்றுள் நான்காவதான மந்த்ரஸம்ஸ்காரத்தில் த்வயமென்கிற மந்த்ரரத்நமே மிகச் சிறந்தது. ஸமாச்ரிதனான சிஷ்யனை அந்த மந்த்ரரத்நமே க்ருதக்ருத்யனாக்குகின்றதாக நம் ஆசார்யர்களனைவருடையவும் ஸமகண்டமான ஸித்தாந்தம். இதனாலேயே ஸமாச்ரயண நிஷ்பத்தி யென்றுணர்க. இதுதன்னை ரஹஸ்ய க்ரந்தத்திலே ஸுவ்யக்தமாக எழுதிவைத்து

சிலாலிகிதமாக்கிவைத்தவர் நம் நிகமாந்தகுருவரர் ஒருவரே. எங்ஙனேயென்னில்; ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்திலே—

"அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப்போந்த நமக்கு அவஸரப்ரதீக்ஷையான பகவத்க்ருபையடியாகவுண்டான ஸதாசார்ய கடாக்ஷவிஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரணாநூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹ ஹேதுக்களையெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்த வடியவர்தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஸர்வசேஷியான ச்ரிய:பதி தன்பேறாகத் தானே ரக்ஷிக்குமென்று தேறி நிர்ப்பரனாயிருகின்கை. இது *மா சுச:* என்கிற சரண்யவாக்யத்திலும் தீர்ந்த பொருள்."

என்றுள்ள வாக்கியங்கள் நிஸ்ஸந்தேஹவிபர்யயமாக உண்மைப் பொருளையுணர்த்துகின்றன. மேலே உதாஹரித்த வாக்கியராசியில் "த்வயோச்சாரணா நூச்சாரணத்தாலே ப்ரபத்த்யநுஷ்டாநம் பிறந்த பின்பு" என்றும் "சரண்ய ப்ரஸாதநங்களில் இதுக்கு மேல் ஒன்றில்லாமையாலே" என்றுமுள்ள ஸ்ரீஸூக்திகள் கண்டீரா? மந்த்ரஸம்ஸ்கார ஸமயத்தில் த்வயமென்னும் மந்த்ரத்தை ஆசார்யன் சொல்ல அதை சிஷ்யன் பின் சொல்லுவதுண்டே இதுதான் ப்ரபத்த்யநுஷ்டானமென்று சொன்னதோடு நில்லாமல் இதற்கு மேல் வேறொன்று கிடையாதென்றும் ஸுவ்யக்தமாக அருளிச் செய்தாராயிற்று.

மேலே உதாஹரித்த ரஹஸ்யத்ரய ஸாரபங்க்திகளை சரணாகதி கத்ய பாஷ்யத்தின் முடிவில் ஸ்வாமிதாமே எள்ளளவும் மாறுபாடின்றி மொழிபெயர்த்துள்ளார்; (அதாவது)- "ஏதேந அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கநமூலபகவத் அப்ரஸாதேந ஸம்ஸரதோ மே பகவத்க்ருபாமூலஸதாசார்யாங்கீகாரேண த்வயோச்சாரணா நூச்சாரணபூர்வகஸ்வரக்ஷாபரந்யாஸே ஸித்தே ப்ரஸாதநேஷு அஸ்மாத் அப்யதிகஸ்யஅபாவாத் ஸ்வீக்ருதபர: ச்ரிய:பதிர்நாராயண:..." இத்யாதியை ஸ்ரீகோசத்தை யெடுத்துப் பாருங்கள். முன்னமவதரித்த வாக்யமெது? மொழிபெயர்ப்பு வாக்யமெது? என்பதைத் தெளிந்து கொண்மின்?

இப்படியிருக்க நவீனர்கள் ஏதோவொரு நவீநகாரியம் செய்வது சாஸ்த்ரங்களிலும் ஸதாசார்யாநுஷ்டாந பரம்பரையிலும் எங்கும் அத்ருஷ்டமான அர்த்தமாதலால் அத்ருஷ்டார்த்தமென்று பெயர்பெற்றது மிகவும் பொருத்தமானதே. எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரையிலே ஜனித்தவர்களுக்கு ப்ரபந்நத்வமோ சரணாகதத்வமோ ஜன்மஸித்தமேயாகும். அன்னவர்கள் பஞ்ச ஸம்ஸ்காரம் செய்துகொள்வதானது வைஷ்ணவ தீக்ஷார்த்தமாக வத்தனையல்லது மோக்ஷஸாதனமாகவன்று. நம்முடைய குலகூடஸ்தரான எம்பெருமானார்க்கு ஸ்ரீரங்கநாதனிடமிருந்து விசேஷித்து வரமும் கிடைத்திருக்கிறது. அதையும் தேசிகனே ந்யாஸதிலகத்தில் "ச்ருத்வா வரம் தததநுபந்த மதாவலிப்தே" என்பதனால் நன்கருளிச் செய்துள்ளார். ந்யாஸதிலகத்தில் *அந்தோநந்த க்ரஹணவசக:* என்கிற சுலோகத்தில் மூன்றாவது பாதமும், அதற்கடுத்ததான *உக்த்யா தநஞ்ஜய* ச்லோகத்தில் *லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம் ச்ருத்வா வரம்* என்றதும் இந்த நவீனர்களின் அத்ருஷ்டார்த்த அனுஷ்டானத்தை நேராகத் தகர்க்குமவை.

இங்கு ஸாரமான விஜ்ஞாபனம்; ஸ்ரீமதாண்டவன் திருவடிவாரத்திலேயே இதை ஸமர்ப்பிக்கிறேன். அத்ருஷ்டார்த்தமென்று செய்யப்பட்டுவருகிற ஒரு அனுட்டான

மானது நல்ல காரியமேயொழிய தப்புக்காரியமென்று ஒருவரும் சொல்லார், நெஞ்சாலும் நினைக்கத் தகாது. இதைக் கண்டிக்கவேண்டிய ஆவச்யகதை சிறிதுமில்லை. ஸ்வாமி எம்பெருமானார் ஸ்ரீவைகுண்டகத்யத்தில் அவ்விடத்திற்குச்சேர "உத்தாயோத்தாய புந: புந: ப்ரணம்ய" என்றருளிச்செய்தவர் இவ்விடத்தில் நாம் செய்யும் நித்யபகவதாராதன ப்ரக்ரியையை அருளிச்செய்யுமிடத்து "மூலமந்த்ரேண தண்டவத் ப்ரணம்ய உத்தாய" என்று கண்ணுடிபோல் காட்டியிருந்தும் பலகால் நமஸ்கரிப்பவர்களை நாம் தவறு செய்பவர்களாக நினைக்கின்றிலோம். காரியம் நல்லதுதானே, செய்யட்டுமே என்றிருக்கிறோம். அப்படியே பரந்யாஸமென்று ஒன்று செய்தால் இது பூருவர்கள் ஒருவரும் அநுஷ்டியாததும் விசிஷ்ய தேசிக ஸூக்தி விருத்தமுமாயிருந்தாலும் நல்ல காரியந்தானே என்றிருக்கிறோம். "யதா தே தத்ர வர்த்தேரந், ததா தத்ர வர்த்தேதா:" "மேலையார் செய்வனகள் வேண்டுவன" "செய்யாதன செய்யோம்" என்றிருப்பாரைக் கலிபுருஷாவதாரமென்று பழிப்பவர்களுக்கு ஸதுபதேசம் செய்யவேண்டியது அவசியமாகிறது. மந்த்ரோபதேசம்செய்த ஆசார்யராலே நாம் க்ருதக்ருத்யராகிறோமென்று ஸுஸ்பஷ்டமாக தேசிகர் சொல்லியிருக்க, அந்த ஆசார்யரை உதறித்தள்ளி வேறோராசார்யரைத் தேடியோட எந்த சாஸ்த்ரம் சொல்லிற்றோ? எந்த ஆசார்யர் நியமித்தாரோ தெரியவில்லையே. இதைப்பற்றி அடியேன் தென்மொழியிலும் வடமொழியிலும் நான்கு க்ரந்தங்கள் இட்டிருப்பது ஜகத்ப்ரஸித்தம். ஒவ்வொருவர் கையையும் வாயையும் ஸப்ஸலாக் பூட்டுபோட்டன்றோ பூட்டியிருக்கிறேன்.

"விநதவிவிதபூதவ்ராதரக்ஷா" என்றவிடத்து ச்ருதப்ரகாசிகையிலும் தத்வடீகையிலும் ஸாதித்திருப்பதைக் காணக் கண்ணில்லையே. "ச்ருத்வா வரம்" என்று தேசிகர் எம்பெருமானுர்க்கு ஸ்ரீரங்கநாதன் ஏதோ வரம் அளித்ததாகச் சொல்லுகிறாரே, அது என்ன வரம் என்று கேட்டால் வாய்திறக்கிறீர்களோ? உங்கள் முன்னோர்கள் எழுதி வைத்து உங்களினத்தவர்களே அச்சிட்டு வெளியிட்டிருக்கிற வியாக்கியானத்திலுள்ள விவரணத்தை நீங்களே தூஷிக்கிறீர்கள். வரப்ரகாரத்தை வேறுபடுத்தவோ மாறுபடுத்தவோ ஒண்ணாதபடி உடனே "ததநுபந்தமதாவலிப்தே" என்று ஸ்வாமி தாமே அருளிச்செய்துவைத்தார். கிம்பஹுநா? நவீனர்களென்கிற வியபதேசத்தை உள்ளபடி பெற்றிருக்குமவர்களுக்கு ப்கவத்ராமாநுஜருடைய அநுபந்தம் தொடர்ந்து வந்திராமையாலே ஆந்திரதேசங்களில் நூதனமாக வைஷ்ணவராமவர்களுக்கு வைஷ்ணவேஷ்டி செய்விப்பதுபோலே உங்களுக்கு இவ்வாசாரம் அவர்ஜநீயமேயென்று ஸமாஹிதராவுதோம்.

## 5. தென்னுசார்யர்களின் கர்மாநுஷ்டானத்தைப்பற்றி.

*க்ரியமாணம் ந கஸ்மைசித் யதர்த்தாய ப்ரகல்பதே, அக்ரியாவதநர்த்தாய தத்து கர்ம ஸமாசரேத்* என்கிற பிரமாணத்தை தேசிகரும் எடுத்தாளுகிறார். இந்த பிரமாண வசனத்தின்படியேதான் பூர்வாசார்யர்களின் அநுஷ்டான பரம்பரை வந்திருக்கிறது. எந்தக் கருமத்தைச் செய்தால் ஒரு பலனும் கிடைக்கமாட்டாதோ, செய்யாவிடில் ப்ரத்யவாயம் விளையுமோ அந்தக் கருமத்தை மட்டும் செய்யவேண்டியதென்று இந்த வசனத்தின் தாற்பரியம், அதாவது—அகரணே ப்ரத்யவாயாவஹமாயும் பலனற்றதாயுமிருக்கிற கருமத்தையே செய்யக்கடவதென்றபடி. பூர்வாசார்ய ஸம்ப்ரதாய பரம்பரையில்

எங்தெந்த கருமங்கள் அனுட்டிக்கப்பட்டு வருகின்றனவோ அவை அகரணே ப்ரத்ய வாயத்தை விளைப்பனவாயிருக்கும். எங்தெந்த கருமங்கள் அனுட்டிக்கப்படாமல் விடப் பட்டிருக்கின்றனவோ அவை ஸாமாந்ய பலப்ரதமாயிருக்கும்—என்று அறியக் கடவது. ஒவ்வொரு ஸௌரமாஸ ஸங்க்ரமணத்திற்கும் தர்ப்பணம் அனுட்டியாமல் நான்கு மாதப் பிறப்புகளுக்கே அது அனுட்டிப்பது முதலியன இங்கே நிதர்சனமாகக் கண்டுகொள்வது. ஸாரமாகச் சொல்லுகிறோம். பரவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரரூபேண ஐவகைப் பட்டிருக்கிற பகவத் ரூபங்களில் பரவ்யூஹ விபவங்கள் மூன்றும் தேசகால விப்ரகர்ஷத் தாலே நம்முடைய வழிபாடுகளுக்கு இலக்காகமாட்டாதவை. அந்தர்யாமி ரூபத்திலும் அர்ச்சாவதார ரூபத்திலுமே வழிபாடுகள் செய்யப் ப்ராப்தம். கர்மாநுஷ்டாநம் அந்தர்யாமி ஆராதனமாகும்; கைங்கரியாநுஷ்டானம் அர்ச்சாவதார ஆராதனமாகும். கர்மானுஷ்டானங்களில் அக்நி இந்திரன் ஸோமன் வருணன் ப்ரஜாபதி பசுபதி ப்ருஹஸ்பதி வாயு ஸூர்யன் என்கிற பல தேவதைகளின் பெயர்கள் பலகாலும் வரும். அந்தத் தேவதைகளை உத்தேசித்துச் செய்வதே கர்மாநுஷ்டான வேஷமாகும். இங்ஙனே தேவதாந்தரங்களுக்கு ஆராதனமாக அமைகின்ற கருமங்களானவை *இறுக்குமிறை யிறுத்துண்ண எவ்வுலகுக்கும் தன் மூர்த்தி நிறுத்தினான் தெய்வங்களாக அத்தெய்வ நாயகன் தானே* என்கிற திருவாய்மொழியின்படி அந்த தேவதைகளுக்கு அந்தர்யாமி யான எம்பெருமானிடமே போய்ச் சேருகின்றனவென்பது வேதாந்திகளின் ஸித்தாந்தம். ஆகவே கர்மாநுஷ்டானம் அந்தர்யாமியின் ஆராதனமென்னக் குறையில்லை. *ஒழிவில்கால மெல்லா முடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்* என்கிறபடியே கைங்கர்யாநுஷ்டானத்திற்கு அர்ச்சாவதாரமே இலக்கு என்பதில் விவரணம் அநபேக்ஷிதம்.

தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலையில் *நாட்டினான் தெய்வமெங்கும்* என்று கர்மாநுஷ்டான லக்ஷ்யத்தைச் சொல்லி உடனே *நல்லதோரருள்தன்னாலே காட்டினான் திருவரங்கம் உய்பவர்க்கு உய்யும் வண்ணம்* என்று கைங்கர்யாநுஷ்டான லக்ஷ்யத்தையும் சொல்லி, *கேட்டிரேநம்பிமீர்காள் கெருடவாகனனும் நிற்கச் சேட்டை தன்மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கின்றீரே* என்ற பின்னடிகளால் அந்தர்யாமி ஆராத னத்திற்காட்டில் அர்ச்சாவதார ஸமாராதனமே பாங்கு என்று காட்டியருளினார். மேலே *மேம்பொருள் போகவிட்டு......காம்பறத் தலைசிரைத்து உன்கடைத்தலை யிருந்துவாழும், சோம்பரை யுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே* என்ற பாட்டினால் அர்ச்சாவதார கைங்கர்ய ப்ரவணர்களின் பெருமையையும் அன்னவர்களிடத்து எம்பெருமானுக்குள்ள உவப்பின் மிகுதியையும் உரைத்தார். திருமங்கையாழ்வாரும் *உலகமேத்தும் கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினார் உய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே* என்ற பாசுரத்தை மிகவும் பாவகர்ப்பமாக அருளிச்செய்துள்ளார். இதில் மற்றையார் என்று கழித்தது கருமமே கண்ணாயிருப்பவர்களை. அர்ச்சாவதார ரஸிகர்கள் உஜ்ஜீவிக்கலாகுமே தவிர ஸ்மார்த்த கர்மகலாபங்களிலே ஊன்றிப் போருமவர்கள் உஜ்ஜீ விக்கப்போகாதென்று வாய்விட்டு அருளிச்செய்திருக்கிறார். அருளிச்செயல்களில் இங்ஙனே பல பாசுரங்கள் உள்ளன. இப்பாசுரங்களையே அல்லும்பகலும் சிந்தைசெய்து இவற்றின் அர்த்தங்களிலேயே ஊன்றிப்போரும் ஸதாசார்யர்களின் பரம்பரையில் கருமச்ரத்தை குன்றி கைங்கர்ய ருசியே மிக்கிருக்கின்றதென்றால் இது ப்ராப்தமே. இதில் பொருந்தாமை

யொன்றுமில்லே. கர்ம கலாபங்கள் தவிர வேருென்றையும் பேசாத வேதத்தையே உருப் போட்டு அஃதொன்றே போதுபோக்காயிருப்பாருடைய பரம்பரையிலே கர்மானுஷ் டானம் வலுத்திருக்கின்றதென்ருல் அதுவும் ப்ராப்தமே. கோவிலேக்காப்பவர்கள், குளத்தைக்காப்பவர்கள் என்ற வ்யவஹாரம் இன்று நேற்று வந்ததன்றே. "வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறைவேறிடுவித்தது" என்பது ஆசார்ய ஹ்ருதய திவ்யஸூக்தி.

பட்டர் ஸ்ரீரங்கராஜ ஸ்தவத்திலே "ஸ்ரீரங்கபாலநகர்மடா:" என்று மிகவழகிய வொரு ஸ்ரீஸூக்தி யருளியுள்ளார். இதனுல், கோவிலேக்காப்பதே நித்யகர்மாநுஷ்டான மென்று காட்டியருளினுராயிற்று. ஆனுலும் *ச்ருதிஸ் ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா* என்கிற பகவத் வசனத்தையும் குறிக்கொண்டு அவர்ஜநீயங்களான நித்ய நைமித்திக கருமங்களே விடாது அனுட்டித்துப் போருகிறேம். "ஜாத்யாச்ரம தீக்ஷைகளில் பேதிக்கும் தர்மங்கள் போலே அத்தாணிச் சேவகத்தில் பொதுவானது நழுவும்" என்பது ஆசார்ய ஹ்ருதய திவ்யஸூக்தி. அவ்விடத்திலே விசதவாக்சிகாமணிகளின் வியாக்கியானம் ஸேவிப்பது.

முக்கியமாக சாரீரகமீமாம்ஸையில் புருஷார்த்தாதிகரண ஸ்ரீபாஷ்யத்தை ஸ்ரீமதாண்டவன் ஸன்னிதியில் ஸேவித்துத் தெளியக்கடவது. மூன்ருமத்யாயத்தின் நாலாவது பாதத்தின் முதலதிகரணம் புருஷார்த்தாதிகரணம். இதில் பூர்வபக்ஷ ஸூத்ரங் களும் பல, ஸித்தாந்த ஸூத்ரங்களும் பல. *ஆசாரதர்சநாத்* என்பது பூர்வபக்ஷ ஸூத்ரங்களில் தலேயானது. *துல்யம் து தர்சநம்* என்பது ஸித்தாந்த ஸூத்ரங்களில் தலேயானது. எவ்விதமான பூர்வபக்ஷத்தின்மேல் எவ்விதமான ஸித்தாந்தம் அவதரித்த தென்பதை ஆண்டவன் ஸன்னிதியில் அறிந்துகொள்வது.

உபஸம்ஹாரம்;-பூர்வாசார்யர்களேக் கலிபுருஷனுடையவும் அவனுடைய துர்சக்தி களுடையவும் அவதாரமென்று ஒரு துராக்ரஹி யெழுதியது கண்மூடித்தனமென்று முடிந்தது. திருவயிந்திர புரத்தில் வேதபாராயண கக்ஷியென்றும் அத்யாபக கக்ஷியென்றும் இருபிளவு ஏற்பட்டது. எப்போது? தேவநாதன் ஸன்னிதி வடகலேயாக மாற்றப்பட்ட போது. மூந்தின கக்ஷியார் திவ்ய ப்ரபந்தத்தைக் கூசாமல் தூஷிக்கவேண்டியது. பிந்தின கக்ஷியார் அப்படியே வேதத்தை நிந்திக்க வேண்டியது. ப்ரக்ருத கலிபுருஷக் கட்டுரைக் காரர் எந்த வித்யையிலும் ப்ரவேசமில்லாதவர். வேத தூஷணம் செய்வதற்காக அத்யாபக கக்ஷியைச் சேர்ந்தவராக அபிநயம். ஆழ்வார்களிடத்தில் மிக்க பக்தியுள்ளவர்போல நடிப்பவர். அதனுலேயே, ஆழ்வாரை மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்தவராக வியாக்கியானித்தருளின பிள்ளான் முதலான பரமாசார்யர்களேக் கலிபுருஷாவதாரமென்று கர்ஹிக்கிருர். கலிகெடத் தோன்றிய கவிதார்க்கிக சிங்கமென்று இவர் கொண்டாடு மாசிரியர் சததூஷணியில் 65ஆம் வாதத்தின் முடிவில் ஆழ்வார்களின் விபவதசையைப் பற்றிப் பேசுகையில் "ஸ்த்ரீதர்மிண்யாம் ஆத்மஜநர்யாமிவ" என்று உவமை கொடுத் திருக்கிருர். மாதா நமஸ்கரிக்கத்தக்கவளாயினும் ரஜஸ்வலேயாயிருக்கும்போது எப்படி ஒதுக்கி வைக்கப்படுகிருளோ அப்படியே ஜகன்யஜாதியிற்பிறந்த ஆழ்வார்களும் விபவத்தில் ஒதுக்கிவைக்கப்பட்டிருந்ததாகவன்ருே எழுதியுள்ளார். ப்ராஹ்மணேத்தம ரான மதுரகவிகள் *மேவினேனவன்பொன்னடி மெய்ம்மெயே* என்று தாம் ஆழ்வார் திருவடிகளில் தலேமடுத்ததாக ஸத்யம் பண்ணுகிருர். திருப்பாணுழ்வாரைத் தோளில் தூக்கிவர லோகஸாரங்க மஹாமுனிகள் பகவந்நியமனம் பெற்ருர். ஸ்த்ரீதர்மிண்யாமென்ற ஸ்வாமி தாமே முநிவாஹன போகமென்று பெயரிட்டு உரையெழுதினுர். கலிகல்மஷ ப்ரவாஹம் தேங்கும் பள்ளம் எதுவென்பதை ப்ராமாணிகர் அறுதியிடக்கடவர். ... ✽

ஸ்ரீரஸ்து

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:. ஸ்ரீமத் வரவரமுநயே நம:.







திருமலை திருப்பதி. தீர்த்தகாரர். வாத்ஸ்ய. ரங்கநாதன் எழுதிய

# ஸந்தானகோபால ஸாஹஸோந்மூலனம்

1. ஸந்தானகோபால்துருக்திப்ருந்தம் நிர்மூலயேயம் நிபுணைர் வசோபி:,
   ப்ரச்நாந் சதம் தத்ப்ரதிவாதயோக்யாந் ப்ரகாசயே தாந் ப்ரதிவக்து ஸோயம்.

(சுலோகத்தின் கருத்து.) ஸந்தான கோபாலையங்காருடைய பலபல அஸதுக்திகளை அபேத்யமான வாக்குக்களாலே அகற்றப்போகிறேன். அவ்வையங்கார் விடைகூற வேண்டிய நூறுவினுக்களை இதில் மேலே விளக்குவேன். ஒவ்வொன்றுக்கும் விடை கூறுக.

2. பாம்பேபத்தநநிர்மிதே நவக்ருஹே ஸ்ரீவைஷ்ணவாநாம் ஸதாம்
   கேஷாஞ்சித் புரதஸ் ஸ ஏஷ கதக: ஸ்ரீவேங்கடாத்ரௌ ஸ்திதாம்,
   ஸ்ரீராமாநுஜதிவ்யமங்கலதநும் ப்ரஸ்துத்ய யத் ப்ரோக்தவாந்
   தத் ஸர்வஞ்ச துராக்ரஹோல்லஸிதமேவேதி ப்ரதிஷ்டாபயே.

(கருத்து.) பாம்பே மஹாநகரத்தில் நூதனமாக நிருமித்தவொரு பவனத்தில் சில ஸ்ரீ வைஷ்ணவர்களின் முன்பே இங்கு ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஐயங்கார், திருமலைமேல் திகழும் எம்பெருமானுருடைய திவ்யமங்கள விக்ரஹத்தை ப்ரஸ்தாவித்துச் சொன்ன தெல்லாம் வீணான ஆக்ரஹத்தின் விளைவேயென்பதைப் பேர்க்கவும் போதபடி நிலைநாட்டுகிறேனிங்கு. இதுதான் இங்கு முக்கியமான விஷயம்.

3. மாதுங்காநிலயநிவாஸிபண்டிதேந்த்ர: கச்சிந்மே வ்யலிகதஸத்யமந்தரேண,
   வ்ருத்தாந்தம், தமிஹ நிவேத்ய, வஸ்துதத்வம் பூயிஷ்டம் விசதயிதும்
   [ஸமுத்ஸுகோஸ்மி.

(கருத்து.) பாம்பே ஸமீபம் மாடுங்காவில் வாழும் ஒரு பேரறிஞர் அவ்விடத்துச் செய்தியை உள்ளபடி எனக்குத் தெரிவித்தார். அதனை நானிங்கு உலகறியத் தெரிவித்துப் பலபலவுண்மைப் பொருள்களை இந்த வியாஜத்தினுல் விளக்க விரும்புகின்றேன்.

மாடுங்காவில் வாழும் பெரியார் எனக்கெழுதியிருந்த கடிதம் வருமாறு:—

“......விண்ணப்பம், உபயகுசலம். புதுத் தெய்வம் கொண்டாடுந் தொண்டர்கள் சில வருஷகாலமாக எங்கும் மலிந்து வருவதுபோல இங்கும் மலிந்து வருவது

தெரிந்ததே. அவர்கள் இந்நகரில் ஒரு பவனம் நிர்மாணித்து அதில் சிலசில பண்டிதர்களைக்கொண்டு ஹரிகதா காலக்ஷேபங்கள் காலக்ஷேபங்கள் கச்சேரிகள் செய்வித்துவந்தார்களாம். ஸ்ரீ ஸந்தானகோபாலையங்காரென்றொருவர் திருப்பாவை சொல்லுகிறாரென்று கேள்விப்பட்டு ஒரு நாள் போயிருந்தேன். அன்று மாரிமலை முழஞ்சில் என்கிற பாட்டைச்சொல்லி நம்முடைய கவிதார்க்கிக சிங்கத்தின் அவதாரத்தை ஆண்டாள் முன்னுடியே அறிந்து சொல்லிவைத்திருக்கிறாள் என்று கூறிக்கொண்டுபோய் திடீரென்று திருமலையில் நடந்திருக்கிற அந்யாயம் உங்களுக்குத் தெரியாதே; அங்கு திருமலைமால் திருமணியாய் சிறக்கவந்த நம் தேசிகவள்ளலுடைய விக்ரஹத்தை பாஷ்யகார விக்ரஹமாக மாற்றி அவர் கையில் த்ரிதண்டத்தை மாட்டி காஷாயத்தையும் உடுத்தி அந்யாயம் பண்ணிவைத்திருக்கிறார்கள். எவ்விடத்திலும் பாஷ்யகாரர் அஞ்ஜலிஹஸ்தரா யிருப்பதுதானே நீங்களும் கண்டிருக்கிறீர்கள். திருமலையில் அப்படி கிடையாது. இடது கையில் ஸ்ரீகோசமும் வலது கையில் உபதேசமுத்திரையுமாயிருப்பதை நன்றாகப் பார்க்கலாம். ஸ்ரீகோசத்தோடு கூடிய இடது கை தெரியாதபடிக்கு காஷாயத்தைப் போட்டு மூடிவிட்டார்கள். இதை ஒவ்வொருவரும் கவனிக்கவேண்டும். நான் இவ்வூரில் இருக்கும்போதே இங்கிருந்து இருவர் ஏரப்ளானில் போய் பார்த்துவர வேண்டியது. போகவரச் செலவு எவ்வளவானாலும் நான் இதோ கொடுத்து விடுகிறேன். வேதாந்த தேசிக விக்ரஹத்தை இவர்கள் மாறுபடுத்தி விட்டாலும் திருவேங்கடமுடையானுடைய நாமாவளியில் நம் தேசிகன் புகுந்திருப்பதை இவர்கள் மாற்ற முடியாதன்றோ. இத் தென்கலையார்கள் எங்கும் செய்து வருகிற அக்கிரமங்களைச் சொல்லி முடியாது. வடகலையாசாரிய புருஷர்களுக்கு ஒரு மரியாதையுமில்லாதபடி அதர்க்கணமான காரியங்களைச் செய்து வருகிறார்கள்......என்று நரசிங்க உக்கிரத்துக்கும் மேலாக சபையே நடுங்கும்படி அட்டகாசமாக கர்ஜித்துப் பேசினார். இதுவரையில் ஒருவர் காதிலும் விழாத செய்தியாயிருக்கிறதே யென்று ஒருவர்க்கொருவர் பேசிக் கொண்டார்கள். தன்னைப் பேசச் செய்தவர்களுடைய த்ருப்திக்காக இப்படி பேசுகிறாரா? தென்கலையாரை தூஷிப்பதற்கென்று பேசுகிறாரா என்றும் சிலர் பேசிக்கொண்டார்கள். அந்த வகுப்பாருங்கூட இதை ஆமோதித்ததாகத் தெரிய வில்லை. நடந்த மார்கழி மாதத்தில் இதே நபர் மயிலாப்பூர் ஸ்ரீநிவாஸப் பெருமாள் ஸந்நிதியில் இப்பாட்டையே சொல்லி காதுகொண்டு கேட்க முடியாதபடி திட்டி னாரென்றும், இவரைச் சேர்ந்தவர்களே பலர் இது என்ன பேத்தல் என்று சொல்லிக் கொண்டு எழுந்து போய்விட்டார்களென்றும் அங்கே ப்ரஸ்தாபம் வந்தது. எனக்கும் அதிக நேரம் இருக்கப்பிடிக்காமல் எழுந்து வந்துவிட்டேன். மற்ற தெல்லாம் எப்படியாவது போகட்டும்; திருமலையில் எழுந்தருளியிருக்கிற உடையவர் திருமேனியில் இவர் சொல்லுகிறபடி ஏதாவது விபரீதம் காண்பதுண்டோ? இதைப் பற்றி உலகுக்கும் தெரியும்படி விளக்கம் செய்தால் நல்லது. M. A. Parthasarathi"

இது எனக்குக் கிடைத்த கடிதம். என்னுடைய உறவினர் மற்றும் சிலரும் பாம்பே நகரத்திலிருப்பதால் இதே விஷயத்தை அவர்களும் எழுதியிருந்தார்கள். நான் பாதிநாள் திருப்பதியிலும், பாதிநாள் திருமலையிலும் இருந்துகொண்டு கைங்கரியம் செய்பவனாதலால் ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஜீயர்ஸ்வாமிகளிடமும் கேட்ட உண்மைகளை வெளியிடுகிறேன்.

4. ஸ்ரீபதபுரவாஸ்தவ்யோ வாத்ஸ்ய ஸ்ரீபாஷ்யகாரஸூதரங்க:,
ஸந்தானகோபநாம்நஸ் ஸாஹஸநிர்மூலனம் ஸமாரபதே.
ஸ்ரீமதண்ணங்கரார்யாணும் ஸ்ரீஸூக்தீநாம் ஸஹஸ்ரத:,
ஸமாஹ்ருத்ய சதம் ப்ரச்நாந் ஸந்தாநாய ஸமர்ப்பயே.

புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தில் வெகுகாலம் தானுதிகாரியாயிருந்து தற்காலம் வைகுண்டவாஸியான பிரபல வித்வான். காளிரங்காசாரியர் ஸ்வாமியால் ஸகலபூர்வாசார்ய ஸமுதாயாவதாரரென்று பிருதுசாத்தப்பெற்ற ஸ்ரீகாஞ்சி. பிரதிவாதிபயங்கரம் ஸ்வாமியின் ஆயிரக்கணக்கான திவ்ய ஸூக்திகளில் காணக்கிடைக்காத விஷயம் எதுவுமே கிடையாதென்பது ஜகத்ப்ரஸித்தமாதலால் அந்த ஸ்ரீஸூக்திகளிலிருந்து நூறு வினுக்களைத் திரட்டி ஸந்தானமய்யங்காருக்கு ஸமர்ப்பிக்கப்போகிறேன். இவர் ஏகாகியாகவோ ஸயூத்ய பண்டித ஸஹாயராகவோ எல்லா வினுக்களுக்கும் விடையிறுக்கட்டும். திருமலை யெம்பெருமானுர் திவ்யமங்கள விக்ரஹ விஷயமான தெளிவை முன்னம் பிறப்பிக்கிறேன்.

## நூறு வினுக்களின் தொடக்கம்

1. திருமலையில் எம்பெருமானுரொருவர் தவிர வேறு எந்த ஆழ்வாராசாரியர்க்கும் திருக்கோலம் கிடையாதென்பது உலகமறிந்தது. எம்பெருமானுர்க்கு மட்டும் இங்குத் திருக்கோலம் அமைந்ததற்கு முக்கியமாக இரண்டு காரணங்கள் பெரியார் கூறக் கேட்டிருக்கிறேன். (1) "அப்பனுக்குச் சங்காழி யளித்தருளும் பெருமாள்" என்று உடையவர்க்கு ப்ரஸித்தமாயிருக்கின்ற கட்டியத்தின்படி திருமலை சீர்மைபெற்றதே ஸ்வாமியினுலென்பது நிர்விவாதம். (2) நம்முடைய தர்சனத்திற்கு ஸ்ரீ பாஷ்யத்திற் காட்டிலும் மிக முக்கியமான திவ்யக்ரந்தம் வேதார்த்த ஸங்க்ரஹம். இது திருவவதரித்தது திருமலையில் திருவேங்கடமுடையான் திருமுன்பே உபந்யாஸரூபமாக என்பது "ஸ்ரீபாஷ்யக்ருதுபந்யஸ்தோ ய: ஸ்ரீசைலபதே: புர:, வேதார்த்த ஸங்க்ரஹ:" என்று தத்வ்யாக்க்யானேபக்ரமத்தில் ஸ்ரீச்ருதப்ரகாசிகாபட்டர் இட்டருளின ச்லோகத்தினுல் உலகமறிந்தது. ஆக இவ்விரண்டு காரணங்களை முன்னிட்டு அங்கேதிருமலையனந்தாழ்வான் திருப்ரதிஷ்டை செய்தருளினது எம்பெருமானுர் திருக்கோலமென்பதை மறுக்கவல்லீரா?

2. எம்பெருமானுர்க்கு எங்கும் அஞ்ஜலி முத்திரையேயொழிய உபதேச முத்திரை கிடையாதென்று ப்ரதிஜ்ஞை பண்ணுமிந்த ஐயங்கார் நிகமாந்தகுரு ஸூக்திகந்தமுமறியாரென்பதில் ஐயமுண்டோ? யதிராஜ ஸப்ததியில் *உத்க்ருஹ்ணதீமுபநிஷத்ஸூநிகூடமர்த்தம் சித்தே நிவேசயிதும் அல்பதியாம் ஸ்வயம் ந:, பச்யேம லக்ஷ்மணமுநே: ப்ரதிபந்நஹஸ்தாம் உந்நித்ரபத்மஸூபகாம் உபதேசமுத்ராம்* என்றருளிச் செய்திருப்பது கரநாரவிந்த ஸஹோதரமான ஒரு திருக்கோலத்தைப்பற்றி யென்ரு இவ்வையங்கார் நினைத்திருப்பது.' ஆழ்வாராசாரியர்களின் திருக்கைத்தலமுத்ரா விசேஷங்கள் எத்தனை ஸ்தலங்களில் எத்தனை விதமாக அமைந்திருக்கின்றன வென்பதை இவரறிந்தாரா? ஐயங்காரையே விளித்துக் கேட்கிறேன். நீர் ஸ்ரீ காஞ்சியில் வந்து உடையவருடைய மூலத் திருக்கோலத்தையும், உத்ஸவத் திருமேனியையும் ஸேவித்திருக்கிறீரா? அல்லது இனியாவது ஸேவிக்கப்பெறுவீரா? ஆர்ஜவத்துடன் விடை கூறும்.

3. திருமலையெம்பெருமானுர் திருக்கோலத்தில் இடத்திருக்கைத்தலம் ஸ்ரீகோசாலங் க்ருதமாயிருக்கிற தென்றும் அதைக் காஷாயத்தினுல் மறைத்திட்டு வைத்திருக்கிருர் களென்றும் ஸந்தானரே! நீர் சொல்லுவது *த்ருஷ்டேஅபஹ்நுத்யபாவாத்* என்கிற நிகமாந்தகுரு ஸூக்தியை நெடுந்தூரத்திலன்ருே கொண்டு தள்ளுகின்றது. நைஷதத்தில் சந்த்ரோபாலம்பத்தில் *அநுபவம் வசஸா ஸகி லும்பஸி* என்கிருள் தமயந்தி. தோழி யானவள் *அயம் அசண்டமரீசிருதஞ்சதி* என்று, அம்மா! இதோ குளிர்ந்த சந்திரன் உதிக்கிருன் காண், தாபமெல்லாம் தணிந்திடும், வெருவாதே. என்னு நிற்க, இவள் *ஜ்வலயதி ஸ்புடமாதபமுர்முரை: அநுபவம் வசஸா ஸகி லும்பஸி* என்கிருள். இதேபோல இவ்வையங்காரும் 'என்னநுபவமிப்படித்தான்' என்று ஹடம் பிடிக்கலா மத்தனை. சந்திரனைக் கண்டு தமயந்தி பட்டபாட்டை இவ்வையங்கார் திருமலையில் திகழும் யதிராஜசந்திரன்திருக்கோலத்தைக் கண்டு படுகிருர். *பித்தக்நமஞ்ஜநமநாபுஷி ஜாது நேத்ரே நைவ ப்ரபாபிரபி சங்க ஸிதத்வபுத்தி:* என்று கூரத்தாழ்வானருளிச் செய்கிற கணக்கிலே இவருடைய மனக்களங்கம் அகன்ருெழியும் வரையில் இவருடைய மதி செவ்வைப்படாது. ஸந்தானரே! இதை ஒப்புக்கொள்கிறீரா? மறுக்கிறீரா?

4. 'எல்லாங்கிடக்க எருதுக்குச் சீமந்தம்' என்ற அம்மையார் வசனத்தின்படி ஆழ்வாராசாரியர்களெல்லாருமிருக்க இங்கே நிகமாந்த குருவுக்கு என்ன ப்ரஸக்தி? என்று கேட்டாராமொருவர்; வேங்கடேச கண்டாவதாரமல்லவா? என்ருராம். இங்குற்ற உண்மையை உணருங்கள். ஒன்ருன ஸ்வாமி தாமே ஸங்கல்ப ஸூர்யோதய ப்ரஸ்தா வனையில் "உத்ப்ரேக்ஷ்யதே புதஜனைருபபத்திபூம்நா கண்டா ஹரேஸ் ஸமஜநிஷ்ட யதாத்மநேதி" என்று பணித்து வைத்தார். ஸ்வாமியின் பரமதநிரஸனத் திறமையைக் கண்டு வித்வான்கள் அஸுரராக்ஷஸ நிரஸன க்ஷமமான விஷ்ணுகண்டைதான் இங்ஙனே வடிவெடுத்ததோவென்று உத்ப்ரேக்ஷிக்கிருர்கள்—என்று சொல்லியுள்ளார். யதார்த்த கதனத்தை உத்ப்ரேக்ஷா சப்தத்தையிட்டு ஒருவரும் வழங்கார். "ஸம்பாவநா ஸ்யாத் உத்ப்ரேக்ஷா வஸ்துஹேதுபலாத்மநா" என்று சந்த்ராலோகம். வஸ்தூத்ப்ரேக்ஷை யென்றும் ஹேதூத்ப்ரேக்ஷையென்றும் பலோத்ப்ரேக்ஷையென்றும் மூவகையாகச் சொல்லப்படுகிறவிதில் யதார்த்த கீர்த்தனமென்பது தலைகாட்டமாட்டாது. "தூமஸ் தோமம் தமச் சங்கே கோகீவிரஹ சுஷ்மணும்" என்ருல் அங்கு சுஷ்மாவுமில்லை, தூமமு மில்லை என்பதை அறியாதாரில்லையே. "மந்யே சங்கே த்ருவம் ப்ராயோ நூநமித்யேவ மாதிபி:, உத்ப்ரேக்ஷா வ்யஜ்யதே சப்தை: இவசப்தோபி தாத்ருச:" என்றனர் ஆலங்காரி கர்கள். அப்படிப்பட்ட வ்யஞ்ஜகங்கள் இங்கு ஒன்றுமில்லை; ஸ்வாமி தாமே கண்டரவேண 'உத்ப்ரேக்ஷ்யதே' என்றருளினர். 'உபபத்திபூம்நா' என்றிருக்கிறதேயென்னவேண்டா; இத்தகைய உத்ப்ரேக்ஷைக்கு மிகுந்த உபபத்தியுண்டென்ற வளவால் என்னலாபமாகும். அநுபபத்திகபளிதமான உத்ப்ரேக்ஷை அசடுதட்டியன்ருே இருக்கும். உள்ளதை உள்ளபடியுரைத்தால் அதை உத்ப்ரேக்ஷையென்று உன்மத்தனும் சொல்லான். ஸந்தானரே! உலகிலுள்ள வாங்மயங்களில் ஓரிடமெடுத்துக்காட்ட முடியுமா உம்மால்?

5. ஸ்வாமியின் இந்த ஸொந்த ஸூக்திமட்டுமேயன்று; பின்புள்ளாரும் "வேங்கடேசாவதாரோயம் தத்கண்டாம்சோதவா பவேத்; யதீந்த்ராம்சோதவேத்யேவம் விதர்க்யாயாஸ்து மங்களம்." என்ருர்கள். திருவேங்கடமுடையானே அவதரித்தாரோ?

அன்றி அவருடைய திருமணியே அவதரித்ததோ, அன்றிக்கே ஸ்ரீராமாநுஜரே அவதரித்தாரோ? என்று சங்கிக்கும்படியாக விருந்ததாய்ச் சொன்னதத்தனையொழிய நிர்ணயோக்தி ஏதுமில்லை. இவ்வளவையே கொண்டு ஸ்வாமியின் திருத்தாயாருடைய கருவில் விஷ்ணுகண்டை பன்னிரண்டு ஸம்வத்ஸரம் வாஸம் பண்ணினதாக ஒரு கதை சொல்லிவருகிறீர்கள். திருவனந்தாழ்வானவதாரம், விஷ்வக்ஸேநாவதாரம், வைநதேயாவதாரம் என்றிப்புடைகளிலே சொல்லிப் போருமிடங்களிலெல்லாம் ஆதிசேஷாதிகளுக்கு கர்ப்பவாஸம் கல்பிக்க வேண்டியதுதானே? இப்படி மூலவிருத்தமும் அஸம்பத்தமுமான ஐதிஹ்யத்தைத் தாங்கள் கல்பனை செய்துவிட்டு "விதுஷாமபி மோஹமாவஹந்தோ விததைதிஹ்யஸஹஸ்ரவர்ணநேந" என்று, ப்ராமாணிகங்களான இதிஹாஸங்களைச் சொல்லி வருமவர்களைப் பழிப்பதே பணியாயிருந்து வருகிறீர்கள். இதில் ஸந்தேஹமுண்டோ? ஸந்தான கோபாலரே! ஸத்யமாய்ச் சொல்லும்.

6. வெண்கல மணியோ வெள்ளி மணியோ கருக்குழியினுள்ளே புகுந்து பன்னிரண்டாண்டு வாஸம் பண்ணிற்றென்று நிஷ்கலங்கமானவொரு பிரபல ப்ரமாணம் காட்டிற்றென்றால் எவரும் அஞ்ஜலிபந்தத்துடன் அங்கீகரிக்கவேண்டியதேயாகும். கும்பத்திலிருந்து அகஸ்த்யர் ஆவிர்ப்பவித்தது, அவர் கடலை முற்றப் பருகினது, உயர வளர்ந்த விந்தியமலையை ஸ்தம்பிக்கச் செய்தது. இல்வலவாதாபிகளென்னு மசுரர்களைக் கபளீகரித்தது முதலான சரிதைகளை அஸம்பவபராஹதங்களென்று ஒதுக்குவாரில்லையே. ஏன்? ப்ரபலப்ரமாண ஸித்தியாலே. அதுபோல உங்களுக்கு ப்ரபலப்ரமாணமென்னவுள்ளதென்று கேட்டால் நீங்கள் கோவில்களில் புகுந்து சண்டையிட ஆரம்பித்தபோது துணிந்து கல்பனைசெய்தவைகளில் ஒன்றான குருபரம்பராப்ரபாவமொன்றல்லது வேறொன்றைக் காட்டமுடியுமா? அதைப்பற்றி மேலேயெடுத்துக் கொள்வோம். விஷ்ணுக்கண்டையின் சக்தி கர்ப்பத்தினுள்ளே ஆவேசித்தது என்கிற தாத்பர்யங்கொண்டு கண்டாவதாரர் என்று பெரியார்கள் எழுதியிருக்கலாமென்று உண்மையறிந்துகொள்ளுவீரா? உண்மையில் திருமணி பன்னிரண்டாண்டு கர்ப்பவாஸம் பண்ணியிருந்தால் அக்காலத்திலுள்ளவர்களுக்கு இது தெரியாமலிருந்திருக்குமா? தெரிந்திருந்தால் "தத்கண்டாம்ச: அதவா பவேத் இதி விதர்க்யாய" என்று சுலோகம் பண்ணுவரா? இதற்கு விடை கூறுவீரா ஸந்தானரே!

7. திருமலையுடையவர்க்கு ஸ்ரீகோசத்தோடு கூடிய இடது கை தெரியாதபடிக்கு காஷாயத்தையிட்டு மறைத்திட்டார்களென்பது ப்ரத்யக்ஷாபலாபமென்பதை ஸ்பஷ்டமாக மேலே தெரிந்துகொள்வீர்; இதற்குமேல் "வேதாந்ததேசிக விக்ரஹத்தை இவர்கள் மாறுபடுத்திவிட்டாலும் திருவேங்கடமுடையானுடைய நாமாவளியில் நம் தேசிகன் புகுந்திருப்பதை இவர்கள் மாற்றமுடியாதன்றோ" என்று பாம்பேஸபையில் பேசியுள்ளீர். அது என்ன? என்று உம்மையே நேரில் கேட்கவேணும். "க்ருஷ்ணுக்க்யவிப்ர வேதாந்ததேசிகத்வ ப்ரதாயச" = க்ருஷ்ணசர்மா என்கிற ஒரு பிராமணனுக்கு வேதாந்த தேசிகத்வம் கொடுத்தார் திருவேங்கடமுடையானென்றுள்ளது. இதனால், திருமணி வந்து தேசிகனாகப் பிறக்கவில்லை; க்ருஷ்ணசாரென்கிறவொருவரே தேசிகனாகப் பிறந்தாரென்றுதான் நீர் ஸ்தாபித்தபடியாகிறது. "விநாயகம் ப்ரகுர்வாணோ ரசயாமாஸ வாநரம்" என்னும்படி யாயிற்றென்று தெரிந்துகொண்டீரா? ஸந்தானரே!

8. இவ்விடத்தில் உலகமறிந்த தத்துவங்கேளீர். திருமலையில் மணவாள மாமுனிகள் காலந்தொடங்கி ஸுப்ரபாதமும் ப்ரபத்திமங்களாசாஸனங்களும் தினப்படி ப்ரபாத காலத்தில் அவிச்சின்னமாக அநுஸந்திக்கப்பட்டுவருகிறது. "ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌ தே" என்றும், "ஸ்ரீமத்ஸுந்தரஜாமாத்ரு முநிமாநஸவாஸிநே" என்றும் ஏரார்விசும்பிலும் இனிது கேட்க அநுஸந்தித்து வருகிறார்கள். யாவரென்றால், தென் கலையார் வடகலையார் ஸ்மார்த்தர் மாத்வர் சைவர் யாவரும். இடையில் சிலர் இந்த ச்லோகங்களை நாங்கள் சொல்லமாட்டோமென்றார்கள்; விச்வாமித்ரஸ்ருஷ்டிபண்ணவும் சிலர் துணிந்தார்கள். பிறகு என்னுயிற்றென்பதை ஸந்தானரே! நீர் கேட்டுந் தெரிந்து கொள்ளவேண்டும். திருப்பதியில் ஸுப்ரஸித்த மஹநீயராக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் கபிஸ்தலம் தேசிகாசார்ய ஸ்வாமியே அன்னவர்களைக் கண்டித்தொழித்தாரென்பது ஸுப்ரஸித்தம். "இருவர் ஏரப்ளானில் திருமலைக்குப் போய்வருவதற்கு ஆகிற செலவை நானே கொடுக்கிறேன் என்று கர்ஜித்த ஸந்தான கோபாலரே! இந்த நிகழ்ச்சியைத் தெரிந்து கொள்வதற்கும் காதுகுளிரக்கேட்டு ஜன்மஸாபல்யமடைவதற்கும் நீரே நேராகச் செல்லலாம். ஆப்தர்களான சிலரையும் கூடவழைத்துப் போகலாம். உடையவர் திருக்கோலத்தைக் காஷாயம்களைந்தோ யதாவஸ்திதஸந்நிவேசமாகவோ ஸேவித்தும் வரலாம். ஸந்தானரே! சொல்லும், என்றைக்குப் புறப்படுவீர்?

9. ஸந்தானரே! இதற்குமேல் நீர் பேசியதாவது, "தென்கலையார்கள் எங்கும் செய்து வருகிற அக்கிரமங்களைச் சொல்லி முடியாது, வடகலையாசர்ய புருஷர்களுக்கு ஒரு திவ்யதேசத்திலும் ஒரு மரியாதையுமில்லாதபடி அதர்க்கணமான காரியங்களைச் செய்து வருகிறார்கள்" என்பதாம். ஓய்! ஒரு விவேகி பேசக்கூடிய பேச்சா இது? மர்யாதை ஏற்படுத்துவதும் அதை இல்லை செய்வதும் சில காபுருஷர்களுக்கு அதீனமாகுமா? வடகலையாசார்ய புருஷர்களுக்கு ஒரு திவ்யதேசத்திலும் மரியாதையில்லையென்பதும் கிடையாது. பண்டைக்காலத்தில் இல்லாமற்போனாலும் நாளடைவில் எப்படியோ காணப்பட்டுத்தானே வருகிறது. திருமலை திருப்பதியில் தோழப்பாசார் வடகலைத் திருமணிட்டுக்கொண்டுதானே மரியாதை யநுபவித்துவருகிறார். ஸ்ரீரங்கத்தில் ஒரு ஆசார்ய புருஷரும் வடகலைத் திருமணிட்டு மரியாதை யநுபவிப்பவரில்லையே! என்கிறீரா?

10. ஸந்தானரே! உமக்குத் துணைவரான D. T. தாதாசாரியார் இத்தகைய அதர்க்கணச் செயல்களை உடையவரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து செய்திட்டதாக சிலாசாஸனம் செய்திருக்கிறார். நீரோ பொதுவாகத் தென்கலையார்கள் செய்துவருகிறார்க ளென்கிறீர். அவரும் நீரும் சேர்ந்து சர்ச்சைசெய்து இந்த வியவஹாரத்தைத் தீர்த்துக் கொள்வது நலம். அப்படியே செய்கிறீரா? என்றைக்குச் செய்வீர்? சொல்லியேயாக வேணும்.

11. D. T. தாதாசாரியர் சிலாசாஸனம் செய்துவைத்திருப்பது எங்கேயென்று பாலிசனும் கேட்கமாட்டான்; ஏனென்னில்; இது ஸுப்ரஸித்தமான விஷயமாதலால். ஆனாலும் அதை இங்கு விவரித்தேயாகவேண்டும். காஞ்சிபுரம் ஸ்வாமியினுடைய ஒரு நூலுக்கு D. T. T. ஒரு பதில் எழுதினதும் அதற்கு ஸம்ப்ரதாயப்ரதீபமென்று பெயர் என்பதும், அதன்மேல் ப்ரதீபசதகோடிமுதலான க்ரந்தங்கள் தோன்றியிருக்கின்றன

வென்பதும் உலகமறிந்த விஷயம். ஸமீபத்தில் வெளிவந்த ஸ்ரீராமாநுஜன் 223-ல் பத்ராதிபரான காஞ்சீபுரம் ஸ்வாமி வெளியிட்டிருப்பதை இங்கு அநுவதிக்கிறேன்:—

"திருப்பதியில் வாழும் உ.வே. பண்டிதராஜ. D. T. தாதாசாரியர் ஸ்வாமி ஒன்று வெளியிட்டிருந்தார். நாம் எழுதியிருந்த வொரு நூலில்—"ஸ்ரீ ராமாநுஜர் செங்கோல் செலுத்தினவிடமாயும் பூலோக வைகுண்டமாயும் விளங்குகின்ற ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய புருஷர்களென்றும் ஸ்தலத்தார்களென்றும் தீர்த்தகாரர்களென்றும் வழங்கப்படுகிறவர் களனைவரும் ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர ஸம்ப்ரதாயஸ்தர்களாகவே யிருக்கின்றார்களே யன்றி வேறு வகுப்பினரில்லையே; இதற்குக் காரணமென்ன? அந்த ஸ்ரீ ராமாநுஜரே திருநாராயண புரத்தைச் சீர்திருத்தி அங்கே ஸ்தானிகர்களாக ஐம்பத்திருவர் என்பவர்களை ஏற்படுத்தி னாரே, அவர்களிலும் இதர ஸம்ப்ரதாயஸ்தர்களைப் புகுத்தாமலிருப்பதற்கும் என்ன காரணம்?" என்று கேட்டிருந்தோம். இதற்கு D.T.T. வடமொழியில் தாமெழுதியச்சிட்டு வெளியிட்டுள்ள ஸம்ப்ரதாய ப்ரதீபமென்னும் சிறு நூலில் பதில் எழுதியுள்ளார். அவருடைய ஸம்ஸ்க்ருத வாக்யத்தையே அப்படியே வெளியிடுகிறேன்.—

"நிர்ப்பந்தாதேவ க்ருதபுண்ட்ரவிபர்யாஸாஸ் ஸர்வே ஸ்ரீரங்கதேவஸ்தாந புருஷா:; இதம் தத்க்ஷேத்ரஸம்பந்தி ஐதிஹ்யம் அநுவர்த்ததே: ச்ராத்தே நிமந்த்ரிதை: கில போஜநாந்தே த்ருப்திகதநாவஸரே பகவதாலய குஞ்சி காஸு தத்தாஸ்வேவ த்ருப்தோஸ்மீதி கதயிஷ்யாம இதி ச்ராத்தகர்த்தாரம் நிர்ப்பத்ய தஸ்மாத் தேவஸ்தாநாதிகார ஆச்சிந்ந இதி."

என்பது அந்த D. T. T. ஸ்வாமியின் ஸ்வஹஸ்தலிகிதம். (இதன் தமிழ் மொழிபெயர்ப்பு கேண்மின்)—"ஸ்ரீரங்க தேவஸ்தான புருஷர்கள் யாவரும் நிர்ப்பந்தப்படுத்தியே திருமண்காப்பு மாற்றப் பெற்றவர்கள். அந்த ஸ்தலத்தைப்பற்றி ஓர் ஐதிஹ்யம் இங்ஙனே நெடுநாளாக வழங்கி வருகின்றது. ச்ராத்தத்தில் நிமந்த்ரிக்கப்பட்டிருந்தவர்கள் போஜன முடிவில் த்ருப்தி சொல்லவேண்டிய ஸமயத்தில் 'கோவில் சாவிகளைக் கொடுத்தால்தான் த்ருப்தோஸ்மி சொல்லுவோம்' என்று ச்ராத்தகர்த்தாவை நிர்ப்பந்தித்தே அவரிடமிருந்த தேவஸ்தாநாதிகாரத்தைப் பறித்துக்கொண்டார்கள்" என்பதே. ஆரியர்காள்! இங்க ஐதிஹ்யம் உண்மையானதே யொழியக் கல்பிதமன்று. கோயிலொழுகிலும் கூரத்தாழ்வான் வைபவத்திலும் ராமாநுஜார்ய திவ்ய சரிதையிலும் காணப்படுவதே. ச்ராத்தகர்த்தா திருவரங்கத்தமுதனார்; நிமந்த்ரிதர் கூரத்தாழ்வான். கோயில் திறவுகோல்களைப் பெற்றுக் கொண்டு த்ருப்தோஸ்மி சொன்னவர் அவரே. த்ரிஜகத் ப்ரஸித்தமான இந்த ஐதிஹ்யத்தை இவர் எடுத்தெழுதியிருப்பதில் பிசகில்லை. புண்ட்ரவிபர்யயம் செய்வதற்காகவே இப்படிப் பட்ட சூது நடந்ததாக D.T. ஸ்வாமி எழுதியிருப்பதைப்பற்றித் தடஸ்த மஹான்கள்தாம் ஆலோசிக்கவேணும். ஸ்ரீ ராமாநுஜர் காலத்திற்கு முன்னே ஸ்ரீரங்க தேவஸ்தானமும் அவ்விடத்துப் பெரியார்களும் வடகலைப் புண்ட்ரமணிந்திருந்ததாகவும், ஸ்ரீ ராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்தே மாறுபாட்டை விளைத்ததாகவும் நிர்ணயித்து விட்டாரிவர். இதற்கடுத்தபடி மற்றொன்றும் எழுதியுள்ளாரிவர். (அதாவது) மாறிப்போன திவ்ய தேசங்களை மறுபடியும் பழைய நிலைமைக்குக் கொண்டுவர வைதிகர்கள் முயற்சிசெய்து வருகிறார்கள்; அந்த முயற்சி சிலவிடங்களில் பலிக்கிறது, சிலவிடங்களில் பலிக்காமல்

போகிறது" என்று. இப்படி இவர் எழுதி வெளியிட்டு இருபது வருஷமாகிறது. இப்போது இதை நாம் புதிதாக எடுத்துக்காட்டவில்லை. தாம் இப்படி எழுதியிருக்க வில்லையென்று கூறவழியில்லை. ஸ்ரீராமாநுஜருடைய வாழிதிருநாமத்தில் *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே* என்று அநுஸந்திக்கப்பட்டு வருகிற படியால் 'வடகலையாயிருந்தவற்றை யெல்லாம் தென்கலையாக்கி வைத்ததுதான் ராமாநுஜர் செய்த திருத்தம்' என்று இவர் பிரவசனம் செய்து வருகிறார். ஆகவேதான் ராமாநுஜ தர்சநவ்யபதேசத்தில் பகைகொண்டு தேசிகதர்சநவ்யபதேச மொன்றைக் கிளப்பி யுள்ளார்கள். அதிலும் உட்புகுந்து விமர்சிக்கப் புக்கவர்கள் அதையும் மாற்ற மநோரதிக் கிறார்கள்" இவ்வளவாக அநுவாத வாக்கியங்கள் முடிந்துவிட்டன. இதை ஒவ்வொருவரும் ஆரஅமர நோக்கவேணும். ஸந்தானரே! இதை நீர் ஆமோதிக்கிறீரா? ஆக்ஷேபிக்கிறீரா?

12. மத்யஸ்த மஹநீயர்களே! உடையவர் விஷயத்தில் இவர்களுக்கு உள்ளே யிருக்கிற கொதிப்பு இவர்கள் தம்மாலும் அடக்கமுடியாதபடியல்லவா வெளிவந்து விட்டது. ஏதோ ப்ராமாதிகமாக அப்படியெழுதிவிட்டேனென்று அவராவது மெழுக லாம்; அவரெழுதியது எல்லார்க்குமுடன்பாடன்று, என்று வேறு சிலராவது வரைந்திருக்க லாம். இரண்டுமில்லை. ஸந்தானரே! உங்களுக்கு உடையவர்மீது மாச்சரியம் அளவு கடந்திருக்கின்றதென்பது மறைக்கவும் மறுக்கவும் முடியாதபடி வியக்தமாகவன்றே விளங்குகின்றது. நீர் பாம்பே நகரத்தில் பேசியது இந்த மாச்சரியத்தைத்தானே நிலைநாட்டு கின்றது. இல்லையேல் உடையவர் திருக்கோலத்தில் உமக்கு ஏதுக்கு விப்ரதிபத்தி யுண்டாகவேணும்? இதைப்பற்றி அவசியம் விடையிறுக்கவேணும் நீர்.

13. பிள்ளைலோகாசாரியரோ மணவாளமாமுனிகளோ அங்கு எழுந்தருளி யிருக்கிறாரென்றால் ஆம் ஊம் என்னவேணும். உபபத்திபுஷ்கலமாக உடையவர் திருக்கோலம் விளங்காநிற்க, அதில் ஒரு விப்ரதிபத்தி கொள்வதும் உக்ராவேசங்கொண்டு தூஷிப்பதுமானால் அந்தோ! உம்மை எந்த வகுப்பில் சேர்ப்பது? "ப்ரஹ்மாபி நரம் ந ரஞ்ஜயதி" என்ற வகுப்பில் சேருகிறேனென்கிறீரா?

14. ஸந்தான கோபாலரே! ஆளவந்தாரோடு உடையவரோடு தேசிகரோடு பிள்ளை லோகாசாரியரோடு மணவாளமாமுனிகளோடு ஒரு வாசியில்லையுங்களுக்கென்பதை லைட்ஹவுஸ்வெளிச்சத்திற்கும் மேலானவெளிச்சமிட்டுக் காட்டப்போகிறேன். இதை மறுக்க யாரும் முன் வரலாம்—சரக்கிருந்தால். இதில் நூறு வினாக்கள் இடுவதாக ப்ரதிஜ்ஞைசெய்து வினவி வருகிறேன். இந்த வினாக்களால் அறுதியிடும் விஷயங்கள் நான்கு. அவற்றில் தலையான விஷயம்—தேசிகரை நீங்கள் உங்களுக்கு ஆசாரியராக இழுத்துப்போட்டுக் கொண்டது மிக நவீன காலத்திலென்பது. இதைக் கல்வெட்டாக்க வல்ல மற்றைய மூன்று விஷயங்களாவன—(1) நீங்கள் ஆதரிக்கும் அர்த்தங்களும் ஆசரணையும் தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளுக்கு நேர்விருத்தமென்பது. (2) தேசிக ஸ்ரீஸூக்திகளில் நாம் கேட்கிற கேள்விகளில் ஒன்றுக்குக்கூட உங்களால் விடையிறுக்க முடியாதென்பது. (3) நீங்கள் போட்டிச் சண்டையிடுவதற்காகப் பலபலவும் கற்பனை செய்து கொண்டீர்களென்பது. ஆக இந்த விஷயங்களை யெல்லாம் உலகமறிய ஸ்தாபிக்க வேண்டியே வினாக்களை ஸமர்ப்பித்து வருகின்றேன். இவற்றுக்கு நீர் விடையிறுப்பீரா?

15. ஸந்தான கோபாலரே! பாம்பேயிலிருப்பவர்களுக்கு ஏரப்ளான் சார்ஜ் கொடுத்து அவர்களைத் திருமலைக்கு அனுப்புவதாகவும் அவர்கள் திருமலைக்கு வந்து விவாத விக்ரஹத்தை ஸேவித்து உண்மை தெரிந்துகொள்ள வேண்டியதாகவுமல்லவா அங்கு ஸபையில் நீர் பேசியிருக்கிறீர். யாருக்கும் எவ்விதமான சிரமமும் வேண்டாதபடி திருமலையுடையவர் தாமே நாடு தோறும் நகரந்தோறும் இல்லந்தோறும் எழுந்தருளி ஸேவை ஸாதிக்கத் திருவருள் நிரம்பிய திருவுள்ளங்கொண்டு இதோ புறப்பட்டருளுகிருர். முதலில் நீர் ஸேவித்து, பிறகு எல்லாரும் ஸேவிக்கும்படி பண்ணுவீரா? இடது திருக்கையில் ஸ்ரீகோசமுள்ளதாகவும் அதைக் காஷாயத்தினுல் மறைத்திட்டதாகவும் பச்சைப்பசும் பொய்யுரை பேசினீரே, இப்போது இத் திருக்கோலத்தை ஸேவித்துத் திருமலையை நோக்கி "ஹநூநிஜே பளபளாத்காராஞ்சநைஸ் ஸம்ஸ்க்ரியாத்" என்கிறபடியே ஸ்வாத்மநைவ ஸ்வயம் தண்டிதஸ்ஸந் பரிசுத்தி பெறுவீரா? நீர் வாளாவிருந்திட்டால் திருவேங்கடமுடையான் வாளாவிருக்கமாட்டாரென்பதைத் தெரிந்துகொண்டிருக்கிறீரா? "கலௌ வேங்கடநாயக:" என்பதையறிவீரா? இவ்விஷயம் லகுவாகப்போய்விடுமா?



Sri Ramanuja (Tirumalai)

16. திருமலை திருப்பதிக்கும் பாம்பே நகரத்திற்கும் நூற்றுக்காத வழி தூரமிருப்பதால் இங்கே நாம் பேசுகிற பேச்சுக்களைப்பற்றிக் கேள்விமுறை ஏற்படப் போகிறதா என்ன? நாம் அட்டகாசமாகப் பேசிவிட்டால் அதற்குமேல் அப்பீலுண்டோ? என்றல்லவா நினைத்துவிட்டீர் ஸந்தானரே!; மனச்சாட்சியை மீறி வாய்போனபடியெல்லாம் பேசிவிட்டால் மேலே அனர்த்தமாகுமென்பதை இனியாகிலும் அறிந்து கொள்வீரா? ஒரு கோணத்தில் எழுதிவைப்பதும், ஒரு மூலையில் பேசிவைப்பதும் சாதாரண விஷயமாயிருந்தால் கேள்வியின்றிக்கே தொலைந்திடும். உலகமெல்லாமறிந்ததும், உலகமேழும் போற்றநிற்பதுமான விஷயத்தைத் தவருகப் பேசிவிட்டுத் தப்பித்துக் கொள்ளலாமென்று பார்க்கிறீரே, ஐயோ! இது முடியுமா?

★ 3

17. ஸந்தானரே! உபந்யாஸங்களில் பேசுவதற்கு எடுத்துக்கொண்ட விஷயத்தை அழகாகப் பேசித் தலைக்கட்ட சக்தியில்லாமற்போனால், கடியாரத்தைப் பார்த்துக் கொண்டு 'இன்னும் மணியிருக்கிறதே, எதையாவது பேசிப் போதைப் போக்க வேணுமே' என்றெண்ணி, ஸம்பந்தமில்லாதவற்றையெல்லாம் இழுத்துப்போட்டுக் கொண்டு பேசுகிற வழக்கத்தை மஹா நகரத்திலுமா வைத்துக்கொள்வது? டாரிமலை முழஞ்சில் பாசுரத்திற்கும் திருமலையுடையவரை நிந்திப்பதற்கும் என்ன ஸம்பந்தமந்தோ! "இப்பாட்டினால் கவிதார்க்கிக ஸிம்ஹத்தின் வரலாறு சொல்லுகிறது" என்று ப்ரதிஜ்ஞை செய்து பொருத்தமாக அதை விவரித்தால் இதில் யாருக்காவது பொருமையுண்டாகுமோ? அஸூயையுடையவர்களும் அகமகிழும்படி பேசியிருக்கலாமே. அஸ்தாநே பரதூஷணைகள் பேசுவது அனர்த்தாவஹம் என்பதை இனியாகிலுமறிந்து அடக்கமுபொடுக்கமுங்கொண்டு உய்வீரா? இனி உய்வது கிடக்கட்டும்; இப்போது உய்யும்வழி தேடுவீரா?

18. ஸந்தானரே! இந்நூலுக்கு உயிராக எடுத்துக்கொண்ட விஷயத்தை வெற்றி கரமாக முடித்திட்டேன். இவ்வளவோடு இந்த நூலை நிறுத்திக்கொள்ளலாம். ஆயினும் உமது ப்ரஸங்கத்தில் மற்றுஞ்சில அவசியமற்ற பேச்சுக்களும் இடம் பெற்றிருப்பதனால், உம்மாலும் உம்மைச் சேர்ந்தவர்களாலும், தழுவப்பட்டுள்ள மதம் மிகவும் பல்பஜுமான தென்பதை இங்கு நிரூபிக்கவே நமது வினாக்கள் மேன்மேலுமெழுகின்றன.

முக்கியமானதொன்று கேளீர்.

> "ஸத்யம் ப்ரூயாத் ப்ரியம் ப்ரூயாத் ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்" என்கை யாலே ஸத்யமாயிருந்தாலும் அப்ரியமானதைச் சொல்லக்கூடாது. இந்த நீதி லௌகிக வ்யவஹாரங்களில் பரிபாலிக்கப்படலாமத்தனை. தத்வார்த்தமுணர்த்த வேண்டிய அவசியம் நேருங்காலங்களிலும் இந்த நீதியைப் பரிபாலிப்பதென்றால் ஸ்ரீ பாஷ்யம் சததூஷணி முதலானவை அவதரித்தேயிருக்கமாட்டா. கண்மூடித் தனமாய் உண்மைக்கு மாறாகச் சொல்லப்படும் விஷயங்கள் இன்று நேற்று தோன்றினாலும் நூறு இருநூறு வருஷங்களாக அநுவர்த்தித்து வந்தாலும் உலகம் மருளாமைக்காக உண்மைகளை உறைப்பாகத் தெரிவித்து வைக்கவேண்டியது அவசியமேயாகும். பிடிவாதமுடையவர்கள் தவறான ப்ரசாரங்களை எள்ளளவும் விடாதே வீணான மூர்க்கத்தனமே காரணமாக எவ்வளவு ப்ரபலப்படுத்திக் கொண்டாலும் உண்மையைக் கண்டறிய வல்லவர்கள் எங்குமிருப்பதால் உணர்ந்து உகந்தே நிற்பர்கள். இவ்வுகப்பை நீர் மாற்றவல்லீரா?

19. நாதமுனிகள் சரித்திரம், ஆளவந்தார் சரித்திரம், உடையவர் சரித்திரம், ஆழ்வான்பட்டர் சரித்திரம் .....என்றிப்படியுள்ள பூர்வாசார்ய சரித்திரங்களை திவ்யஸூரி சரிதம், யதிராஜவைபவம், பின்பழகியபெருமாள் ஜீயர் குருபரம்பராப்ரபாவம் முதலான ஸம்ப்ரதிபந்ந க்ரந்தங்களைக்கொண்டு அறிகிறோம். தக்க ஆதாரமின்றிச் சொல்லப்படுங் கதைகள் கட்டுக்கதைகளென்று சுழிக்கப்படும். ஓய் ஸந்தானரே! 600 ஆண்டுகட்கு முன்பெழுந்தருளியிருந்த தேசிகருடைய சரித்திரத்தை நீங்கள் எந்த ஆசாரியருடைய

நூலை மூலாதாரமாகக்கொண்டு சொல்லிவருகிறீர்களென்பதைத் தெரிவிக்கமுடியுமா? கோவில் சண்டைகளுக்காக ஸமீபகாலத்தில் ஏறிட்டுக்கொண்ட ஸம்பந்தமே காரணமாக தேசிகசரித்திரத்தையெழுத உங்களுக்கதிகாரம் வந்துவிடுமா? இது வம்பு விறுவென்கிறீரா?

20. ஸத்யகந்தமுமறியாத ஸந்தானகோபாலரே! ஜகத்விக்க்யாதர்களான கவிகள் பண்டிதர்கள் ஆசாரியர்கள் ஆக இவர்களைப்பற்றி யாரும் பெருமைகளை யெழுதலாம். பூனு, பாம்பே; கல்கட்டா, காசி முதலான நகரங்களில் ஆயிரக்கணக்கான புராதன நூல்களை ஸம்பாதித்து சோதித்துப் பதிப்பிக்குமவர்கள் நூலாசிரியர்களின் சரித்திரங்களை முன்னுரையாக எழுதி வெளியிடக் காண்கிறோம். எழுதுமவர்கள் அந்த நூலாசிரியர் களோடு ஒரு தொடர்பு உடையவர்களாயிருக்கவேண்டுமென்கிற நியதி யாதொன்றுமில்லை. உலகுக்குப் பேருதவி புரிந்தவர்களென்னுங் காரணத்தினுல் லோகமாந்யர்களான மஹான் களின் சரிதைகளை யாரும் எழுதலாம். ஆனுல் ஸ்வச்சந்தமாக எழுதினுல் அதற்கு மதிப்பு ஏற்படாதென்பதை நீர் அறிந்திருக்கிறீரா இல்லையா?

21. தேசிகருடைய சரித்திரத்தை நீங்கள் எந்த ஆதாரத்தைக்கொண்டு ப்ரவசனம் பண்ணிவருகிறீர்கள்? என்று கேட்டால் அந்த ஆதாரத்தைத் தெரிவிக்கவேணுமல்லவா? காஞ்சீபுரத்திலிருந்த திருப்புட்குழியப்பா ஸ்வாமியும், அவருடைய சிஷ்யர்களும் திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்மாசாரியரும் "ப்ராசீனமான மூவாயிரப்படி குருபரம்பரை லோபிக்துவிட்டது; இட்போதுள்ள சரித்திர நூல்கள் கல்பிதங்கள்" என்றெழுதி வெளியிட்டிருப்பவற்றைப் பார்த்திருக்கிறீரா இல்லையா? திருப்புட்குழியப்பா ஸ்வாமி நியமனத்தினுல் தன்றிபட்டப்பாதாதாசாரியர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் வெள்ளை சாத்துப்படி யுத்ஸவம் ஆரம்பித்தகாலத்தில் அந்த ஐதிஹ்யம் வடகலை குருபரம்பரையிலும் காணப்படுகிறதென்று நிரூபணமுண்டானபோது வடகலை குருபரம்பரை கல்பிதமே யென்றெழுதியச்சிட்ட ஸஞ்சிகைகள் இப்போது துர்லபமானுலும் சேட்லூர் நரஸிம்மாசா ருடைய நூல் ஸுலபமேயென்பதை அறிந்திருக்கிறீரா? அறிந்திலேனென்கிறீரா?

22. மைஸூர் பரகாலமடத்தின் மூலமாக "த்ருதீயப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி யருளிச்செய்த மூவாயிரப்படி குருபரம்பரா ப்ரபாவம்" என்றொரு நூல் தெலுங்கு லிபியில் பல வருஷங்களுக்கு முன் வெளியாகி இன்னமும் புதுமை மாருமலேயிருக்கின்ற தல்லவா? இதுதானே இப்போது வடகலை ஸம்பிரதாயத்திற்கு குருபரம்பரையாக விளங்குவது. இதிலிருந்துதானே முதன்முதலாக தேசிகருடைய சரித்திரம் வெளிவந்தது. இந்த புத்தகத்தை நீங்கள் பிரமாணமாக வொப்புக்கொள்ளுகிறீர்களா? அப்புத்தகம் 35, 40 வருடங்களுக்குமுன் பரகாலமடத்திலிருந்து ஆயிரம் ரூபா செலவில் வெளியிடப் பட்டிருப்பது. அதை ஆதியோடந்தமாக வாசித்துப் பாரும். பார்த்தீரானுல் "நம்முடைய ஸம்பிரதாயத்திற்கும் ஒரு குருபரம்பரை இருக்கவேணும்" என்கிற ஆசை என்ன பாடுபடுத்தி யிருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்வீரெளிதாக. இக்காலத்தில் உங்களினத் தார் அஸம்பத்தமென்று கண்டிக்கிற விஷயங்கள் அப்புத்தகத்தில் எவ்வளவு நிரம்பியிருக் கின்றனவென்பதையும் அறிவீர். அந்தப் புத்தகம் உண்மையில் யாரெழுதியது? எதற்காக எழுதியது? என்றைக்கு எழுதியது? என்னும் விஷயங்களை விமர்சித்து உலகுக்குப் பேருதவியாக ஒன்று எழுதுவீரா? அல்லது, நான் எதற்காக எழுதுவது என்கிறீரா?

23. அந்தப்புத்தகம் பிராமாணிகமா? அப்ராமாணிகமா? என்பதொன்றே முக்கியமான வினு. "மௌனம் ஸர்வார்த்தஸாதகம்" என்றிருக்குமுங்களுக்கு எந்த வினுவும் எவ்வித உத்வேகத்தையும் உண்டுபண்ணப்போகிறதில்லை. ஆனுலும் இந்தவினு மிகமுக்கியமானது.

24. வேதாந்தாசார்ய விஜயமென்கிற ஆசார்ய சம்பு எவ்வளவு கம்பீரமான நூல்! ஒன்றுன தேசிகராலும் அத்தகைய நூல் இயற்றவியலாதென்று பல வித்வான்கள் பகரவில்லையா? இக்காலத்தில் தேசிகரைப்பற்றி நீங்கள் சொல்லிவருகிற அஸம்பத்தங்களான ஐதிஹ்யங்களுக்கும் சரித்திரங்களுக்கும் அந்த சம்பூக்ரந்தம் இடம் தரவில்லையென்கிற காரணத்தினுல்தானே அதைப் பிரசாரத்திற்குக் கொண்டுவராமல் மறைத்திட்டீர்கள். மறைத்தாலும் அது மறையுமோ? அது தெலுங்கு லிபி தேவநாகர லிபிகளில் பிரசுரமாகியிருக்கிறது. அந்த சம்புவிலுள்ள கதைகளையெல்லாம் ஸாரமாகவெடுத்து காஞ்சீபுரம் ஸ்வாமி பலகால் வெளியிட்டிருப்பதைக் கண்டபின்பு நீங்கள் அந்நூலில் மாச்சரியமும் கொள்ளத் தலைப்பட்டீர்களல்லவா? இல்லையெனின், தேசிக பக்தர்களென்று சொல்லிக் கொள்ளுகிற உங்களில் ஒருவரும் அந்த சம்பூக்ரந்தத்தைத் தொடாமலும் ஸ்மரியாமலுமிருப்பதற்கு இன்னது காரணமென்று உண்மையாகச் சொல்லுவீரா?

25. அந்நூலானது ஸம்ஸ்க்ருதமாயும் அதிலும் கடினபாகமாயுமிருப்பதனுலே அதை உபயோகிக்கின்றிலோமென்னில்; அஸ்து. அந்த நூல் பிராமாணிகந்தானென்றும், அதில் சொல்லப்படாத சரித்திரங்களையும் சொல்லப்பட்டவற்றுக்கு மாறுன சரித்திரங்களையும் ஆதரிப்பது தவறுதானென்றும் ஒப்புக்கொள்ளுகிறீரா? அப்படி யொப்புக்கொள்ள முடியுமோ? 'அநுக்தம் அந்யதோ க்ராஹ்யம்' என்றில்லையோ? அதில் சொல்லப்படாத கதை வேறெரு நூலில் சொல்லப்பட்டிருந்தால் அதைக் கொள்ளலாகாதோ? என்பீர். ஏன் கொள்ளலாகாது? தாராளமாகக் கொள்ளலாம். அப்படிப்பட்ட நூல் ஒன்று இல்லையே. இருக்குமாகில் இதுவரை சொல்லியிருக்கமாட்டீர்களா? இப்போதாவது சொல்லுவீரா?

26. தேசிகர் தூப்புல் என்னும் அக்ரஹாரத்தில் அவதரித்ததாக எழுதிவருகிறீர்கள். இந்த அக்ரஹாரம் தேசிகருடைய காலத்திற்கு வெகுநாள் கழித்து ஏற்பட்டதேயொழிய தேசிகர் காலத்தில் இருந்ததில்லை. தேசிகருக்கு மிகவும் பிற்பட்டவரான அப்பய தீக்ஷிதர் அங்கே வந்து வஸித்தபோது தும்பைவனம் என்கிற அக்ரஹாரத்தை ப்ரதிஷ்டை செய்ய, அதன் கொச்சை நாமமாக துப்பல், தூப்பல், தூப்பில் என்றிப்படி வழங்கிவர ஆரம்பித்ததென்று அந்த தீக்ஷிதருடைய ஸந்ததியில் தோன்றிய விச்வேச்வர தீக்ஷிதர் தாமெழுதிய அப்பய தீக்ஷித சரித்திரத்தில் வரைந்திருப்பதைப் பார்த்திருக்கிறீரா? இல்லையா?

27. தீபப்ரகாசரென்கிற விளக்கொளி யெம்பெருமான் ஸன்னிதியின் வாசலிலுள்ள திருமாளிகைதானே தேசிகருடையது. அந்த இடத்திற்குத் திருத்தண்கா என்றுதானே ஆழ்வார்கள் சாற்றின திருநாமம். அந்தத் திருநாமத்தைத்தானே தேசிகரும் தீபப்ரகாச ஸ்தோத்ரத்தில் ஹிமோபவநமென்றும் சிசிரவனமென்றும் அநுவதித்திருக்கிருர். அந்தத் திருநாமத்தைவிட்டு தூப்பல் என்று எதற்காக வழங்கிவருகிறீர்கள்? தூப்புலென்கிற வியபதேசம் புராதனமாயிருந்தால் இது எத்தனையோ நூல்களில் ஏறியிருக்குமல்லவா?

புராதனமான ஒரு நூலிலும் ஏறவில்லையேயிது. எந்த நூல்கள் கல்பிதங்களென்று தீர்ந்து விட்டனவோ அந்த நூல்களில்தானே இது ஏறியிருக்கின்றது. அவற்றின் கல்பிதத்வத்தை மற்றும் பல விஷயங்கள் போலே தூப்புலென்கிற சொல்லுமன்றோ அசைக்கமுடியாதபடி ஸ்தாபித்துக் கொடுத்தது. காஞ்சியில் தீபப்ரகாசர் ஸன்னிதியருகில் தும்பைவனம் இல்லை யென்றாவது, அதற்குத் தூப்பலென்கிற சிதைவு வழக்கு ஏற்படவில்லையென்றாவது உங்களால் பிரமாண பூர்வமாக நிருபிக்கமுடியுமா? தேசிகர் தண்காவை வடமொழியில் மொழிபெயர்த்திருப்பதுபோல தூப்பலை மொழிபெயர்த்திருக்கிறாரா? என்பது தலையான கேள்வி. இதுவொரு கேள்வியா என்று உடாய்க்கப் பார்க்கிறீரோ?

28. "திருமழிசை அண்ணாவப்பங்காரெழுதிய பழநடை விளக்கத்தில் தூப்புல் பிள்ளையென்றிருக்கிறது. காஞ்சீபுரம் ஸ்வாமியின் சில நூல்களிலும் தூப்புல் பிள்ளை யென்றிருக்கிறது. தேசிகரால் ஆச்ரயிக்கப்பட்ட பிள்ளைலோகாசாரியரும் "சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்" என்று பாடியிருக்கிறார்." என்றிப்படிப்பட்ட வீண் பேச்சுக்களைப் பேசிக்கொண்டு கிடக்கலாமேயொழிய 300, 400 வருஷங்களுக்கு முற்பட்ட தென்கலையார்களோ வடகலையார்களோ எழுதிய ஸம்ப்ரதிபந்நமான நூல்களில் தூப்புல் பிரயோகம் ஒன்று காட்டமுடியுமா?

29. வடக்குத்திருவீதிப்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, திருவாய்மொழிப்பிள்ளை ..... என்றிப்படி வழங்குமாபோலே நம் தேசிகரையும் பிள்ளையென்று வழங்கவேணு மென்று நீங்கள் ஒருசமயம் ஆசை கொண்டீர்கள்; திருத்தண்காப்பிள்ளையென்று வழங்கு வதில் ரஸமில்லையென்று கண்டு தூப்புல்பிள்ளையென்று வழங்கத் தொடங்கினீர்கள்; பிள்ளையந்தாதியென்றும் கற்பனை செய்தீர்கள். அதற்குமுன் தூப்புலென்கிற சொல் ஒரு ஸ்ரீவைஷ்ணவ நூலிலாவது ஏறியிருப்பதாகக் காட்டமுடியுமா? ஏழேழ்பிறவி தவம் புரிந்தாலும் காட்டமுடியாதே. இந்த தூப்புல் சொல்லை விட்டொழித்தால் வெகு க்ஷேமமுண்டு. ஆனால் எதையும் விடமாட்டீர்கள். பிடிவாதமென்பது பலீயஸ்ஸாக இருப்பதால் அது தத்வார்த்த க்ரஹணத்தை வாழவொட்டாதன்றோ? 200 வருஷமாக ரூடமூலமானவற்றை இன்றாக விட்டுவிடுவதா? என்று பார்க்கிறீர்களேயொழிய "தத்துவ முணர்ந்தபின் தகாதது தவிரவேணும்" என்கிற வுணர்ச்சி யுண்டாகவில்லையென்றால் விவேகத்திற்கு யாது பயன்? இதற்கு என்ன பதில் சொல்லுகிறீர் ஸந்தானரே!

30. ஒரு ஸ்தலத்தில் நெடுங்காலம் வஸித்தவர்கள் நிமித்தவசாத் வேறிடம் சென்று சேர்ந்து வாழ நேர்ந்துவிட்டால் பழைய ஸ்தலத்தின் பெயர் விடுபடாமல் தொடர்ந்து வருவதுபோல தும்பைவனத்தில் நெடுநாள் வாழ்ந்தவர்கள் வெளியூர் சென்றும் தூப்பல் என்கிற வியபதேசத்தை விடாமல் தூப்பல் வெங்கடாசார், தூப்பல் ராகவாசார், தூப்பல் பாஷ்யம் என வழங்குவதுண்டு. இதையொரு ஸாதகமாக நினைத்து இதையெல்லாம் உதாஹரிக்கப் பார்க்கிறீரா?

31. நம்மாழ்வார் திருவாய்மொழியில் ஒரு பாசுரத்தை "உலகோ உறங்குமே" என்று தலைக்கட்டுகிறார். உலகமெல்லாம் உறங்கியிருப்பதாக ஆழ்வார் திருவுள்ளத்தில் பட்டுவிட்டது. அதுபோலவே ஸந்தானரே! நீரும் உம்மைச் சேர்ந்தவர்களும் உலகமெல்

லாம் உறங்கியிருப்பதாகவே நினைத்துவிட்டு வாய்போனபடியெல்லாம் பேசுவதும், கை போனபடியெல்லாம் எழுதுவதுமாயிருந்ததை ஸஹியாத காஞ்சீ ஸ்வாமி உங்களுடைய ஒவ்வொரு அதர்க்கணத்தையும் கண்டிக்கவெழுந்து, உங்களுடைய பேச்சு ஒவ்வொன்றும் ஸர்வாத்மநா அஸம்பாவிதமென்பதை உலகமறிய ஒருநூறு நூல்களினால் விளக்கிக்காட்டின பின்பு என்னாயிற்று? என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறீரா? தேசிக சரித்திரத்தைப் பரம பவித்திரமாக எழுதி உலகமெல்லாம் நித்யபாராயணம் செய்து உஜ்ஜீவிக்கும்படி செய்ய வேண்டியிருக்க, இதராசார்ய நிந்தைகளையே நிரப்பி தேசிக சரித்திரம் வெளியிடத் தொடங்கினது எப்போது? என்பதை நன்கு தெரிந்து கொண்டிருக்கிறீரா? தெரியும் என்றாவது சொல்லும், தெரியாதென்றாவது சொல்லும். உப்பிலியப்பன் ஸன்னிதி. ஸ்ரீராம தேசிகாசாரியரென்கிற பண்டிதர் 1944-ஆம் வருடத்தில் தேசிகப் பிரபந்தவுரை பதிப்பித்தபோது அதில் ஒரு லௌகிகப் பெரியாருடைய பெயரால் மிகவும் அதர்க்கணமான தேசிக சரித்திரம் வெளியிட்டு வைத்தார். அதிலிருந்தே மறுப்பு நூல்கள் அபரிமிதமாக வெளிவரத் தொடங்கின என்பதை நீர் தெரிந்துகொள்ளாமலா இருக்கிறீர்?

32. அங்ஙனமாக வெளிவந்த பலபல கண்டன நூல்களினால் திக்குமுக்கலாடிப் போகும் நிலைமை நேர்ந்த பிறகு அந்த ஸ்ரீராமதேசிகாசாரியர் என்ன செய்தாரென்பதை யாவது தெரிந்து கொண்டிருக்கிறீரா? இது ஸமீபகால நிகழ்ச்சியாதலால் இதைக்கூடவா தெரிந்துகொள்ளமலிருப்பீர். அந்த உப்பிலியப்பன் ஸன்னிதி பண்டிதர்தாமே 1964-ல் ஸ்ரீரஹஸ்யத்ரயஸாரம் மூலம் பதிப்பித்து அதில் முகப்பில் தேசிக சரித்திரத்தைச் சுருக்கமாக எழுதுகையில் தலைமேல் அவர் எழுதியிருப்பதாவது,

> **"ஸ்ரீ தேசிக சரித்திரம் பல்வேறு பதிப்புகளில் வெளிவந்துள்ளது. அவற்றில் நிகழ்ச்சிமுறை, நடந்த இடம், காலம் முதலியவற்றில் சிறிது வேறுபாடு காணப் படுவது உண்மையே"** என்று.

இதை நீர் பார்த்திருக்கிறீரா இல்லையா? என்று மடி பிடித்துக் கேட்கிறேன். இதில் இடம், காலம் முதலியவற்றில் வேறுபாடு காணப்படுகிறதென்பது இருக்கட்டும்; **நிகழ்ச்சி முறையிலேயே** வேறுபாடு காணப்படுவதாக எழுதியிருக்கிறாரென்பதைக் கவனித்தீரா? இனியாவது கவனிப்பீரா? நாம் கேட்கும் கேள்விகளுக்கு விடை கூறியாக வேண்டுமே. **அச்ருதிமபிநீய, அத்ருஷ்டிமபிநீய** என்னும்படியிருக்க இனி உம்மாலாகுமா?

33. மேலே உதாஹரித்த வாக்கியத்தில் "ஸ்ரீ தேசிக சரித்திரம் பல்வேறு பதிப்பு களில் வேறுபட்டுக் காணப்படுகிறது" என்றல்லவா அவர் எழுதியிருக்கவேண்டும்; அப்படி எழுதாமல் "வேறுபாடு காணப்படுவது உண்மையே" என்றெழுதியிருப்பதை ஊன்றி நோக்க வேண்டாவா? எதனால் அவர் அப்படியெழுத நேர்ந்தது தெரியுமா? நன்றாக ஊன்றிக் கேளுமையா! ஏற்கெனவே தாம் இருபது ஆண்டுகட்கு முன்பு வெளியிட்ட தேசிக சரித்திரத்திலிருந்து ராமபாணங்கள் அபரிமிதமாகத் தோன்றிவிடவே, உண்மையை இசைந்துகொண்டாலொழிய உய்யும் வகையில்லையென்று சிக்கனவுணர்ந்து அங்ஙனே யெழுதினார். சரித்திரங்களில் இடத்தை மாற்றுவதும் காலத்தை மாற்றுவதும் தவறே யாயினும் நிகழ்ச்சிமுறையையே மாற்றுவது மிகப்பெரிய தவறு அல்லவா? இந்தத் தவறு தேசிக சரித்திரப் பதிப்புகள் பலவற்றில் ஏறிவிட்டதாக அவர் ஒப்புக்கொள்ளவேண்டியது

தலைவிதியாயிற்றென்பதை அறிந்து கொண்டீரா? அவர் ஒப்புக்கொண்டால் அது எல்லாரையும் பத்தப்படுத்துமா என்ன? என்று நீர் சொல்லிவிடலாம். அப்படிச் சொல்லு கிறீரா? அல்லது அதை ஆமோதிக்கிறீரா? என்றுதான் நான் கேட்கிறேனும்மை.

34. அந்த உப்பிலியப்பன் வித்வானை நீங்கள் ஒரு வழிப்போக்கராக நினைப்பதற் கில்லை. அவர் ஆழ்ந்து ஆராயவல்ல பண்டிதர். உங்களுடைய ஸம்பிரதாயத்திற்கு உபகாரமாகச் சிலபல நூல்களை வெளியிட்டிருப்பவர். அவர் உமக்கு அபரிசிதரல்லர். அபரிசிதராயிருந்தாலும் விரைந்து பரிசயங்கொள்ளவேண்டிய விலக்ஷணவ்யக்தி காணுமவர். அவரை நீர் நேரில் சந்தித்து தேசிக சரித்திரப் பதிப்புகளில் நீர் கண்ட மாறுபாடுகளையோ வேறுபாடுகளையோ எனக்கு எடுத்துரைக்கவேணுமென்று கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டியது உமக்கு அவசியமல்லவா? நீர் அவரைச் சந்திக்கவோ கேட்கவோ லஜ்ஜித் தாலும் நீரே ஆலோசித்துப் பார்த்து நமது வினாக்களுக்கு விடையளிக்கலாமே; தேசிக சரித்திரத்தில் காலதேசங்களை மாறுபடுத்தியிருப்பதுபற்றின விசாரத்தை விட்டிடுவோம். நிகழ்ச்சி முறைகளை மாறுபடுத்தியிருப்பதாகச் சொல்லப்படுவதுண்டே இதுதானே சிகர மான தவறு. நடவாததை நடந்ததாகச் சொல்லுவதும், ஒருவிதமாக நடந்ததை மற்றொரு விதமாக நடந்ததாய்ச் சொல்லுவதுந்தானே நிகழ்ச்சி முறையில் வேறுபாடென்பது. இத்தகைய வேறுபாடுகள் நிரம்பிய தேசிகசரித்திரம் முதன்முதலாக எவரால் கற்பனை செய்யப்பட்டதென்பதை விவேகியான நீராவது முயன்று நிர்த்தாரணை செய்ய வேண்டாமா? கற்பனையற்ற தேசிக சரித்திரம் இல்லவேயில்லை யென்கிறீரா?

35. தேசிக சரித்திரத்தில் புகுந்து கற்பனை செய்யவேண்டிய காரணமென்ன? என்று விமர்சிக்கவேண்டியது முதன்மையான காரியம். தேசிகருடைய கவிதார்க்கிக ஸிம்ஹத்வமோ ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரத்வமோ இங்ஙனே மற்றுமுள்ள பெருமைகளோ ஜகத்விக்யாதம். இவற்றை யாரும் மறுக்கவோ மறைக்கவோ முடியாதென்பது நிர்விவாத மான விஷயமல்லவா? ஆதிகாலத்திலிருந்தே திவ்யதேசங்கள் அபவித்திரங்களென்று கொண்டு நீங்கள் ஒதுங்கியிருக்கவும் தேவாலயங்களில் தேசிகருடைய விக்ரஹ ப்ரதிஷ்டை நடந்து உத்ஸவாதிகளும் நடைபெற்றுவருவதையும், கி. பி. பத்தொன்பதாவது நூற்றூண்டி லிருந்து தேவாலய பாஹ்ய ஸ்தலங்களில் தேசிகருக்கு நீங்கள் கோவில் கட்டிக் குணல மாடப் புறப்பட்டதையும் நோக்கவல்ல விவேகிகளும் தெரிந்துகொள்ளமுடியாத உண்மை யுண்டா? ஆசார்யர்களின் ச்ரேணியில் தேசிகர் தவிர எத்தனையாசாரியர்கள் இல்லை; தேசிகரும் மதிக்கும்படியான ஆளவந்தார் ஆழ்வான் பட்டர் முதலான ஆசாரியர்களு மிருக்கின்றூர்களே; அவர்களுக்குத் தனிக் கோவில்கள் கட்டவேணுமென்று யாராவது முயற்சி செய்வதுண்டோ? நீங்கள்தாம் முயற்சி செய்வதுண்டோ? அந்த மஹாசாரியர் களின் புண்ட்ரஸந்நிவேசத்தைப்பற்றியோ தனியன் அநுஸந்தானத்தைப்பற்றியோ எவ்விடத்திலும் எந்த நாட்டிலும் ஒரு விவாதமும் இதுகாறும் தோன்றவில்லையே. தோன்றியிருந்தால் எடுத்துச் சொல்லுமே. சொல்லுவீரா? என்றைக்குச் சொல்லுவீர்?

36. நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானுர் கூரத்தாழ்வான் எம்பார் ஆண்டான் என்னுமிந்த ஆறு ஆசாரியர்களை யெடுத்துக்கொள்வோம். இவர்களுடைய திருவவதாரஸ்தலங்களில் திவ்யமங்கள விக்ரஹப்ரதிஷ்டை இன்று நேற்ரு ஏற்பட்டது?

நம்முடைய புத்திக்கு எட்டாத நாளிலன்றோ ஏற்பட்டு அந்நாள் தொடங்கியே சீரும் சிறப்பும் பொலிய உத்ஸவாதிகள் நடந்துவருகின்றனவல்லவா? பிற்பட்ட ஆசாரியரான மணவாளமாமுனிகளின் தனியனை இவர்களெதிரே எதற்காகச் சொல்லுவது? என்கிற ஆக்ஷேபமோ, நாதமுனிகள் முதலான அந்தந்த ஆசாரியர்களின் தனியனைத் தொடங்கியே திவ்யப்ரபந்த ஸேவை நடக்கவேணுமென்கிற வாதமோ ஓரிடத்திலாவது தலைகாட்டிற் றுண்டோ? உண்டானால் சொல்லுமையா!

37. எம்பெருமானாரால் ஸ்தாபிதர்களான எழுபத்துநான்கு ஸிம்ஹாஸனாதிபதி களின் பரம்பரை பெரும்பாலும் அநுவர்த்தித்துவருவதை அறியாதாரில்லை. அப்பரம்பரை யில் வருமவர்கள் சிஷ்ய ஸம்பத்துடனே ஆசார்ய புருஷர்களாக விளங்கிவருகிறார்கள். அவர்கள், 'எம்பெருமானார் காலத்து ஆசார்ய புருஷர்களான நமது திருமாளிகையில் நம் ஆசார்யனுடைய தனியனைவிட்டு வெகுகாலத்திற்குப் பிறகு அவதரித்த மணவாளமாமுனி களின் தனியனை ஏதுக்காக முந்துறமுன்னம் சொல்லுவது!' என்று நினைக்கலாம். ஒருவரும் அப்படி நினையாமல் தேவாலயங்களோடு மடங்களோடு திருமாளிகைகளோடு வாசியற எங்கும் ஸமரூபமாக நடந்துவருகிற ஸம்ப்ரதாயம் இன்று நேற்று ஒருவரால் ஏற்படுத்தக்கூடியதா? இது ஒரு விவேகியினுடைய புத்தியிலும் ஏறவில்லையென்றால் அந்தோ! உங்களுடைய விவேகத்தை என்னவென்று சொல்லுவது!

38. "கைகேயி என்வயிற்றில் பிறந்த பரதனுக்கு ஸாம்ராஜ்யம் வேணுமென்று விரும்பியதுபோல நாங்கள் எங்களாசார்யனுக்குப் பெருமை விரும்பினால் என்ன பிசகு?" என்று கேட்கலாம். இது உசிதந்தான் என்றுமிசையலாம். எப்போது இசையலாம்? தேசிகர் உங்களுக்கு அஸாதாரண ஆசாரியரென்று தேறிவிட்டால் அப்போது இசைய லாம். ஐயோ! இந்த பேச்சுக்கு ப்ரஸங்கந்தானுமில்லையே. இருப்பதாக நினைக்கிறீரா நீர்?

39. கி.பி. 1268 ஆம் ஆண்டில் திருவவதரித்து நூறாண்டு இவ்விபூதியில் எழுந் தருளியிருந்து திருநாட்டுக்கெழுந்தருளின தேசிகருக்கு ஸரியாய் அறுநூறாண்டுகள் நிரம்பி விட்டன. இந்த 600 ஆண்டில் 200 ஆண்டுகளுக்கு முன் தேசிகருடைய ப்ரஸ்தாவ முள்ள நூல் உங்களினத்தவர்களால் இயற்றப்பட்டது ஒன்று காட்டும், காட்டியருளும் என்று வேண்டிக்கொண்டால் "அரட்டன் வந்தப்பூச்சி காட்டுகின்றான் அம்மனேயப் பூச்சி காட்டுகின்றான்" என்றாப்போலே பூச்சி காட்டலாமேயொழிய வேறு ஏதேனும் காட்டமுடியுமாவென்று பாரும் ஸந்தானரே! இதை லேசான கேள்வியாக நினைக்க வேண்டா; ஒவ்வொரு கேள்வியிலும் உங்களுடைய சாயம் கக்குகின்றதென்றாலும் அப்படி சாயம் கக்கவைக்குங் கேள்விகளில் இது தலையான கேள்வியென்று தெரிந்து கொள்ளுமையா! மேலும் தொடர்ந்துவருங் கேள்விகளையும் கேளீர்.

40. தேசிகரைப்பற்றின ப்ரஸ்தாவம் மட்டுமன்று; ஆழ்வார்களைப்பற்றியோ எம்பெருமானார் முதலான ஆசாரியர்களைப்பற்றியோ, அவர்கள் வெளியிட்டருளின அர்த்த விசேஷங்களைப்பற்றியோ ப்ரஸ்தாவமுள்ள ஸம்ஸ்க்ருத நூலோ த்ராவிட நூலோ உங்களினத்தவர்கள் செய்ததாக [விவாத காலத்திற்கு முற்பட்டதாய்] ஒன்று காட்ட முடியுமா? ஓலைச்சுவடிகளையெல்லாம் சேமித்து வைத்திருக்கின்ற ராஜகீய புஸ்தக

பாண்டாகாரங்கள் பலவுமுண்டே; பரிச்ரமத்திற்கு அஞ்சாமல் ஆங்காங்குச் சென்று பரிசீலனை செய்துபாரும். நவீந காலத்து நூல்கள் தவிர ப்ராசீன காலத்து நூலாக ஒன்று கூட காணக்கிடைக்காது காணும். "புல்லுப்ய: காணலாம் தைலம் கல்லுப்ய: காணலாம் ஜலம், முசல்ப்ய: காணலாம் கொம்பு: ஏவம் கிஞ்சிந் ந காணலாம்." என்று கேட்டிருக்கிறீரா ஸந்தானரே! அதை அநுபவத்தில் காண்பீரா?

41. தென்கலை ஸம்பிரதாயத்தில்—ரஹஸ்ய விவேகம், ரஹஸ்ய ஜீவாது, ஸ்ரீவசந பூஷணமீமாம்ஸா பாஷ்யம், ரஹஸ்யத்ரய மீமாம்ஸாபாஷ்யம், சரமச்லோகடிப்பணீ, தத்வஸங்க்ரஹம், ஸம்ப்ரதாய சந்திரிகை, பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானங்களுக்கு அரும்பதவுரைகள், மணவாளமாமுனிகளின் வியாக்கியானங்களுக்கு அரும்பதவுரைகள், அஷ்டச்லோகீ வியாக்கியானம் பெரியபடி, பரகால நல்லான் ரஹஸ்யம், ஸ்ரீவைஷ்ணவ ஸமயாசார நிஷ்கர்ஷம்...என்றிப்படிப்பட்ட அரியபெரிய நூல்கள் தோன்றினது எந்தெந்த நூற்றுண்டில் என்று ஆராய்ந்து பார்க்கில் தென்னுசார்ய ஸம்பிரதாய ப்ரவர்த்தகர்களும் அவ்வாசிரியர்களின் திவ்ய ஸூக்திகளும் மணவாளமாமுனிகளின் காலந்தொட்டே இடையருமல் தொடர்ந்து வருவதை அசைக்கவொண்ணுதபடி அறியப்பெறுவீர். ஸந்தானரே! இப்படி தேசிகர் காலந்தொட்டு அநுஸ்யூதமாய் வருகிற நூல்களையும் நூலாசிரியர்களையும் உங்கள் ஸம்பிரதாயத்தில் காட்டுவீரா? இந்தக் கேள்வி உங்களை பீஜபர்த்தனம் பண்ணுகிற கேள்வி என்ருவது அறிவீரா? "நம்மை சண்டைக்காக இடையில் வந்து புகுந்தவர்களென்று நிலைநாட்டவல்ல வினுக்களிவை" என்று தெரிந்து கொள்வீரா? காஞ்சி ஸ்வாமியின் ஆயிரக்கணக்கான கேள்விகளில் முக்கியமன்ரே இவை.

42. தேசிகரியற்றிய ரஹஸ்யத்ரய ஸாராதிகளுக்கு வியாக்கியானமோ, ஸ்தோத்ரங்களுக்கு உரையோ, ஆருயிரப்படிக்கு வியாக்கியானமென்றுகொண்ட பகவத் விஷயமோ எல்லாம் திருக்குடந்தை கோபாலதேசிகாசாரியரென்பவர்க்குப் பிறகேயொழிய அவர்க்கு முன்வரையில் உங்கள் ப்ரவரம் ஏதேனுமுண்டாவென்பதை ஆராய்ந்துபார்க்க சக்தியில்லையா உமக்கு? உண்டு என்ருவது சொல்லும், இல்லையென்ருவது சொல்லும்.

43. தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளை உங்களினத்தவர்களில் நவீனர்கள் தவிர புராதனர்களில் ஒருவரும் தொட்டது கிடையாதென்பது மட்டுமல்ல; இக்குறைதீர தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களான முன்னேர்களும் இடைக்காலத்தவர்களும் கடைக் காலத்தவர்களும் தேசிக ஸூக்திகளை தாராளமாக ஆதரித்திருக்கிருர்களென்பதுண்டே இதையும் சேர்த்துக்கொண்டு நீர் ஆராய்ச்சி செய்யவேணுமைய்யா. "உண்டிராக்கிடக்கும் போதும் உடலுக்கே கரைந்துநைந்து" என்று தொண்டரடிப்பொடியாழ்வார் ஸாதிக்கிறபடி போஜனுதிகளை முடித்துக்கொண்டு அப்பாடா என்று படுக்கையில் சாய்ந்தபிறகு வேறு விசாரங்களை அறவே விட்டிட்டு இந்த விசாரமொன்றையே செய்வீரா? செய்யவேண்டிய விசாரத்தை மறுபடியும் விளக்கமாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறீரா?

44. ஸந்தானரே! உமது இனத்தவர்களின் அகாண்ட வைரத்திற்கு எல்லை நிலமானவராய் பூர்வாசார்யபரம்பரையில் சரமாசார்யஸார்வபௌமராய் நிற்பவர் மணவாள மாமுனிகள். அவர் தாம் செய்தருளின வியாக்கியான நூல்களிலே கூரத்தாழ்வான் பட்டர்

* 5

நஞ்சீயர் முதலான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைப்போலவே எங்களாழ்வான், நடாதூரம்மாள், ச்ருதப்ரகாசிகா பட்டர், நிகமாந்த மஹாகுரு ஆகிய இவ்வாசிரியர்களின் ஸ்ரீஸூக்திகளையும் பிரமாணமாகக் காட்டியருளுகிறார். குமாரவரதாசார்யரான நயனாராசார்யருடைய ஸ்ரீஸூக்தியையும் எடுத்துக் காட்டியுள்ளார். தேசிகருடைய ரஹஸ்யத்ரய ஸாரத்திலிருந்தும் தத்வமுக்தாகலாபத்திலிருந்தும் ந்யாஸவிம்சதியிலிருந்தும் வாக்யராசிகளையும் சுலோகங்களையும் மாமுனிகள் மேற்கோள் கொடுத்திருப்பது தெரியுமா உமக்கு? மணவாள மாமுனிகளென்றால் "ஸந்தாபயதி ஸ்வம் தேஹம் ஆபாததலமஸ்தகம்" என்னும்படியிருக்கிற உங்களுக்கு மாமுனிகளின் திவ்ய ஸ்ரீஸூக்தி கந்தமும் தெரியாதபோது இஃது எப்படி தெரியப்போகிறது? இதற்காகவாவது அவற்றையெடுத்து ஸேவித்துக் காண்பீரா?

45. மணவாளமாமுனிகளுக்கும் முற்பட்டவரும், தேசிகருக்குப் பிறகு பதினான்டு ஜீவித்திருந்தவருமான வாதிகேஸரி அழகிய மணவாளச்சீயரும் தம்முடைய தத்வதீபாதிகளில் தேசிகருடைய பலபல ஸூக்திகளை உதாஹரித்து அர்த்த விவரணமும் செய்திருக்கிறார். அந்தச் சீயர்க்கு இருநூறு வருடங்கள் பிற்பட்டவராய் அந்தத் திருநாமமே உடையராய் ஸ்ரீகாஞ்சி கீழ கோபுரவாசலிலுள்ள மடத்திற்குத் தலைவரான ஸ்வாமி அருளிச்செய்ததாய் பகவத்விஷய ஸ்ரீகோசங்களில் அச்சிடப்பட்டதாயுமுள்ள "வேதாந்த சாஸ்த்ர த்ரவிடாகமாத்ய தசக த்வந்த்வைககண்ட்யம்" என்னும் மஹத்தான க்ரந்தத்தில் ஆசார்ய வந்தனமாகச் செய்துள்ள சுலோகங்களில் நான்காவது சுலோகம் "ஸ்ரீவத்ஸ சிஹ்ந தநுஜாகமமௌலி யோகி ஸ்ரீமத்கலிக்ந வரயோகி முகா மஹாந்த:, வ்யாஸார்ய வேத சிகரார்ய மஹார்யமுக்யா வேதாந்த யுக்மகுரவோ ஹ்ருதி ஸந்நிதத்யு:" என்பது. இதில் ஆழ்வான் பட்டர் நஞ்சீயர் நம்பிள்ளை மணவாளமாமுனிகள் ச்ருதப்ரகாசிகா பட்டர் வேதாந்த மஹாகுரு தொட்டயாசார்யர் ஆகிய இவ்வாசாரியர்களைச் சிந்தனைசெய்திருக்கிறார் என்பதையறிவீரா? அக்காலத்தில் வைஷம்யலேசமாவது இருந்ததா?

46. அந்த ஜீயர்ஸ்வாமிக்கும் முற்பட்டவரான சோளஸிம்ஹபுரம் தொட்டயாசாரியர்ஸ்வாமி சததூஷணிக்கு சண்டமாருதமென்கிற ப்ரசண்ட வியாக்கியானம் செய்தது, அதைத் தென்கலையார்களே அச்சிட்டது, அந்த தொட்டயாசார்யருடைய சிஷ்யரான ந்ருஸிம்ஹராஜாசார்யஸ்வாமி நியாய பரிசுத்தி முதலான சில க்ரந்தங்களுக்கு வியாக்கியானம் செய்திருப்பது, அதற்குமேல் சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த வித்வான்களில் நிகரற்ற வித்வானும் வேதாந்த வாதாவளீ ந்யாயபாஸ்கராத்யநேக க்ரந்த ப்ரணேதாவுமான மைஸூர் (மண்டயம்) அனந்தாழ்வான் தம்முடைய க்ரந்தங்களில் தேசிகருடைய அனேக ஸூக்திகளை ஆங்காங்கு உதாஹரித்திருக்கிறாரென்பதும், அதே நூற்றாண்டின் பிற்பகுதியில் காஞ்சீபுரியில் ஸுப்ரஸித்த வித்வத் ஸார்வபௌமராக விளங்கின குன்றபாக்கம் ஸ்ரீஸ்வாமி தாம் பணித்த தத்வரத்நாவளியில் "ஜயதி பகவாந் வேதாந்தார்யஸ் ஸ தார்க்கிக கேஸரீ" என்று பணித்திருக்கிறாரென்பதும் இங்ஙனே மற்றும் பலவும் உமது காதில் விழுந்திருக்கின்றனவா? ஆகவிப்படி தேசிகருடைய ஸ்ரீஸூக்திகளைக் கையாண்டவர்களும் அவரை உபச்லோகித்தவர்களும் தென்னாசார்ய பரம்பரையிலே தேறுகிறாப்போலே உங்களுடைய பரம்பரையில் தேறுவதுண்டாவென்று இதைத்தான் ஆலோசித்துப் பார்க்கும்படி வற்புறுத்திச் சொல்லுகிறேன். இந்த வினாவை

லேசாக நினைத்துவிடுகிறீரா? உங்கள் ஸமூஹம் முழுவதும் ஒன்றுசேர்ந்தாலும் இதைப் பற்றி வாய்திறக்கவும் முடியாதென்பதை நன்கு உணர்வீரா? ஏன் உணரமாட்டீர்?

47. எலிகளெல்லாங்கூடி மார்ஜாரமந்திரம் கட்டுவதுபோலவும், வ்ருஷபங்க ளெல்லாங்கூடி வ்யாக்ரமந்திரம் கட்டுவதுபோலவும், ஸர்ப்பங்களெல்லாங்கூடி கருத்மா னுக்குக் கோவில் கட்டுமாபோலவும், கஜராஜங்கள்கூடி ம்ருகராஜனுக்கு ஆலயம் கட்டுவதுபோலவும் நீங்கள் ஊர்தோறும் தெருவுதோறும் தேசிகருக்கு ஆலயங்கள் கட்டினதாலென்னாகும்? "ஆயிரம் ரூபாய்க்கு வாணவேடிக்கை, ஆயிரம் விசிறிகளுக்கு வடகலைத் திருமண்பூச்சு, ஐந்நூறு மண்டைவிளக்குகளுடன் இரவு முழுவதும் திருவீதி யுலா, புரட்டாசி யுத்ஸவத்திற்குப் பன்னீராயிரம் செலவு, திருவோணந்தோறும் இருநூறு செலவு, பாம்பே டில்லி கல்கட்டா முதலிய மஹாநகரங்களோடு, மணப்பாக்கம் அமணம்பாக்கம் அரும்பாக்கம் முதலிய அக்ரஹாரங்களோடு வாசியற இந்த மாநிலத்தி லுள்ள இடங்களிலெங்கும் இடைவீடில்லாமல் தேசிகதர்சனப்ரசாரம், வரப்போகிற 1968-ல் மஹாப்ரலயம், அதற்காக கீழ்க்கழிந்த இரண்டு மூன்று வருஷங்களாகவே அவாந்தரப்ரளயம்......என்று எத்தனை தடப்புடல்கள் சொல்லிக்கொண்டாலும் செய்து கொண்டாலும் ஒருலாபமுமில்லையென்பதை அறிவீரா ஸந்தானரே!

48. இதை ஊன்றிக்கேளும்; "தத் விஷ்ணோ: பரமம் பதம்" என்கிற அவ்விடத்திற்கு நாம் சென்றால் "தம்மையே நாளும் வணங்கித் தொழுவார்க்குத் தம்மையேயொக்க அருள் செய்வர்" என்கிற திருமங்கையாழ்வார் ஸ்ரீஸூக்திப்படியே அப்பெருமான் நமக்குத் தன்னுடைய பரமஸாம்யாபத்தியைத் தந்தருளுகிறான்; அப்பெருமான்தானே நம்மை நோக்கி இவ்விருள்தருமா ஞாலத்திற்கு வந்தால் நாம் அவனுக்கு நம்முடைய சோகமோ ஹாதிகளைத் தருகிறோம்—என்று ஆசாரியர்கள் அருளிச் செய்வதுபோல தென்கலையார்கள் தாங்கள் பரிக்ரஹித்த தேசிகருக்கு ததீய திவ்யஸூக்தி விவரண—தத்ப்ரகாசநாதிகளாலே பெருமையை விளக்கினார்கள் அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில். வடகலையார்கள் தாங்கள் பரிக்ரஹித்த தேசிகருக்கு எவ்விதமான பெருமைகளை விளக்கினார்களென்பது தெரியுமா ஸந்தானரே! அந்த ப்ரபாவ பரம்பரைகளைக் கேட்க விரும்புகிறீரா? கேளும் வரிசையாக. உங்களுடைய புத்தகங்களைக்கொண்டே எழுதுமிவைகாணும்.

49. கதைகள் கட்டினாலும் பொருந்தக் கட்டவேணும்; கதாநாயகருக்கு மிக்க பெருமை விளங்கும்படியான கதைகளைக் கட்டவேணும். ராமராஜ்யம் செல்லுங்காலத்தில் "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:, ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி." என்கிறபடியே ராமபிரானுடைய திருக்கல்யாணகுண ப்ரசம்ஸை தவிர வேறொன்றுமிருந்ததில்லை என்றாப்போல தேசிகருடைய விபவ காலத்தில் உலகமெல்லாம் தேசிககுண ப்ரசம்ஸையேயாயிருந்தது என்கிற உண்மையை யெழுதிவைத்துத் தாங்களும் களித்துப் பிறரையும் களிக்கச் செய்யவேண்டியது ப்ராப்தமாயிருக்க, அந்தோ! அநுவதிக் கவும் தகாத அபசப்தமயமான கதைகளையன்றோ கட்டிவைத்திருக்கிறீர்கள். பகையும் பொறாமையும் மலிந்த இக்காலத்தில்கூட நடக்கமாட்டாத அஸப்யக் கதைகளையல்லவா எழுதிவைத்திருக்கிறீர்கள். தேசிகர் ஸ்ரீரங்கத்தில் தமது திருமாளிகைத் திண்ணையில் எழுந்தருளியிருந்து ஸ்ரீ கோசம் கடாக்ஷித்தருளா நிற்கையில், திருவீதியில் கந்தாடை

ஆசார்ய புருஷரொருவர் மரியாதைகளோடு பல்லக்கில் வீற்றிருந்து சென்று கொண்டிருந்ததாகவும்; அப்போது தேசிகர் ஸ்ரீகோசம் கடாக்ஷிக்கிற பராக்கில் அதைக் கவனிக்காமலிருக்க சில துஷ்டப்பயல்கள் ஓடிச்சென்று தேசிகரை காலை வாரியிழுத்துத் தெருவிலே விழத்தள்ளினதாகவும் கதையெழுதி வைத்திருக்கிறீர்களே! அந்தோ! இப்படிகூட எழுதி வைக்கத் தோன்றுமா? இக்கதை மூதன்முதலாக எந்த நூலிலேறிற்று? சொல்லுவீரா?

50. ஸ்ரீரங்கத்திலேயே தேசிகர் தமது திருமாளிகையிலிருந்து புறப்படும்போது (இருளில்) அவருடைய திருமுடிமீது படும்படியாகச் சில பொறாமையாளர்கள் பாதரக்ஷைகளைத் தோரண மாலையாகக் கட்டித் தொங்கவிட்டிருந்ததாகவும், அவர்கள் எண்ணமிட்டிருந்தபடியே தேசிகர் இருட்டில் வெளியே புறப்படுகையில் அந்தப் பாதரக்ஷாமாலை திருமுடியில் இடிக்க அப்போது "வயம் து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா:" என்று உரக்கக்கத்தின அத்தேசிகருடைய திருமிடற்றோசையைக்கேட்டு இந்த விநயஸம்பத்திக்கு ஆச்சரியப்பட்ட அந்த தூர்த்தர்கள் ஓடிவந்து திருவடிகளிலே விழுந்து க்ஷாமணம் செய்து கொண்டதாகவும் எழுதி வைத்திருக்கிறீர்களே! ஐயோ! இது என்ன மதியீனம்! காஞ்சிபுரத்திலிருந்த தேசிகரை ஸ்ரீரங்கவாஸிகள் அன்போடும் ஆதரவோடும் ஆளனுப்பி வரவழைத்ததாக ஒருபுறம் எழுதிவைப்பது; இப்படி நெஞ்சாலும் நினைக்கக்கூடாத ஜுகுப்ஸநீய கதைகளை ஒருபுறம் எழுதிவைப்பது. இப்படியெல்லாம் அஸஹ்யமான அபசாரங்கள்படும்படி தேசிகர் யார்தலையில் என்ன பாறையைப் புரட்டினரென்று வினவினால் விடை கூறவல்லீர்களோ? விடை ஒரு அட்வகேட்டுக்குத் தெரியும்போலும்.

51. தேசிகர் செய்யவேண்டிய ச்ராத்தத்தில் நிமந்த்ரிதர்களாயிருந்த மூவரும் முன்னம் இசைந்திருந்து ஸமயத்தில் வஞ்சித்துவிட்டதாகவும், என்ன நடக்கிறது பார்ப்போமென்று அவர்கள் வேடிக்கைபார்க்க அக்கம்பக்கத்தில் ஒளிந்துகொண்டிருந்ததாகவும், நித்யர்களும் முக்தர்களும் ச்வேதத்வீபவாஸிகளும் மூவுருக்கொண்டுவந்து அமுது செய்து ச்ராத்தஸம்ரக்ஷணம் பண்ணினதாகவும் எழுதிவைத்திருக்கிறீர்கள். இது ஸ்தூலத்ருஷ்டியில் தேசிகருக்கு வைபவம்போல் தோன்றநின்றாலும் சிறிது ஆலோசித்தவாறே மிகவும் அருவருக்கத்தக்க கதை இதுவென்று தெரிந்துகொள்ள முடியாதா? ஆயிரக்கால் மண்டபத்திலும் அர்ஜுன மண்டபத்திலும் உறங்குகிற சோம்பர்களையா ஸ்வாமி நிமந்த்ரணத்தில் வரிப்பர். தமக்கு அந்தரங்கர்களாய் நெருங்கிப்பழகும் சிஷ்டர்களையன்றோ வரிப்பர். அன்னவர்கள் வஞ்சித்தார்களென்றால் இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டா ஸந்தானரே! தேசிகரைக் குறித்தா இக்கதை தொடுக்கவேணும்?

52. பதிதர்களென்றும் அபாங்க்தேயர்களென்றும் ஒதுக்கப்பட்டிருக்குமவர்களுடைய இல்லங்களில் இப்படிப்பட்ட ஸம்பவங்கள் இக்காலத்திலும் பெரும்பாலுங் காண்பதுண்டு. பங்க்திபாவனராய் நித்யஸூரி நிர்விசேஷரான தேசிகர் விஷயத்திலா இத்தகைய அஸஹ்ய ஸம்பவங்களை ஏறிடுவது? அப்பய தீக்ஷிதருடைய சரித்திரத்தில் காணப்படுகிற இதனை தேசிக சரித்திரத்தில் இழுத்துப் போடுவதனால் லாகவமா கௌரவமா? என்பதுகூடத் தெரியவில்லையா? ஸ்ரீரங்கவாஸிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் காலைவாரியிழுத்துத் தெருவிலேவிழத் தள்ளினார்களென்றும், பாதரக்ஷைகளைத் திருமுடியிலே படுமாறு கட்டிவைத்தார்களென்றும், ச்ராத்தத்தைக் கெடுக்கக் குதுகலித்தார்

களென்றும், ஏகாதசியன்று பொங்கலுண்டையைக் கொண்டு கையில் வைத்துத் திணிக்க நிர்ப்பந்தித்தார்களென்றும் இப்படிப்பட்ட அபஹாஸ்ய சரிதைகளைக் கல்பனை செய்யுமத்தால் என்ன தேறும் தெரியுமா? அதை நீரே ஆலோசித்துச் சொல்லுவீரா?

53. "ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே ரங்காஸ்தாநே" என்று உள்கனிந்து கொண்டாடிக் கூறும்படியான பெருமைவாய்ந்த ஸ்ரீரங்கவாஸிகளுக்கு ஒரு குறையும் கூற நேராது. அசேஷசித்தரஞ்ஜகர்களும் ரஸிகர்களும் ஸேவார்ஹவித்வான்களுமாக தேசிகர் கொண்டாடப்பெற்ற ஸ்ரீரங்கவாஸிகளுக்கு அவத்யலேசமும் அணுகாது. நீங்கள் நினைக்கிறபடி ஸ்ரீரங்கவாஸிகளான மஹான்கள் அஸூயுக்களாயும் த்ரோஹிகளாயுமிருந் தால் ஸ்வாமி துருஷ்கயவநோபத்ரவத்தால் ஸ்ரீரங்கத்தைவிட்டு வெளியேறின காலத்திலே (அபீதிஸ்தவத்தில்) "நிரஸ்தரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்யே விபோ பரஸ்பரஹிதை ஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்று ஸாதிக்க நேர்ந்திருக்குமா? என்று ஆலோசிக்க மதியில்லையா உங்களுக்கு? ஸ்ரீரங்கவாஸிகள் பரஸ்பரஹிதைஷிகளென்றும் அவர்களுடைய திருவடிநிழலிலே ஒதுங்கியிருக்கை தமக்குத் தேட்டமென்றும் நன்கு காட்டியுள்ள தேசிகரை ஸ்ரீரங்கவாஸிகள் பலவிதத்திலும் ஹிம்ஸித்தார்களென்று கதை தொடுப்பது ஸ்வாமிக்கே அவத்யாவஹமென்று தெரிந்துகொள்ள முடியவில்லையா?

54. பரமபாமரர்களும் ஜுகுப்ஸிக்கும்படியான கதைகளைத் தொடுத்ததோடு நில்லாமல் "ஹந்தஹந்த! ராமக்ருஷ்ண தூஷணுபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணாநுஸாரிணாம்" என்றிப்படி மிலேச்சபாஷிதங்களைப் பரமஸாத்விகர்களின் திரு வாக்காக எழுதிவைத்து ஸ்வகோஷ்டிகளில் கோஷிப்பதும், நால்வர் பதின்மர் திரளுமிடங் களிலே இந்த சுலோகத்தைச் சொல்லிக் கண்ணீரைப் பெருக்கி "ஐயோ! ராவணனையும் சிசுபாலனையுமொத்த தென்கலையார்கள் நம்ம தேசிகனுக்கு இழைத்த இன்னல்களைப் பேசினல் ஒரு மஹாபாரதமாகுமே! என்று சொல்லி விக்கி விக்கியழுவதும், நீங்களும் அழுங்கோளென்று சொல்லிப் பிறரையும் அழச்செய்வதும், நீதிமன்றங்களிலுங்கூட கண்ணநீர் பெருக்குவதுமாகப் போதுபோக்கிவரும் ஓர் அட்வகேட்டுதான் உண்மையான தேசிக பக்தரென்று அறிந்துகொள்வீரா ஸந்தானரே!

55. ஒரு மருமம் கேளீர். ஒரு மஹாசார்யரைப் பார்த்து 'உம்மை பாதரக்ஷையால் ப்ரஹரிக்கிறேன்' என்று சொல்லுவதும் 'எங்களாசார்யரைச் சில பாபிகள் ப்ரஹரித்தார்க ளென்று பறை சாற்றுவதும் இரண்டும் துல்யபாபமேயென்று தெரிந்துகொள்ளவில்லையா நீர்? தேசிகரை ஸ்ரீரங்கவாஸிகள் அப்படி பரிபவப்படுத்தினர்கள், இப்படி பரிபவப்படுத்தி னர்கள் என்று எழுதிவைப்பதற்கும் மேற்பட்ட பாதகமில்லைகிடீர். உண்மையில் இப்படிப்பட்ட பரிபவங்கள் தேசிகருக்கு விபவத்தில் ப்ராப்தமாகியிருந்தால் அப்போது பிறந்திருந்த நீங்களே அந்தப் பரிபவங்களை இழைத்திருப்பீர்களென்பதில் ஸந்தேஹமில்லை. தேசிகரை இப்போது பரிபவிப்பவர்கள் நீங்களேயென்பது ப்ரத்யக்ஷமாயிருப்பதால் இதைக்கொண்டு அதை நிச்சயிக்கத் தட்டுண்டோ? பொய்யும் புளுகும் பொதிந்த பேய்க்கதைகளைக் கட்டிப் பிரசாரம் செய்துவருவதோடு நில்லாமல் பொய்யான தனியன் வாழிகளையும் கட்டி கோஷித்துப் பரிபவமடைவித்து வருகிறீர்களா இல்லையா?

*6

56. ஸ்ரீசைலேசதயாபாத்ரம்—ராமாநுஜதயாபாத்ரம் என்னுமிந்த இரண்டு சுலோகங்களையும் பார்க்கும்போது இரண்டும் ஒரே சாயலாக இல்லையா? தேசிகர்க்கு ஸ்ரீமாந்வேங்கடநாதார்யதனியன்தான் முற்பட்டதென்று ஒப்புக்கொள்ளுகிறீர்கள். அது எவ்வளவு கம்பீரமான சுலோகமென்பதை ஒவ்வொருவருடைய உள்ளமும் அறியாமலா இருக்கிறது. ராமாநுஜதயாபாத்ர மென்னும்போது ராமாநுஜ சப்தம் ஸ்வாசார்யரான ஆத்ரேய ராமாநுஜாசார்யரான கிடாம்பியப்புள்ளாரைச் சொல்லுகிறதென்றும் எழுதுகிறீர்கள்; அப்புள்ளாரையாவது சொல்லட்டும், ஒன்றான பகவத்ராமாநுஜரையாவது சொல்லட்டும், அதில் விவாதப்படுவாரில்லை. ஸ்ரீராமாநுஜ. என்றோ, ஸ்ரீமத்ராமானுஜாசார்ய என்றோ, சொல்லாமல் மொட்டையாக (ராமாநுஜ) என்றிட்டு ஒரு ப்ராஜ்ஞர் தனியனியற்றுவரா? என்று இவ்வளவுகூட ஆலோசிக்கமாட்டிற்றிலீரா? மஹநீயரான ஒரு ஆசார்யரை (ராமாநுஜ) என்று இவ்வளவு லகுவாகவா ஒரு விவேகி நிர்தேசிப்பர்?

57. மேலே (தயர்பாத்ரம்) என்று சொல்ல வேண்டியிருந்தபடியால் அது கூடுவதற்காக (ராமாநுஜ) என்று மொட்டையாக நிறுத்த வேண்டியதாயிற்று என்றெழுதுகிறார் ஒரு பண்டிதர். முதல் பாதத்திலேயே தயாபாத்ரமென்பது கூடவேணுமென்று என்ன நிர்ப்பந்தமையா? தயாபாத்ரமென்பதற்குத்தான் என்ன ஆவச்யகதை? ஸ்ரீமத்ராமாநுஜாசார்ய ஸ்ரீ பாதாப்ஜமதுவ்ரதம் என்றோ, ஸ்ரீராமாநுஜ ஸூரீந்த்ர பாதபங்கேருஹாச்ரிதம் என்றோ கௌரவம் குன்றாமல் தனியனியற்றும் வழிகள் எத்தனையில்லை? ராமாநுஜ நாமத்திற்கு முன்பும் பின்பும் கௌரவச் சொல் ஏதும் சேர்க்காமல் மொட்டை நாமமிட்டுத் தனியனியற்ற என்ன ஆவச்யகதை? சொல்லுவீரா இதற்கு?

58. தயாபாத்ரம் என்பதைச் சேர்க்க வேண்டிய அவச்யமிருந்ததென்றாலும் ஸ்ரீமத்ராமாநுஜாசார்ய தயாபாத்ரம் தயாநிதிம்—ஆத்ரேய ஸ்ரீமதாசார்ய தயாபாத்ரம் மஹாகுரும் என்றிப்படி சுலோகங்கூட்டும் வழிகள் எத்தனையில்லை. தேசிகரைப் பெருமைப்படுத்துவதுபோல அவருடைய ஆசார்யரையும் பெருமைப்படுத்தவேண்டியது மிகமிக ஆவச்யகமல்லவா? வெறுமனே (ராமாநுஜ) என்றால் இது 'அஸத்க்ருதமவஜ்ஞாதம்' என்ற கீதையின்படி அவமரியாதையான சொல் என்பதுகூடவா உங்களுக்குத் தெரியவில்லை. ஆக (ராமாநுஜதயாபாத்ரம்) என்ற சொல்தொடர் மற்ற கவிதைகளைப்போலே இயற்கையாகத் தோன்றினதன்று என்பதை ஒப்புக்கொள்ளுகிறீரா இல்லையா?

59. தனியன்களநுஸந்திக்கவேண்டிய ப்ரகரணங்கள் ஒன்றிரண்டல்ல; பலவுண்டு. ஸமாச்ரயண பரம்பரைத்தனியன், ஸ்ரீபாஷ்ய பரம்பரைத்தனியன், பகவத்விஷய பரம்பரைத் தனியன், ரஹஸ்ய பரம்பரைத்தனியன்...என்றிப்படி அனேக கெட்டங்களுண்டென்பதை அறிவீரன்றோ. தென்கலையார் மணவாளமாமுனிகளின் தனியனை யநுஸந்திக்கவேண்டும்போது எந்த பரம்பரையிலும் ஸ்ரீசைலேசதயாபாத்ரமென்னும் தனியன் தவிர வேறொன்றறியார்கள். நீங்கள் கோவில் சண்டை ப்ரகரணமொன்று தவிர மற்று எந்த ப்ரகரணத்திலும் ராமாநுஜா பாத்ரத்தை அறியமாட்டீர்கள் என்கிறவிது உண்மையா அன்றா சொல்லுமையா.

60. 'லக்ஷ்மீநாத ஸமாரம்பாம்' என்று தொடங்கி 'பூதம்ஸரச்சமஹததாஹ்வய' என்பதிறுகவுள்ள பொதுத் தனியன்களைத் தென்கலையார்கள் அருளிச்செயல் ஸேவையிற்

போலவே எந்த காலக்ஷேப கெட்டத்திலும் உபக்ரமத்தில் சொல்லியேவருகிறீர்கள்: இவற்றை நீங்கள் கோவில் சண்டை கெட்டத்தில் மட்டுந்தானே வேறு கதியின்றிச் சொல்லி வருகிறீர்கள். இந்தத் தனியன்கள் உங்களுக்கு எப்படி ப்ராப்தமாயிற்றென்று கேட்டால் வாய்திறக்க வழியுண்டோ? உடையவர் தனியனை (யோநித்ய மச்யுத) ச்லோகமும், நம்மாழ்வார் தனியனை (மாதாபிதா யுவதய:) ச்லோகமும் உங்களுக்கு எந்த பரம்பரையிலாவது அநுஸந்தானத்தில் வருகிறதோ? தனியன் அநுஸந்திப்பதென்கிற ஒரு க்ரமத்தை ஏறிட்டுக்கொண்ட காலத்தில் நமக்கு எல்லாம் தேசிகரிட்ட சுலோகங்களாகவே யிருக்கவேணுமென்றுகொண்டு யதிராஜஸப்ததியின் உபக்ரமத்திலுள்ள (கமப்யாத்யம் குரும் வந்தே) இத்யாதி ச்லோகங்களையே கொண்டீர்கள். இது அஸமஞ்ஜஸம் என்றுவது அநீதியென்றுவது சொல்லவருகின்றிலோம். யோநித்யமச்யுத ஸ்தானத்தில் ப்ரணமம் லக்ஷ்மணமுநியும், மாதாபிதாயுவதயஸ் ஸ்தானத்தில் யஸ்யஸாரஸ்வதமும் உங்களுக்கிருக்க இயலில்மட்டும் அவற்றைவிட்டு வேறு தனியன்களைக் கொள்வதற்கு என்னப்ரஸக்தி. ஸ்ரீசைலேச தயாபாத்ரத்தைவிட்டு வேறு ஸ்ருஷ்டி செய்துகொண்ட நீங்கள் (லக்ஷ்மீநாதேத்யாதி ப்ரணதோஸ்மி நித்யமளவும்) தென்கலை ஸம்பிரதாய ஸரணியையே தழுவுவதற்கு ஏற்ற காரணமியம்புவீரா?

61. எங்களுக்கு எதிலெதில் விரோதம் தோன்றவில்லையோ அதையெல்லாம் விடாமல் எடுத்துக்கொண்டோமென்னில்; உத்தரசாந்தியில் ஸர்வதேச தசாகாலேஷு தொடங்கி ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதிநம் ஸம்வர்த்தய என்னுமளவும் ஸர்வாத்மநா உங்களுக்குத் தலைவேதனையாயிருக்கவும் அவற்றை விடாதேயிருப்பது அசட்டுத்தனத்தின் எல்லைநிலமல்லவா? உங்களைப் புறம்புபடுத்தியே அவதரித்த ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞைக்கு மங்களாசாஸனம் பண்ணுவதும், அதை லோகஹிதைஷிணி யென்பதும் ஊன்றி நோக்குங்கால் அது உங்களுக்கு எவ்வளவோ லஜ்ஜாவஹமல்லவா? "வெள்கிப்போய் என்னுள்ளே நான் விலவறச் சிரித்திட்டேனே" என்கிற திருமாலைப் பாசுரம் உங்களுக்கு நினைவுக்கு வராமற்போகுமா? சொல்லும் ஸந்தானரே!

62. ஸர்வதேசேத்யாதி ச்லோக த்வயத்தில் ஸ்ரீரங்கப்ரஸ்தாவமில்லையாயினும் அடுத்ததான 'ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியம் அநுபத்ரவாம் அனுதிநம் ஸம்வர்த்தய' என்று இருமுறை அநுஸந்திக்கப்பட்டுவரும் ஸூக்திரத்தினமானது விசேஷித்து ஸ்ரீரங்கஸ்ரீஸம்ருத்திக் கேயன்றோ மங்களாசாஸனம் செய்வது. ஸ்ரீரங்கத்தில் ப்ராகார கோபுரமண்டபாதிகள் திருமங்கையாழ்வார் நிர்மாணம் செய்வித்தவை. இதை யாரும் மறுக்கவொண்ணாதபடி பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் *ஜிதபாஹ்ய ஜிநாதிமணிப்ரதிமா அபி வைதிகயந்நிவ ரங்கபுரே, மணிமண்டப வப்ரகணாந் விததே பரகாலகவி:* என்று சிலாசாஸநம்போன்ற ச்லோகமிட்டருளியிருக்கிறார். அப்படிப்பட்ட ப்ராகார கோபுர மண்டபங்களிலும் மற்றும் ராய கோபுரமென்று வழங்கப்படுகிறவற்றிலும் ஆயிரம் வருஷங்களுக்கு மேற் பட்டவையென்று ஒவ்வொருவரும் மதிக்கக்கூடிய திருமண்காப்புகள் திகழ்கின்றன. காரைக் கட்டிடமாக இருப்பவற்றை விட்டுவிடும். கருங்கல் கம்பங்களிலும், கருங்கல் உத்திரங்களிலும் பள்ளமாகச் செதுக்கப்படாமல் மேடாகத் திருப்பணி செய்யப்பட்ட திருமண்காப்புகள் பலபல திகழ்வதைக் காண்கிறீரல்லவா? முராரி நாடகத்தில் (அகர்க்க

ராகவத்தில்) *வ்யாமக்ராஹ்ய ஸ்தம்பி:* என்று சொல்லப்படுவது போல் வ்யாமக்ராஹ்ய மென்னவுமொண்ணுதபடி மிகமிக ஸ்தூலங்களாயிருக்கிற தூண்களில் பள்ளமாகவல்லாமல் மேடாகக் காணப்படும் திருமண்காப்புகளைக் கண்டால் அந்தத் தூண்கள் திருப்பணி செய்யும்போதே இத்திருமண்களும் அமைந்தவையென்று நீங்களும் இசைந்தேதீரவேண்டியிருக்கிறது. இப்படி ஸ்ரீரங்கத்தில் மாத்திரமல்ல. திருவனந்தசயனம், ஸ்ரீ ஜகன்னுதம், ஸ்ரீகூர்மம், ஸிம்ஹாசலம் முதலான பலவிடங்களிலும் அற்புதமாகக் காண்கிறீர்கள். இவற்ருல், நம்பூர்வாசாரியர்கள் யாவரும் ஒரேவிதமான திருமண்காப்பைத்தான் ஆதரித்து வந்தார்களென்பது உங்களாலும் நிஷ்பக்ஷபாதமாக இசையப்படவேண்டியதாகிறது. கி.பி. பத்தொன்பதாவது நூற்ருண்டில் வடகலையாக்கப்பட்ட சில கோவில்களிலுங்கூட புராதனமான சிலாமயங்களான தென்கலைத் திருமண்காப்புகள் இன்னமும் அழிக்கமுடியாமல் பலவுள்ளன. அதெல்லாம் கிடக்கட்டுமையா! ஸ்ரீரங்க ஸ்ரீயானது அநுதினமும் அநுபத்ரவமாக விளங்கிவரவேணுமென்று ஆசாஸிப்பதற்கு நீங்கள் அதிகாரிகளா? சொல்லும்.

63. ஸ்ரீரங்கத்தில் எவ்விதமான குறும்பும் செய்யாத-செய்ய நினையாத ஸ்ரீ வைஷ்ணவர்கள் அநுஸந்திக்கவேண்டிய ஸ்ரீஸூக்தியல்லவா ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியமநுபத்ரவாமநுதினம் ஸம்வர்த்தய என்பது. ஆசிவிஷவர்க்கங்கள் பெரிய திருவடிக்குப் பல்லாண்டு பாடுவதென்பது எங்கேனுமுண்டா? இந்த ஸ்ரீஸூக்தியானது "அரங்கநகர் வாழ" என்கிற தமிழ் வாக்கியம்போலல்லாமல் சிறிது விசேஷத்தோடு கூடியிருப்பதை நோக்கினீரா ஸந்தானரே! "ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரியம் அநுதினம் ஸம்வர்த்தய" என்னுமளவே சொல்லப்போதுமாயிருக்க இடையில் அநுபத்ரவாம் என்றுசேர்த்திருப்பதை நோக்கினீரா? திருவரங்கத்திற்கு ப்ரபலமான உபத்ரவங்கள் நேர்ந்து கொண்டிருந்ததற்கு அபீதிஸ்தவமொன்றே ஸாக்ஷியாகப் போரும் ஸ்தல விசேஷங்களுக்கு உபத்ரவங்கள் ஸமயபேதேந பலவகைப்பட்டிருக்கும். பூருவாசாரியர்களின் காலத்தில் நேர்ந்த உபத்ரவங்கள் ஒருவிதம். அவை கழிந்தபின்பும் நேர்ந்த உபத்ரவங்கள் நீதிமன்றங்களறிந்தவையல்லவா? இன்னமும் உபத்ரவங்களை விளைவிக்க வேணுமென்னுமெண்ணமே அல்லும்பகலும் உள்ளத்தில் ஊடாடிநிற்க, "ஸ்ரீரங்கச்ரியம் அநுபத்ரவாம் அநுதினம் ஸம்வர்த்தய" என்பவர்கள் 'சோசநீயா:' என்கிற வகுப்பிலல்லவா சேர்ந்தவர்கள்? ஸமர்த்த ஸந்தானரே! நீரும் இந்த வகுப்பில்தான் சேர்ந்திருக்கிறீரோ? சொல்லித் தொலையுமையா!

64. ஸ்ரீ ராமாநுஜரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து ஸ்ரீரங்கத்தில் சேதனவர்க்கத்திலும் அசேதனவர்க்கத்திலுமிருந்த வடகலைப் புண்ட்ரங்களையெல்லாம் தென்கலைப் புண்ட்ரமாக நிர்ப்பந்தித்து மாற்றிவிட்டார்களென்று ஸ்ரீமான் D. T. தாதாசாரியர் எழுதி வைத்து அதை வடகலையுலகமெல்லாம் அப்ரதிஷித்தந்யாயேந இசைந்துமான பின்பு ஸ்ரீரங்கஸ்தல பரிஸ்திதியை நாம் எடுத்துக்காட்டுவது நமக்கு அசட்டுத்தனத்தையே விளைவித்து நிற்கும். ஆயினும் ஸ்ரீ ராமாநுஜர் தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்ததாகச் சொல்லப்படுவது திருத்தமுற்ருமலிருந்த ஆசார விஷயங்களிலேயொழியப் புண்ட்ரவிஷயத்திலன்று என்பதை நீர் தெரிந்துகொள்ளவேண்டும். அல்லது நீரும் D. T. T. எழுதினதுதான் ஸரி என்கிறீரா? இதற்கு விடை கூறியே தீரவேணுமையா?

65. ப்ராஸங்கிகமாக D. T. T. யின் அற்புதமான சாதுர்யமொன்று கேளும். ஸ்ரீமதஹோபில மடத்தின் மூலமாக 1951 ஆம் வருடத்தில் விசிஷ்டாத்வைத கோச மென்னும் பெயரால் ஒரு நிகண்டு வெளியிடப்பட்டிருக்கின்றது அதன் குணதோஷங் களைப்பற்றின விசாரம் இங்கு அப்ரஸக்தம். அதன் முகப்பில் உபோத்காதமொன்று, இவராலெழுதப்பட்டுச் சேர்க்கப்பட்டுள்ளது. அதில் "G. கோச:" என்பதற்கு முன்புள்ள பதினெட்டரை பக்கங்கள் இப்புத்தகத்திற்கு அநவஸரங்கள். 'வீண்வம்பு வளர்த்தல்' என்று எண்ணத்தக்கவை. 'அவை அநாவச்யகங்களல்ல; மிகவும் ஆவச்யகங் களே' என்றாலுமென்க. அங்கு (பக்கம் 5ல்) இவர் ஒரு ஆசார்ய பரம்பரையை ப்ரஸ்தாவித்து திருக்குருகைப்பிரான் பிள்ளான், எங்களாழ்வான், நடாதூரம்மாள், கிடாம்பியப்புள்ளார், ஸ்ரீமத் வேங்கடநாதார்யர் என்று காட்டிவருகையில் இவர்களுக்குத் தனியன்களையுமெழுதுகிறார். நடாதூரம்மாளுடைய தனியன் "ச்ருத ப்ரகாசிகாரம்பே ஸ்ரீஸுதர்சந ஸூரிணா க்ருதம்* வந்தேஹம் வரதார்யம் தம்........" என்றெழுதினார். அதன் பிறகு ஆத்ரேய ராமாநுஜாசார்யரென்கிற கிடாம்பியப்புள்ளாரை ப்ரஸ்தாவித்து "நமோ ராமாநுஜார்யாய வேதாந்தார்த்த ப்ரதாயிநே, ஆத்ரேய பத்மநாபார்ய ஸுதாய குணசாலிநே" என்கிற சுலோகம் இவருடைய தனியனாக வெழுதப்பட்டுள்ளது. கிடாம்பியப்புள்ளாருடைய உண்மையான தனியன் எது என்பதை அடுத்தபடியாக விளங்குவோம். பெரியபெருமாள் தொடங்கி ஸகலாசாரியர்களுக்கும் "தநியந் தேசிக க்ருதம்—தநியந் ஸ்ரீதேசிக க்ருதம்—தநியந் தேசிக க்ருதமேவ" சோம்பாமல் எழுதி வருமிவர் இந்த *நமோ ராமாநுஜார்யாய தனியன் இன்னார் செய்ததென்பதை எழுதி யிருக்க வேண்டாவா? அப்புள்ளார்க்கு ஆசார்யரான அம்மாளுடைய தனியனுக்குக் கர்த்தாவை எழுதிவிட்டு இதற்குமட்டும் கர்த்தாவைப் பற்றின ப்ரஸ்தாவமே செய்யாத காரணமென்ன? ஸந்தானரே! இதை நீர் கவனித்திருக்கிறீரா?

66. அதுதான் இவருடைய அத்புதமான சாதுர்ய மென்று தெரிந்து கொண்டிருக் கிறீரா? இருபது முப்பது வருஷகாலமாக காஞ்சீ ஸ்வாமி தமது நூல்களில் இத்தனியனைப் பற்றியே ப்ரபல விசாரம் செய்திருக்கிறார். அதை யிவர் பாராதவரல்லர். நவீனர்களின் பலபல குஸ்ருஷ்டிகளை இந்த ச்லோகமொன்று கொண்டே அப்ரகம்ப்யமாக ஸ்தாபித்து வருவதால் இந்த அப்புள்ளார் தனியனைப் பற்றின சர்ச்சை உங்கள் சாயத்தை நன்கு கக்கவைப்பதென்று தெரிந்து கொண்டிருக்கிறீரா? இது லகுவான கேள்வியா?

67. கிடாம்பியப்புள்ளார் ஸ்ரீ நிகமாந்த மஹாகுருவுக்கு ஸாக்ஷாதாசார்யர். அவர்க்குத் தனியன் செய்யவேணுமென்றால் தச்சிஷ்யரான ஸ்வாமியே செய்திருக்க வேண்டும். ஸ்வாமி செய்தருளின தனியன் "யஸ்மா தஸ்மாபிரேதத் யதிபதி கதித ப்ராக்தந ப்ரக்ரியோத்யத்" இத்யாதியான பரமகம்பீர மஹாச்லோகம் ப்ரஸித்தமாக வுள்ளது. ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபத்திலும் *நமோ ராமாநுஜார்யாய தனியனே சொல்லப் பட்டு வருவதாக D. T. T. எழுதியிருப்பது பெரும்புளுகு. வ்யபதிஷ்டரான ஒரு மஹானும் இதை இசையார். ஸ்வாமி ஸாதித்த தனியனைத் தள்ளி இந்த சுலோகத்தைக் காலக்ஷேப பரம்பரையில் கூட்டிக்கொள்ள முன்வந்தவர் இதுகாறும் ஒருவருமில்லை. ஸ்ரீசைலேச தயாபாத்ரத் தனியனுக்குப் பிரதியாக ராமாநுஜ தயாபாத்ரத் தனியனை

*7

ஸ்ருஷ்டித்த நீங்கள், *நமச் ஸ்ரீசைல நாதாய தனியனுக்கும் பிரதியாக *நமோ ராமாநுஜார்யாய தனியனை ஸ்ருஷ்டித்தீர்களென்பதில் என்ன ஸந்தேஹம்? இதற்குச் சொல்லுவீரா?

68. ஸ்ரீமாந் வேங்கடநாதார்ய தனியனில் சில குறைகள் கண்டு ராமாநுஜதயா பாத்ரத்தனியன் செய்யப்பட்டதாகச் சொல்லி வருவதோடு நில்லாமல் எழுதியும் வைத்திருப்பவர்கள் இந்த நமோ ராமாநுஜார்யாய தனியனைப் பற்றியும் அவசியம் பேச வேண்டுமே. D. T. T. ஸ்வாமிக்கு இதை தேசிக க்ருதமாக எழுதத் துணிவு பிறக்க வில்லை. அப்பாசார்ய க்ருதம், குப்பாசார்ய க்ருதம்.........என்றெழுதிவைக்கவும் கைவர வில்லை. கோவிற்சண்டைகளைக் கிளப்பின காலத்தில் சில அவ்யபதேச்யர்கள் போட்டிக் காக எழுதிவைத்ததென்னுமுண்மையே ஸ்திரீ க்ருதமாயிற்று. அப்புள்ளாரும் தேசிகனும் ஜீவித்திருந்த காலம் வரையில் இந்த ச்லோகம் தலைகாட்டிற்றில்லை யென்பது சிலாலிகிதம். பிறகு எப்போது தோன்றிற்று? இதற்குக் கர்த்தா யார்? என்கிற விசாரத்தை ப்ராமாணிகர் களனைவரும் செய்யக் கடமைப்பட்டவர்கள். இதெல்லாம் தக்க சான்றுகளுடன் நீர் செய்து உண்மையைக் காட்டுவீரா? அல்லது பல்லைக் காட்டுவீரா?

69. அக்காலத்தில் ப்ரதிவாதி பயங்கராசார்யரும், சிறிது பிற்காலத்தில் சோள ஸிம்ஹபுரம் தொட்டயாசார்யரும் வேதாந்தவாசிரியரிடத்தில் மிக்க ஈடுபாடு கொண்டவர்க ளென்பதை நீங்களும் இசைகின்றீர்கள். அவ்விருவருடையவும் ஸந்ததி பரம்பரை அநுஸ்யூதமாக வந்துகொண்டிருப்பது ப்ரஸித்தம். ஸ்வாமி தொட்டயாசார்யருடைய ஸந்ததி சோளஸிம்ஹபுரத்தில் விச்ராந்தம். ப்ரதிவாதி பயங்கராசார்யருடைய ஸந்ததி நாற்றிசையிலும் பெரும்பாலும் பரவியுள்ளது. இவ்விரு ஸந்ததிகளிலும் வேதாந்தாசார்ய ரென்கிற நாமகரணம் வைஷம்யம் முற்றின இக்காலத்திலும் மாருமல் அநுவர்த்தித்து வருகிறது. இவர்களுடைய குடும்பங்களில் வேதாந்தாசார்ய விக்ரஹாராதனமுமுள்ளது. திருவிந்தளூர் முதலான தென்னுட்டுத் திருப்பதிகளில் வாழும் பிரதிவாதிபயங்கர வம்சஸ்தர்கள் தங்கள் பரம்பரையில் நயனராசார்ய நாமகரணமும் செய்துவருகிருர்கள். இவர்கள் பரிமள ரங்கநாதன் ஸன்னிதியில் வேதாந்தவாசிரியர்க்கு விக்ரஹ ப்ரதிஷ்டை செய்வித்து உத்ஸவ பரிபாலநாதிகளை இற்றைக்கும் ஒழுங்குபட நிர்வஹித்துவருகிருர்கள். உங்களுக்கு அங்கு தேவஸ்தானத்தில் பிரவேசம் இல்லாமையினுலே பாஹ்ய ஸ்தலத்தில் புதிதாக ஆலய நிர்மாணம் செய்வித்துச் சில வருஷகாலமாய்த் தனியான வழிபாடு நடத்தி வருகிறீர்கள். திவ்யதேசத் தெம்பெருமானுடைய ப்ரஸாத பஹுமானங்களைப்பெற்று ஆனந்தமாக வாழ்கிற ஆசார்யருடைய முன்னிலையில் இப்படியொரு தனிக்கூத்து நடத்த வேணுமென்று தோன்றினது எதனுலோ தெரியவில்லையே. இக்கூத்து ஒன்றிரண்டு ஸ்தலங்களிலன்றே. ஸந்தானரே! இதிலிருந்து எவ்வளவு மருமங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும் தெரியுமோ? தெரிந்துகொள்வீரா?

70. உங்களால் ஆக்ரமிக்கப்பட்ட சில திவ்ய தேசங்களில் எழுந்தருளியிருந்த மணவாள முனிகளை உத்வாஸனம் செய்தீர்கள்; சில திவ்ய தேசங்களில் உத்வாஸனம் செய்ய மனமில்லாமல் ஆளவந்தாராக ஆக்கினீர்கள். அறவே உத்வாஸனம் செய்ததுதான் அதிகம். இது உங்கள் நிலை. உங்களுக்கு அத்யல்ப ப்ரவேசமுமில்லாத தென்கலை திவ்ய

தேசங்களில் ப்ரதிஷ்டிதராயுள்ள தேசிகரை உத்வாஸனம் செய்தால் கேட்பாரில்லையென்பது நீங்களறியாததன்று. கீழே ப்ரஸ்தாவித்த திருவிந்தளூரிலோ, ஸந்நிஹிதமான ஸ்ரீபெரும்பூதூரிலோ, திருவல்லிக்கேணியிலோ மாத்ஸரியம் முற்றின இக்காலத்திலுங்கூட மற்ற ஆசாரியர்களோடொப்ப தேசிகருக்கு உத்ஸவ பரிபாலனாதிகளைக் குறையற நடத்தி வருவதைக் காணக் கண்ணில்லையே உங்களுக்கு? உமக்குங்கூடவா இல்லை?

71. நம்மதேசிகனுக்குத் தென்கலைத் திருமணிட்டு ஸ்ரீசைலதயாபாத்ரம் சொல்லிப் பண்ணுகிற உத்ஸவம் உத்ஸவத்தில் சேர்ந்ததா என்ன? என்று உறுமுகிறவர்கள் ஸ்ரீரங்கத்தில் 'நம்ம தேசிகனு'க்கு ஒருக்ஷணம் வடகலைத் திருமணிட்டு வெளிக்கிளப்பின தற்காக ஆயிரம் ரூபா சொளசொள வென்று அபராதம் செலுத்தி மூன்று கோர்ட்டு வரையில் அதை ஸ்திரப்படுத்திக்கொண்டார்கள். "எனக்கு பர்த்தாவோடு வாழ்க்கை வேண்டாம்; வாழாவெட்டியாகவே காலங்கழிக்கிறேன்" என்று ஒதுங்கி வர்த்திக்கும் ஸதீமணிகளோடொப்ப, வாசற்கொடுங்கையில் பேர்க்கவும் பேராத தென்கலைத் திருமண் காப்புடனே, சததூஷணியில் அறுபத்தைந்தாவது வாதத்தின் முடிவில் "ஸ்த்ரீ தர்மிண்யாம் ஆத்மஜநங்யாமிவ" [ரஜஸ்வலையான தாயினிடத்திற்போல] என்று தாம் காட்டின த்ருஷ்டாந்த தசையைத் தம்முடைய பரிஸ்திதியினுல் தாமநுபவித்துக் காட்டி வருகிற வைபவம் வாசாமகோசரமென்று தெரிந்து கொள்ளும்படி ஒரு ஸதஸ்ஸில் உபந்யஸிப்பீரா ஸந்தானரே! எவ்வூரில் என்றைக்கு உபந்யஸிப்பீர்?

72. சாஸ்த்ரஜ்ஞர்கள் சில விஷயங்களை 'தர்மிக்ராஹகமாநஸித்தம்' என்பர்கள்; அந்த ரீதியில் தேசிகருக்கு ஸ்ரீசைலேசதயா பாத்ரமும் அதைச் சேர்ந்த வாழிகளும் தர்மிக்ராஹகமாந ஸித்தம் என்று திருப்புட்குழி யப்பாஸ்வாமி யென்கிற நையாயிகாக்ரேஸரர் ஸாதித்துக் கொண்டிருப்பராம்; இது உமக்குக் கேள்வியுண்டா இல்லையா ஸந்தானரே! இல்லையென்று கூறினுல் ஒரு வினவுக்காவது விடை கூறினதாகுமே.

73. காஞ்சீபுரம் ஸ்வாமியினுடைய நூல்களுக்கு மறுப்பெழுதுவதாக எழுந்து சில ஏடுகளெழுதி அடுத்த க்ஷணத்தில் ப்ரத்யாக்க்யானம் பெற்று விச்ராந்தி யடைந்த பண்டிதர்களுக்கெல்லாம் விருதுகள் கொடுப்பதாக முன்வந்த பெரியார்கள் சிலர்க்கு தேசிகதர்சன ஜயத்வஜமென்றும், சிலர்க்கு தேசிகதர்சன திவாதீபமென்றும், சிலர்க்கு தேசிகதர்சன சக்கவர்த்தியென்றும் இப்படி பிருதுகள் அளித்திருக்கிருர்களல்லவா? இங்ஙனே விருதுகள் பெற்ற புலிகளும் சிங்கங்களும் மேல்விளைவதறியாதே எழுதிவைத்த சுவடிகள் பெரும்பாலும் மறைந்தொழிந்தாலும் அவரவர்கள் ஸ்வகோஷ்டிகளில் 'இதோ நாமெழுதியிருப்பது பாரும், இதோ நம்முடைய பதிலுரையை வாசித்துப் பாரும்' என்று மூடிமூடிக் காட்டி வாங்கி வைத்துக் கொள்வதுண்டே; அத்தகைய [ரப்பர் பாம்புகளென்னப்பட்ட] சுவடிகளை ஸந்தானரே! நீர் பார்த்திருக்கிறீரா? அவற்றிலுள்ள சில விஷயங்களை ப்ரஸ்தாவிக்கிறேன்; சிரிக்காமல் கேட்கிறீரா? பிரபந்தஸார விஷயந்தான்.

74. ஆழ்வார் ஸ்ரீ ஸூக்திகளை அருளிச் செயலென்றும் திவ்ய ப்ரபந்தமென்றும் வழங்காமல் ப்ரபந்தமென வழங்குவது திவ்ய ப்ரபந்த தூரஸ்தர்களான ஸ்மார்த்தர்களின் திரளிலே தோன்றியது. அது பிறகு ஸாமானியர்களான வைஷ்ணவர்களின் வாக்கிலும்

புகுந்தது. பூருவாசாரியர்கள், விசிஷ்ய நிகமாந்த மஹாகுரு பிரபந்தமென்று ஒருவர் சொல்லக் காதால் கேட்டாலும் மாய்ந்து போவரே. இக்காலத்திலொருவர் தம்முடைய திவ்யப்ரபந்த த்வேஷத்திற்கும், பூர்வாசார்ய வித்வேஷத்திற்கும் சாச்வத ஜயத்வஜமாக ப்ரபந்தரக்ஷை யென்று எழுதிவரும்படியான அவத்யம் தேசிகனிடத்தில் ஏறுமா; எங்ஙனே யேறும்? நூல்களில் பொது நிர்தேச மென்றும் சிறப்பு நிர்தேசமென்றும் இரண்டுண்டு; திவ்யப்ரபந்த வியாக்கியானங்களில் கீழ்ப்ரபந்தத்தால் என்றும் இப்பிரபந்தத்தில் என்றும் அருளிச் செய்வதுண்டு. அது கொண்டு "பூருவர்களும் ப்ரபந்த மென்பதுண்டு" என்று காட்ட வருவது அபஹாஸ்யமாகும். ஸ்வாமி ஸ்தோத்ர பாஷ்யத்தில் *மாதாபிதாயுவதய:* வியாக்கியாந-உபக்ரமத்தில் "பராசரப்ரபந்தாதபி" "உபஜீவ்யப்ரபந்த நிர்மாணக்ரமாத்" என்று ஸாதித்துள்ளார். அது கொண்டு ஸ்ரீ விஷ்ணு புராணத்தை ப்ரபந்த மென்பதுண்டோ? "பாஷ்ய ப்ரபந்தே" "ச்ருதப்ரகாசிகாப்ரபந்தே" இத்யாதி பரச்சத ப்ரயோகங்களுண்டு. அருளிச் செயலை விவக்ஷித்து ப்ரபந்தமென்று வழங்குவது நவீனர்களிடத்தன்றிப் பூருவர்களிடத்து எங்குங்காண முடியாது. காணமுடியுமென்றால் எடுத்துக் காட்டுவீரா? இந்தவொன்றுக்காவது ப்ரயாஸங்கொள்ளுவீரா?

75. தேசிகர் செய்தருளின குருபரம்பராஸாரத்தில் ஆளவந்தார் முதலான ஆசார்யர்களின் ப்ரஸ்தாவத்தில் "இவரருளிச் செய்த ப்ரபந்தங்கள்" என்று அஸக்ருத் ஸாதிக்கிறார். எம்பெருமானார் ப்ரஸ்தாவத்தில் "திருவாய்மொழி யோதினார்" "திருவாய்மொழிக்கு அர்த்தம் கேட்டருளினார்" என்றே ஸாதித்திருப்பதைக் காணீர். இப்படிப்பட்ட மஹாசார்யர் ப்ரபந்தஸார மென்று பெயரிட்டு ஒரு ப்ரபந்தம் பண்ணினாரென்கை அநுவதிக்கவும் தகாததேயென்று தெரிந்துகொண்டீரா?

76. இது வெளிவ்யவஹாரங்களோடு நின்றாலும் பாதகமில்லை. "வேதாந்த குரு மொழிந்த ப்ரபந்தசாரம்" என்று நூலினுள்ளும் நுழைந்திருப்பது மிகவும் அருவருக்கத் தக்கதன்றோ. எந்த ப்ரபந்தத்தின் எந்த விதமான ஸாரம் இதில் எந்த பாட்டில் பொறித்திருப்பதென்று கேட்டாலோ வர்ஷசதமானாலும் விடையிறுக்க முடியாது. ஸ்வாமி ரஹஸ்யத்ரய ஸாரமென்றும், ஸாரஸாரமென்றும், த்ரமிடோபநிஷத்ஸாரமென்றும் சில பிரபந்தங்கள் ஸாதித்திருக்கிறாரே, இவற்றில் ஏதேனும் கேள்வி பிறப்பதுண்டோ? ரஹஸ்யத்ரயத்தின் ஸாரப் பொருள்களைக் கொண்டது ரஹஸ்ரத்ரயஸாரம்; அந்த ஸார க்ரந்தத்தின் ஸாரம் கொண்டது ஸாரஸாரம். த்ரமிடோபநிஷத்தான திருவாய்மொழியின் ஸாரங்கொண்டது த்ரமிடோபநிஷத்ஸாரம். மற்றும் அருளாளப் பெருமாளெம்பெருமானார் நடாதூரம்மாள் முதலானாருடைய ஞானஸாரம் ப்ரமேய ஸாரம் தத்வஸாரம் முதலிய க்ரந்தங்களின் திருநாமங்களிலும் விசாரம் தோன்ற ப்ரஸக்தியே கிடையாது. திவ்ய ப்ரபந்தார்த்த விசாரலேசமுமற்ற சுவடிக்கு ப்ரபந்தசார மென்று அந்தோ மஹா விவேகியான தேசிகரா பெயரிடுவர்? இதைப்பற்றி வாய்திறப்பீரா ஸந்தானரே!

77. "பிரபந்தங்களின் ஸாரமான வகை தொகைகளை வெளியிடும் நூலாகையாலே பிரபந்த சாரமெனப் பெயரிட்டிருக்கலாம்" என்று சோதிடம் சொல்லுமாபோலே எழுதிவைத்திருக்கிறாரொருவர். சாரீரகமீமாம்ஸையில் இத்தனை அத்யாயங்கள் இத்தனை பாதங்கள் இத்தனை ஸூத்ரங்கள் இத்தனை யதிகரணங்கள், இதை இன்னாரியற்றினார்-

என்று இவ்வளவே விவரித்து ஒருவர் ஒரு நூலெழுதினுல் அதற்கு சாரீரகஸாரமென்று பெயரிடலாம் போலும். "பெயரிட்டிருக்கலாம்" என்றெழுதுகின்றமையால் எழுதின வருடைய நெஞ்சுக்கே குழப்பம் தீரவில்லை யென்பது விளங்கவில்லையா!

78. அச்சுவடியில் முதற்பாட்டைப் பாருமையா? "ஆழ்வார்களவதரித்த நாளூர் திங்கள்" என்பது தொடக்கம். [நாள் ஊர் திங்கள்] நாளென்பது நக்ஷத்திரம்; ஊரென்பது தெரிந்ததே; திங்களென்பது மாஸம். ஊரை முன்னேயோ பின்னேயோ எங்கும் வைக்கலாம். மாஸ நக்ஷத்ரங்களை மாற்றத்தகுமா? இன்ன மாஸத்தில் இன்ன நக்ஷத்ரத்தில் என்பதுதானே அடைவு; "ஆழ்வார்களவதரித்த ஊர் திங்கள் நாள்" என்ருே "திங்கள் நாளூர்" என்ருே சொல்லுவதில் யாப்புச்சிதைவு எள்ளளவும் நேராது. கந்யாமாஸே, விச்வாவஸு நாம ஸம்வத்ஸரே தசம்யாம் திதௌ உத்தராயணே சுக்ல பக்ஷே என்று சொல்லுவது எங்கேனும் கண்டதுண்டோ? இந்நேர்த்திக்குச் செய்யுள் கூடாவிட்டாலும் சிரமப்பட்டுக்கூட்டுவர்கள் சிறிய ஞானத்தர்களும்; எளிதாகவே கூடுவ தாயிருக்க விபரீதமாகப் பாடினுரென்னு மவத்யத்தை தேசிகர் திருமுடிமேலா ஏற்றுவது? இப்படியும் ஒரு வீண்பிடிவாதமா?

79. விவாத நூலில் *வையகமெண்* என்கிற பதினேழாம் பாட்டு மிகவும் பிற்பட்டது. ஒருவர் செய்து முடித்த பிறகு மற்றொருவர் செய்து நுழைத்ததென்பதில் ஐயமுண்டோ? இப்பாட்டில் ஆழ்வார்கள் பன்னிருவரையும் பேசி முடித்தபின் "எதிராசர் தம்மோடு ஆறிருவர் ஒரொருவர் அவர் தாம் செய்த...நாலாயிரமும்" என்றுள்ளது. இதனுல் இராமானுச நூற்றந்தாதியை இராமானுசர் தாமே செய்தருளிய தாக நிஸ்ஸந்தேஹமாய்க் கூறப்பட்டதாயிற்று. இதற்கு இப்படி பொருளல்லவென்றும், இராமானுசர் செய்வித்தநூலென்று பொருள் கொள்ளலாமென்றும் வேறுவிதமாகவுங் கொள்ளலாமென்றும் நவீனவுரைகாரர்கள் சிரமப்படுகிறுர்கள். அது '......வ்ருதா ச்ரம:' அத்தனை. 'இராமானுசர் இயற்றினபடியாலே இராமானுச நூற்றந்தாதி யெனப் பெயர் வந்தது என்று மருண்டவொருவர் செய்த செய்யுளிது, 'பர்த்ருஹரி; பட்டிகாவ்யம், பாரவி, முராரி, மாகம் இத்யாதியாக வழங்கும் க்ரந்தநாமங்கள் ப்ரமஹேதுவாயின. தேசிக ப்ரபந்தமென்ருல் தேசிகரியற்றிய ப்ரபந்த மென்றுதானே பொருள். அப்படியே கொண்டார்களிங்கும் என்பதை ஸந்தானரே! தெரிந்துகொண்டீரா? நீர் வேறொரு பதில் சொல்லுகிறீரா?

80. "அடியார்கள் வாழ அரங்கநகர் வாழ, சடகோபன் தண்டமிழ் நூல் வாழ" என்னும் வெண்பாவுக்குப் பிரதியாக "நானிலமுந்தான் வாழ நான்மறைகள் தாம்வாழ, மாநகரில் மாறன் மறைவாழ" என்கிற வெண்பா வெளிவந்துளது. மாறன் மறையாகிய திருவாய்மொழி மாநகரில்வாழ என்கிறது இதில். மாநகர் என்பது எது? திருவாய்மொழி யில் "தென் திருப்பேரெயில் மாநகரே" என்றுள்ளதனுல் ஆழ்வார் திருநகரிக்கு ஸமீபத்தி லுள்ள தென் திருப்பேரைக்கே மாநகரென்று திருநாமமுண்டு. அவ்விடத்திலா மாறன் மறைவாழ வேணும்? 'ஸர்வதேச தசாகாலேஷு' என்ருற்போலே உலகமெங்கும் வாழ வென்று ஆசாஸிக்க வேண்டாவா? ஏற்கெனவே *அரங்கநகர்வாழ* என்பது ப்ரஸித்த மாய்விட்டபடியால் அதை ப்ரஸ்தாவிக்க முடியாமற்போனுலும் 'மாநிலத்தில் மாறன்மறை

*8

வாழ'' என்னலாமே. ஏதோவொரு நகரை உத்தேசித்துத்தானே 'மாநகரில்' என்கிறீர்கள். அந்நகர் இன்னதென்று பக்தர்கள் தெரிந்துகொள்ளவேண்டாவா? கேட்டுச் சொல்லுவீரா?

81. நம் தேசிகர் ஸாதித்த ஸம்ப்ரதாய பரிசுத்தி முதலான ரஹஸ்ய க்ரந்தங்களில் ஆதிமத்யாவஸானங்களில் சுலோகங்களும் பாட்டுகளுமுள்ளன. அந்த சுலோகங்கள் எப்படி தனிப்பட்ட பிரபந்தங்களல்லவோ, அப்படியே அப்பாட்டுக்களும் தனிப் பிரபந்தங்களல்லவென்பது சிலாலிகிதம். "அவை தனிப் பிரபந்தங்களாகவும் தொன்றுதொட்டு விளங்கிவருகின்றன'' என்பது ஹாஸாஸ்பதம் கேவலம். கோவில் சண்டை தோன்றுவதற்கு முன்பு தேசிகரை இன்னுரென்றேயறியாதிருந்த வகுப்பினர் 'தொன்றுதொட்டு' என்பது பாமரவஞ்சனைமட்டுமன்றே. ஆத்மவஞ்சனையுமல்லவா? என்ன சொல்லுகிறீர்?

82. இத்தகைய விசாரங்கள் பாசி படர்ந்துவிட்டன. தேசிகர் பெரியவாச்சான் பிள்ளை முதலான ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகளைத் தழுவியே ஸாதித்திருப்பவர் என்பதும் சிலவிடங்களிற்காணும் அபிப்ராயபேதங்களும் நிலைநின்றிருக்கவில்லையென்பதும் இனி மூதலிக்கப்படுகிறது. ஸ்தோத்ர ரத்நத்தில் "மம நாத! யதஸ்தி யோஸ்ம்யஹம் .. அதவா கிம் நு ஸமர்ப்பயாமி தே'' என்றவிடத்து தேசிக பாஷ்யத்தில்—கீழ் *வபுராதிஷு* என்ற ச்லோகத்தில் *அஹமத்யைவ மயா ஸமர்ப்பித:* என்று செய்யப்பட்ட ஆத்ம ஸமர்ப்பணம் அடுத்த *மம நாத! யதஸ்தி* இத்யாதியில் அநுசயமுகேந ப்ரதிக்ஷேபிக்கப்படுவதாய்ச் சில ஆசாரியர்கள் திருவுள்ளம்பற்றுவதாக எடுத்துக்காட்டி மறுக்கப்பட்டிருப்பதைக் காணலாம். முன் சுலோகத்தில் செய்த ஆத்ம ஸமர்ப்பணத்தைப்பற்ற அநுசயமென்பது அஸம்பாவிதம் என்றும், தத்விவரணமே இதில் செய்யப்படுகிறதென்றும் இங்கே காட்டப்பட்டது. ரஹஸ்யத்ரயஸாரத்தில் ஸாங்கப்ரபதநாதிகாரத்தில் "இஸ்ஸமர்ப்பணத்தைப் பற்ற அநுசயம் பண்ணிற்றும்'' என்கிற ஸ்ரீஸூக்தியாலே அநுசயமென்றே நிர்ணயித்தாராயிற்று. அநுசயமன்றென்றதற்கு அநுசயம் காட்டினபடியல்லவா இது? இதைப்பற்றி ஏதாவது வாய்திறக்கவல்லீரோ ஸந்தானரே! முந்தின க்ரந்தமெது? பிந்தின க்ரந்தமெது? என்று பெரியார்களைக் கேட்டுச்சொல்லுவீரா?

83. சரமச்லோகத்தில் ஏகசப்தார்த்தமருளிச் செய்யாநின்ற பிள்ளைலோகாசாரியர் "இத்தால் வ்ரஜ என்கிற ஸ்வீகாரத்தில் உபாயபாவத்தைத் தவிர்க்கிறது'' என்றருளிச் செய்தார். இதை ரஹஸ்யத்ரயஸார சரமச்லோகாதிகாரத்திலே மறுத்துரைத்தாரென்பதையும் ஸாரஸார ரஹஸ்யத்திலே சரமச்லோகாதிகாரத்திலே முமுக்ஷுப்படியைத் தழுவியே யெழுதிவைத்தாரென்பதையும் காஞ்சீபுரம் ஸ்வாமி விவரித்திருப்பதைக் கண்டிருக்கிறீரா? ஸாரஸாரமென்பது ரஹஸ்யத்ரயஸாரத்தின் ஸாரமென்கிற பொருள் கொண்டது. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் மறுக்கப்பட்ட அர்த்தம் தத்ஸாரத்தில் ஸ்தாபிக்கப்படுகிறதென்பதை ஸாரமாகவுணரலாம். உணர்ந்தால், ஏதோ காரணவிசேஷத்தால் தமக்குண்டாகும் அபிப்ராயபேதத்தைத் தாமே மாற்றிக்கொள்ளுகிற பரமப்ராமாணிகர் நம் வேதாந்தவாசிரிய ரென்றுணரலாம். இதைப்பற்றி ஏதாவது சொல்லவல்லீரோ?

84. வேதாந்தவாசிரியருடைய ரஹஸ்ய நூல்களில் மூவகையான ப்ரக்ரியைகளைக் காணலாம். (1) பூர்வாசார்ய ரஹஸ்யங்களில் கண்ட பொருள்களில் சிலவற்றை அநுப

பங்கமென்று கண்டிப்பது ஒரு ப்ரக்ரியை. (2) கண்டித்ததாகக் காட்டிக்கொள்ளாமலே வேறோரிடத்தில் அப்பொருளையே [தாம் கண்டித்த பொருளையே] ஸ்வஹஸ்தேந எழுதி வைத்தல் மற்றொருவைகரி. (3) முன்னம் தாமே கண்டித்ததைத் தாமே பிறகு தழுவுவது அபஹாஸ்யமாகுமேயென்று கருதி "அப்படியருளிச்செய்தவர்களுக்கு இப்படியபிப்ராயம்" என்று வழிவிடுதல் மூன்றாவது ப்ரணாளி. இவற்றைப் பல விஷயங்களில் கவனித்திருக்கிறீரா ஸந்தானரே! இனியாவது கவனிப்பீரா?

85. முதலில் ஒருவகையபிப்ராயம் காட்டுவதும் பிறகு தாமே அதை மாற்றிக்கொள்வதுமானவிடங்கள் பலவற்றுக்கு மிக முக்கியமாக இன்னொரு விஷயம் கேளும். உபேயம் என்று ஒன்றும், உபாயம் என்று ஒன்றும் வழங்கப்பட்டுவருவதை யாவரும் அறிவர். உபேயம், ப்ராப்யம், பலன் என்றிவையெல்லாம் பர்யாயங்கள். உபாயம் ஸாதனம் ஹேது என்றிவையெல்லாம் பர்யாயங்கள். ஒரு உபேயத்தைப் பெறுவதற்கு ஒன்று அல்லது பல உபாயங்கள் வேண்டியிருக்கும். உபாயமில்லாமல் உபேயம் ஸித்திப்பது அரிதன்றோ. ஒருவன் ஒரு க்ராமப்ராப்தியை உபேயமாகக் கொண்டால் சகடகமநாதிகளை உபாயமாகக் கொள்ளக் காணாநின்றோம். இப்படியெங்கும் கண்டுகொள்ளலாம். இந்த ரீதியில் மோக்ஷப்ராப்தியை உபேயமாகக் கொண்டால் அதற்கொரு ஸாதனம் இருந்தே தீரவேணுமென்னுமபிப்ராயத்தைச் சிக்கனக்கொண்டு 'உபேயமும் அவனே, உபாயமும் அவனே' என்றறுதியிட்ட ஆசாரியர்கள்மீது அம்பு தொடுக்கும் முறையிலே தேசிகர் சிலவிடங்களில் ப்ரத்யவஸ்தானங்கள் பண்ணியிருப்பதுண்டு. ஆனால் இவ்வபிப்ராயம் நிலைநின்றிருக்கவில்லை. க்ரமேண விமர்சிக்க விமர்சிக்க, "உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ" என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தி முதலானவற்றைச் சிந்தனைசெய்ய நேர்ந்து ஸாரார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் *நிஜகர்மாதிபக்த்யந்தம் குர்யாத் ப்ரீத்யைவ காரித:, உபாயதாம் பரித்யஜ்ய ந்யஸ்யேத் தேவே து தாம் அபி:* (31) என்கிற சுலோகத்தின் விவரணத்தில் "முக்தவ்யாபாரந்யாயேந ஸ்வயம் ஸ்வாதுத்வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவி பலஸாதநத்வாநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ:" என்றருளிச் செய்தாரென்பதைக் கண்டிருக்கிறீரா?

86. இங்கு, "நாஸ்ய ஸ்வவ்யாபாரே மோக்ஷோபாயதாபுத்திர் யுக்தா" என்றெழுதலாமாயிருக்க "மோக்ஷோபாயதாபுத்திரபி ந ஸ்யாத்" என்றெழுதியிருப்பதன் சுவையை ஆரேயறிவார். இந்தவொரு வாக்யத்தாலே உபாயவிஷயமாகத் தாம் ஆங்காங்கு எழுதி வைத்த மறுப்பு வாக்கியங்கள் யாவும் ப்ரதிக்ஷிப்தங்களென்பதை ஸம்சய விபர்யயமறவுணரலாம். உணர்ந்தீரா ஸந்தானரே! இத்தகைய வினாக்களை விட்டிடுவோம்.

87. இக்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் இருபிளவு ஏற்பட்டு ஸம்ப்ரதாய பேதம் கோஷ்டிபேதம் புண்ட்ரபேதம் முதலான பல பேதங்கள் காண நிற்பதுபோல முற்காலத்தில் ஒரு பேதமுமிருந்ததில்லை. இருந்ததென்றே சிலர் வாதித்தாலும் அந்த பேதங்களில் நிகமாந்தகுரு கலந்துகொண்டவரல்லர். எம்பெருமானாருடைய சிஷ்ய பரம்பரைகளில் அப்போது விளங்கிவந்த ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களோடும் ஆசார்யர்களோடும் ஒரு நீராகக் கலந்து பரிமாறினவரேயொழிய கைவல்யாநுபவம்போலே வேற்றுமைப்பட்டிருந்தவரல்லர். வேறொரு கோஷ்டியில் சேர்ந்திருந்தாரென்னில் இவர்

ஏகாகியாய்த் தனிப்பட்டிருந்தாரென்ன வேணுமேயொழிய, வேறொரு கோஷ்டியென்ப தற்கு வேறு நபர் ஒருவரும் கிடையாதென்பது திண்ணம். திவ்யப்ரபந்தங்களை நன்கு கற்றுணர்ந்து மற்ற ஸ்ரீவைஷ்ணவர்களோடு ஒரு நீராக கோஷ்டியில் கலந்து ஸேவிப்பது முதலானவற்றில் ஒத்துழைத்திருந்தாரேயல்லது பிறிகதிர்ப்பட்டிருந்தாரல்லர். அக் காலத்தில் மற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவரும் எந்த ஸந்நிவேசமாகத் திருமண்காப்பு அணிந்துகொண்டிருந்தார்களோ அந்த ஸந்நிவேசமல்லது வேறொரு ஸந்நிவேசத்தை நெஞ்சாலும் நினைத்தவரல்லர் என்கிற தத்துவத்தை யறிந்திருக்கிறீரா இல்லையா?

88. தேசிகனிடத்தில் திருக்குமாரரும் ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமியுந் தவிர வேறொருவரும் ஆச்ரயித்ததாகத் தெரியாமையாலே மற்ற ஸ்ரீவைஷ்ணவர்கள் அஸூயாதி களாலே தேசிகனை யொதுக்கிவைத்து அணுகாமலேயிருந்து தூஷித்துக்கொண்டு மிருந்தார்களென்றும், *ஹந்த ஹந்த! ராமக்ருஷ்ண தூஷணுபிதாயிநாம் கிம் நு சித்ரமத்ர சைத்ய ராவணனுஸாரிணும்* இத்யாதி ச்லோகங்களினுலும் இது ஸ்பஷ்டமாகிறது என்றும் நவீனர்கள் சொல்லிவருவதையே ஸந்தானரே நீரும் பின்பாட்டு பாடுகிறீரா?

89. வேதங்கள் வேதாந்தங்கள் ஸ்மிருதிகள் பாஞ்சராத்ரங்கள் இதிஹாஸ புராணங்கள் திவ்யப்ரபந்தங்கள் இதர சாஸ்த்ரங்கள் ஆகிய எல்லாவற்றிலும் நிகரற்ற பாண்டித்யம் பெற்றிருந்த நம்ஸ்வாமி அக்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களுள் தலைமையான ஸ்தானம் பெற்றுத் திகழ்ந்தார். பித்ருச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண் டிருந்து ஸமயத்தில் வஞ்சித்துவிட்டார்களென்றும், திருமுடியில் படும்படி திருமாளிகை வாசலில் பாதரக்ஷையைக் கட்டிவைத்தார்களென்றும்...இப்படி அஸப்யமான ஐதிஹ்யங் களைப் பலகால் சொல்லியும் கேட்டும் பழகிவிட்டபடியால் "துர்வாஸநாத்ரடிமத:" என்று ஆழ்வான் ஸாதிக்கிற ரீதியில் இந்தப் பொய்க்கதைகளில் திடநம்பிக்கையுண்டாகி, மெய்யுரைகளை எவ்வளவு கேட்டாலும் அதைத் திரஸ்கரித்துத் தங்களுடைய மூடநம்பிக் கையையே மேம்படக்கொள்ளும் ஜனங்களிடையே வாழ்கின்ற நீரும் அந்த மூடநம்பிக் கையையே கொண்டிருக்கிறீரா? இனி உயர்ந்த வினுக்கள் சில கேளும்.

90. நிகமாந்தகுரு நம்பிள்ளையை நேராக ஸேவிக்கப்பெற்றவரல்லர்; முன்னமே அவர் திருநாட்டுக்கெழுந்தருளி விட்டபடியாலே. ஆனாலும் நம்பிள்ளை திருவாக்கினின்று பெருகின மஹார்த்த அம்ருததாரைகள் அவருடைய சிஷ்யப்ர சிஷ்யர்களின் வியாக்கியான க்ரந்தங்களிலே தேங்கியிருந்தபடியாலே அவற்றை ஆராவமுதமாக அநுபவித்துப் பேரின்பமடைந்தவர்களில் தலைவரான நிகமாந்தவாசிரியர் அவ்வர்த்தவிசேஷங்களையே தம்முடைய நூல்களில் சேர்த்தருளினுர் என்கிற தத்துவத்தை ஸந்தானரே! நீர் அறிந்திருக் கிறீரா இல்லையா? எப்படியறிந்து கொண்டிருப்பீர்?

91. பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களத்தனையும் தேசிகர் காலத்தில் விசேஷப்ரசாரமடைந்திருந்தபடியால் அவற்றை 'அமுதிலுமாற்ற வினிது' என்கிற ப்ரதி பத்தியுடன் பருகிக்களித்தவர்களில் தலைவராக இருந்தபடியால்தான் த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலி யருளிச்செய்தபோது பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரப் படியையே தழுவிப் பெரும்பாலுமருளிச் செய்திருக்கிறுரென்பது அவிசால்யமாய்

ஸஸாக்ஷிகமாயிருக்கிறது. ஸ்தோத்ரபாஷ்யத்தை யெடுத்துக்கொண்டால் ஒவ்வொரு ச்லோகத்தின் பாஷ்யத்தையும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை உடன் கொண்டு ஸேவித்தால், அவருடைய வியாக்கியான ஸரணியை இவர் எவ்வளவு தழுவி யிருக்கிறுர் என்பது அநாயாஸமாக விளங்கும். இதில் காஞ்சீ ஸ்வாமியின் விபுல நிருபணங்களைக் கண்டிருக்கிறீரா? ஸ்ரீ ராமாநுஜன் 217 ஸேவித்திருக்கிறீரா?

92. ஸ்ரீவசநபூஷணம் நான்காவது ப்ரகரணம் ஆரம்பம்—"த்ரிபாத் விபூதியிலே பரிபூர்ணுநுபவம் நடவாநிற்க......என் ஊரைச் சொன்னுய், என் பேரைச் சொன்னுய், என் அடியாரை நோக்கினுய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய் என்னுமாபோலே சிலவற்றை ஏறிட்டு மடிமாங்காயிட்டு......ஜந்ம பரம்பரைகள் தோறும் யாத்ருச்சிகம் ப்ராஸங்கிகம் ஆநுஷங்கிகமென்கிற ஸுக்ருத விசேஷங்களைக் கற்பித்துக்கொண்டு தானே அவற்றை ஒன்று பத்தாக்கி நடத்திக்கொண்டு போரும்" என்று ஆச்சரியமான சூர்ணிகையொன்றில் எம்பெருமானுடைய விஷயீ காரத்தின் பரிசு பரமபோக்யமாக நிருபிக்கப்பட்டுளது. இந்த ஸ்ரீஸூக்தியின் சுவடறிந்த வேதாந்தவாரியர் இப்பொருளை அப்படியே அமையவைத்துப் பரமபத ஸோபாநத்தில் "அஜ்ஞாத யாத்ருச்சிக ஆநுஷங்கிக ப்ராஸங்கிக ஸாமாந்ய புத்தி மூலஸுக்ருத விசேஷங்களை வ்யாஜமாகக்கொண்டு விசேஷ கடாக்ஷம் பண்ணி" என்று பணித்திருப் பதைப் பார்த்திருக்கிறீரா? உங்கள் மதத்திற்கு இதெல்லாம் விஷமாக இல்லையா?

93. *உபபத்தேச் ச* (3-2-4. என்கிற ப்ரஹ்மஸூத்திரத்தின் ஸ்ரீபாஷ்யத்திலே— "ப்ராப்யஸ்ய பரமபுருஷஸ்ய ஸ்வப்ராப்தௌ ஸ்வஸ்யைவ உபாயத்வோபபத்தே:. *நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:......தநூம் ஸ்வாம்* இதி அநந்யோபாயத்வ ச்ரவணுத்" என்றும், *"அம்ருதஸ்ய ஏஷ ஸேது:* இதி அம்ருதஸ்ய ஸ்வஸ்ய ஸ்வயமேவ ப்ராபக இதி ஸேதுத்வ வ்யபதேசோபபத்தேச்ச" என்றும் இப்படியுள்ள பலபல ஸ்ரீஸூக்திகளை யநுஸரித்தே நிகமாந்த குருவரரும் கீதார்த்த ஸங்கிரஹ ரக்ஷையிலே "ஸ்வயம் ஸ்வாதுத் வாத் க்ஷணிகஸ்ய காலாந்தரபாவிபலஸாதநத்வ அநுபபத்தி தர்சநாச்ச நாஸ்ய ஸ்வவ்யா பாரே மோக்ஷோபாயதாபுத்திரபி ஸ்யாத் இதி பாவ:; அந்தத: தைலவத் ராராதிதோ பகவாநேவ ஹி ஸர்வத்ரோபாய:" என்று பணித்தாரென்பதை மறவாமல் நெஞ்சிலே தேக்கிவைத்துக் கொள்ளுவீரா?

94. அதெல்லாம் வாஸ்தவந்தான்; சேதனன் சில வியாபாரங்கள் செய்துதானே தீரவேண்டும்; அவை ஸாத்யோபாயமென்பதை இல்லை செய்யமுடியாதன்ரோ? என் கிறீரோ? உண்மையில் இது கேட்கத்தக்கதே; இதற்குக் கேளும். கீதையில் *அநந்யசே தாஸ் ஸததம்* என்கிற ச்லோகத்தில் [தஸ்யாஹம் ஸுலப:] என்கிற பகுதிக்கு பாஷ்ய பங்க்திகள் கேளீர். "தத்வியோகம் அஸஹமாந: அஹமேவ தம் வ்ருணே. மத்ப்ராப்த்யநு குணஉபாஸநவிபாகம் தத்விரோதிநிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ் ச அஹமேவ ததாமீதி அர்த்த: *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* இதி ஹி ச்ரூயதே. வக்ஷ்யதே ச *தேஷாம் ஸததயுக்தாநாம்...இதி." என்னுமிவ்வளவும் கீதாபாஷ்ய ஸூக்திகள். இவற்றின் பொரு ளாவது—அவனுடைய பிரிவைப் பொறுக்கமாட்டாதவனுய் [அவனைப் பிரிந்து தரித் திருக்கமாட்டாதவனுய்] நானே அவனை வரிக்கிறேன். என்னையடைவதற்கான உபா

ஸனத்தின் பரிபக்குவ நிலையையும் அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும் என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். *நாயமாத்மா ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்தக் கீதையிலேயே மேலே பத்தாவது அத்தியாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது—என்பதாம். மூலத்தில் இவ்வர்த்தமுள்ளதா என்கிற விசாரத்தில் செல்லாமல் இவை கீதாபாஷ்ய பங்க்திகள்தானா? என்பதை மட்டும் பாரும். இங்கே தாத்பர்ய சந்த்ரிகையில் எவ்வளவு தெளிவு காட்டியிருக்கிறாரென்பதையும் பாரும். இவற்றுக்கெல்லாம் எதிரிடையான மதத்தைத்தானே தழுவியிருக்கிறீர்கள்? வாயைக்கையைத் திறவாமல் இருந்துவிடுகிறீரா?

95. ஸ்ரீபாஷ்யகாரருடைய ஸாக்ஷாத் திருவடியான திருக்குருகைப்பிரான் பிள்ளான் திருவாய்மொழியில் (1-1-10) *பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்* என்கிற பாசுரத்தின் ஆறாயிரப்படியில், "அதி ஸூக்ஷ்மமாயிருந்த அசித் வஸ்துக்களிலும் வியாபித்து அவற்றினுள்ளே ப்ரகாசிக்கிற சித் வஸ்துக்களிலும் ஸ்தூலமான அண்டத்தில் வியாபித்தாற்போலே அநாயாஸத்தாலே அஸங்குசிதனாய்" என்றார். இதை நீங்கள் ஆதரிக்கிறீர்களா?

96. ஸ்ரீரங்க ராமாநுஜஸ்வாமி தமது ஒன்பதினாயிரப்படியில் "ஏகைகஸ்மிஞ்ஜலபரமாணௌ அதி விசாலப்ரஹ்மாண்ட இவ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்தவ்ருத்தி:" என்றார். இதன் பொருளாவது, வ்யக்திகளில் ஜாதியானது எப்படி பரிஸமாப்யவர்த்திக்கின்றதாக ஜாதிவாதிகளால் கொள்ளப்பட்டிருக்கின்றதோ அப்படி எம்பெருமான் ஒவ்வொரு ஜலபரமாணுவிலும் அதி விசாலமான ப்ரஹ்மாண்டத்திலிருப்பதுபோல (நெருக்குண்ணாமல்) நிறைந்திருக்கின்றான் என்பதாம். இங்கு *பர்யாப்த வ்ருத்தி:* என்றது 'பரிஸமாப்ய வர்த்தமாந: என்றபடி. முன்னோர்களோடு பின்னோர்களோடு வாசியற இங்ஙனே ஸகண்டமாகப் பணித்திருக்கவும், இவ்வளவேயன்றிக்கே ந்யாயஸித்தாஞ்ஜநாநுக்ருஹீதமுமாயிருக்கவும் வீண்பிடிவாதங்கொண்டுதானே விபரீதவாதம் செய்கிறீர்கள்?

97. நம்பிள்ளை பக்கலில் ஒரு பண்டிதர் வந்து "கீதையில் அர்ச்சாவதார ப்ரஸ்தாவமேயில்லையே! ஏன்?" என்று கேட்க, "நாலாமோத்தில் *யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்* என்றதில் அர்ச்சாவதார நிலையும் அந்தர்க்கதமே காணீர்" என்று நம்பிள்ளையருளிச்செய்ததாக வார்த்தாமாலையிலுள்ளது. திருவாய்மொழியில் (8-1-4) *உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகி* என்கிற பாசுரத்தை அர்ச்சாவதார பரமாக நிர்வஹித்து இந்த கீதாச்லோகத்தை ஸம்வாதப்ரமாணமாக நம்பிள்ளை காட்டியருளினது ஈட்டிலும் இருபத்து நாலாயிரப்படியிலும் விசதம். இந்த கீதா ச்லோகத்திற்கு அர்ச்சாவதாரபரத்வம் கீதாபாஷ்யத்தில் இல்லை. நம்பிள்ளை நிர்வாஹமே. தேசிகன் இந்த நிர்வாஹத்தை தாத்பர்யசந்திரிகையில் *யே யதா மாம் உபக்ரமத்திலேயே "அத்ர க்ருஷ்ணாவதார வ்ருத்தாந்தேந ஸஹ அர்ச்சாவதார வ்ருத்தாந்தோபி ஸங்க்ருஹீத:" என்று காட்டினர். இதனால் நம்பிள்ளை பணித்தருளும் அர்த்த விசேஷங்களில் தேசிகருக்கு எவ்வளவு பஹுமானமென்று அறிந்தீரா? ஒருநாள் நம்பிள்ளை யுபந்யாஸத்தில் *தம்மை யுகப்பாரைத் தாமுகப்பரென்கிற நாச்சியார் திருமொழிப் பாசுரத்தைக்கொண்டு ரஸமாக அருளிச்செய்கையில் *ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம் அஹம் ஸ ச மம ப்ரிய:* என்கிற கீதா ச்லோகத்தில் சகாரத்தைக்கொண்டு "ஜ்ஞானி என் பக்கலில் செய்யும் ப்ரீதியை

உபாதியாக்கி அவன் பக்கலிலே நான் ப்ரீதி பண்ணுவது பெரிதோ?" என்றருளினதாக வுள்ளது. இதை ஸேவித்த தேசிகன் அந்த கீதாச்லோகத்தின் தாத்பர்யசந்திரிகை முடிவில் "ஸ ச மம ப்ரிய இத்யத்ர நிரதிசயப்ரீதிம் குர்வதோபி மஹோதாரஸ்ய ஈச்வரஸ்யாபி தத்ப்ரீத்யுபாதிகப்ரீதிகரணத் அத்ருப்திஸ் ஸூசிதேதி கேசிதாசார்யா:" என்றெழுதினர். (கேசிதாஹு:) என்னுமல் கேசிதாசார்யா: என்றதிலுள்ள ப்ரதிபத்தி கௌரவத்தை யுணர்ந்தீரா? இப்படிப்பட்ட அருமருந்தான அர்த்த விசேஷங்களை [நூற்றுக்கணக்காக] தேசிகர் நம்பிள்ளை ஸ்ரீஸூக்திகளில் உபஜீவித்திருக்க, அந்த நம்பிள்ளையடியாகத் தோன்றிய வியாக்கியானங்களிலுள்ள குற்றங்குறைகளைக் களைவதற்காக தேசிகர் நிகம பரிமலமிட்டார்; ஐயோ அது அநியாயமாக லோபித்துவிட்டதே! என்று அழுகிறவர்க ளோடே கூடி நீரும் கழுத்தைக்கட்டிக்கொண்டு அழுகிறவர்தானே.

98. ஸச்சரித்ரரக்ஷையில் *கரியமேனி மிசை வெளியநீறு சிறிதேயிடும் பெரிய கோலத்தடங்கண்ணன்* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின் பொருளை நிர்வஹிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டபோது பிள்ளானுடைய ஆருயிரப்படி வியாக்கியா னத்தை அறவே உபேக்ஷித்துப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தையெடுத்துக் காட்டி 'ஆசார்யர் நிர்வஹித்த கட்டளை இது' என்று நிகமித்திருக்கிறபடியைக் கண்டிருக் கிறீரா? ஸ்ரீராமாநுஜன் 217ல் பக்கம் 17 முதல் 38 பக்கம் வரையிலும் திகழும் நிதிகளை யும் ரத்னங்களையும் நிச்சலும் சிந்தை செய்துவருகிறீரா?

99. சமம் தமம் என்கிற குணங்களின் விவரணத்தில் "சமமாவது அந்த: கரண நியமனம்; தமமாவது பாஹ்யகரண நியமனம்" என்று கீதாபாஷ்யத்தில் பத்தாமத்யாயத் தில் அருளிச்செய்த பாஷ்யகாரர் தாமே பதினாறுமத்யாய பாஷ்யத்தில் அந்த: கரண நியமனத்தை தமமாகவும் பாஹ்யகரண நியமனத்தை சமமாகவும் விவரித்தருளினர். இங்கு தேசிகர் தாத்பர்யசந்த்ரிகையில் "ஏதேந கேஷாஞ்சித் அநயோச் சப்தயோ: வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்யானம் நிரஸ்தம்" என்று ஸாதித்துள்ளார். சங்கரபாஷ்யத் துக்கு மறுப்பாக இது எழுதப்பட்டிருக்கவேணும். வ்யுத்க்ரமமாக உரையிட்டவர் நம் பாஷ்யகாரருமாதலால் அவருடைய ஸ்ரீஸூக்திக்கே மறுப்பாகத் தேறவில்லையா? இங்கு ஏதேந என்பதற்கு என்ன அர்த்தம்? 'பாஷ்யகாரர் இப்படியருளிச் செய்திருக் கையாலே' என்றுதானே அர்த்தம். நம்முடைய பாஷ்யகாரர் அருளிச்செய்ததனாலே சங்கரபாஷ்யம் எப்படி நிரஸ்தமாகும்? ஆக இங்கு இரண்டு வினாக்களுக்கு விடை யளிப்பீரா?

100. ஸந்தானரே! நூறாவது வினாவந்துவிட்டது. இந்த ஒரு வினாவுக்கு விடை கூறிவிட்டீராகில் நூறு வினாக்களுக்கும் விடைகூறிவிட்டதாக வெற்றிக்கொடி நாட்டுவோமுமக்கு. ஸ்ரீமத்ரஹஸ்யத்ரயஸாரத்தில் "இப்படி மத்யஸ்த்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றச்செய்தே பற்றினது விடாதொழியில் *த்ருடபூர்வ ச்ருதோ மூர்க்க:...* என்கிற தசையாம்" என்று தலைக்கட்டியுள்ளது. இங்குக்கேள்வி;- மத்யஸ்த த்ருஷ்டியாலே ப்ராமாணிகார்த்தங்கள் தோற்றியிருப்பதாகச் சொல்லப்படுகிற அர்த்தங்கள் எவை? பிறர் பற்றினது விடாமல் பிடிவாதமாகச் சொல்லும் அர்த்தம் எது? இதைப்பற்றிக் காஞ்சி ஸ்வாமியின் நூல்களிலுள்ள வைசத்யங்களை உள்ளத்தில் தேக்கிக்கொண்டு விடையளிப்பீரா? இவ்வளவோடு உம்மை விட்டிட்டேன்; போம்.

ஸந்தானகோபால ஸாஹஸோந் மூலனம் முற்றிற்று.



# நூறு வினுக்களின் விஷய ஸூசிகை.

(எண்—வினுக்களின் வரிசை லக்கம்.)

1. திருமலையில் எம்பெருமானார் திருக்கோலம் திகழவேண்டிய அவசியம்.
2. எம்பெருமானார் திருக்கோலத்திற்கு அஞ்ஜலி முத்திரையேயென்கிற நிர்ப்பந்தமில்லாமை.
3. திருமலையுடையவர் திருக்கோலத்தினுண்மையான பரிஸ்திதி.
4—6. வேதாந்தவாரியரின் கண்டாவதாரத்வயாதாத்மியம்.
7 க்ருஷ்ணுக்யவிப்ரருக்கு வேதாந்த தேசிகத்வமளித்த கதை.
8. திருவேங்கடமுடையான் நாடோறுங்கேட்டருளும் மாமுனிகளின் மாண்பு.
9. வடகலையாசார்ய புருஷர்க்கும் மரியாதை காண்பதுண்டென்று மூதலித்தல்.
10, 11. D. T. தாதாசார்யருடைய கல்வெட்டான நிர்த்தாரணத்தின் அநுவாதம்.
12, 13. பிரதிபக்ஷிகளுக்கு உடையவர் திறத்தில் மஹத்தான மாச்சரியம்.
14. இந்த நூறு வினுக்களால் நன்கு ஸித்திக்கக்கூடிய விஷயங்கள் நான்கென்பது.
15. திருமலையுடையவர் திருக்கோலஸேவையும் ஹநுப்ரஹாரக் கட்டளையும்.
16. பிரதிபக்ஷியின் அட்டஹாசப் பேச்சின் அநர்த்தோதர்க்கத்வகதனம்.
17. ஸம்பந்தமற்ற அஸங்கதப்பேச்சுகளை விட்டொழிக்குமாறு உபதேசம்.
18. பிரதிபக்ஷிகள் தழுவும் மதம் மிகவும் பல்பஜமென்று நிருபிக்கும் ப்ரதிஜ்ஞை.
19—21. சரித்திரங்கள் கூறுவதில் பிரதிபக்ஷிகளுக்கு மூலாதாரமேதுமில்லாமை கூறுதல்.
22, 23. பரகாலமடத்திலச்சிட்ட குருபரம்பரையின் அபஹாஸ்யதை
24, 25. பிரதிபக்ஷிகளுக்கு ஆசார்யசம்புவில் அநாதரஹேது நிருபணம்.
26—30 திருத்தண்காவ்யபதேசத்தைவிட்டுத் தூப்பலைக்கொண்டது நவீனமெனல்.
31—34. உப்பிலியப்பன் ஸ்ரீராமதேசிகரின் தெளிவைப்பற்றிய தெளிவுரைகள்.
35. ஆங்காங்கு திவ்யதேசங்களில் தேசிக ப்ரதிஷ்டை தென்கலையார்களே செய்தது.
36, 37. மணவாளமாமுனிகளின் தனியனுக்கு நிராபாதமானவெற்றி
38—40 நவீனர்களுக்கு இப்போது காணும் தேசிகாபிமானம் சென்ற நூற்றுண்டிலிருந்தே.
41. தென்கலை ஸம்பிரதாயக்ரந்தங்களின் நெடுநாளைத்தொடர்ச்சி நிருபணம்.
42. எதிர்த்தலையில் ஆதரிக்கும் நூல்கள் அதிநவீனமென்பது.
43—46. நிகமாந்தமஹாகுரு க்ரந்தங்களை அந்நாள் தொடங்கி அநுஸ்யூதமாக ஆதரித்தவர்கள்யாமே.
47. நவீனர்கள் செய்யும் வீணுன ஆடம்பரச் செயல்களால் பலனில்லையென்பது.
48—52. நவீனர்கள் தேசிகரிடத்தில் பரிவுகாட்டும் வியாஜத்தினுல் பரிபவமே நாட்டுதல்.
53. ஸ்ரீரங்கவாஸிகளிடத்தில் தேசிகருடைய நிகரற்றப்ரதிபத்தி.
54. உண்மையான தேசிகபக்தர் ஒருவரேயென்று விளக்குதல்
55. தேசிகரை விபவத்திலும் அர்ச்சையிலும் அவஜ்ஞை செய்பவர்கள் இன்னுரென்று காட்டுதல்.
56—59. ராமாநுஜ தயாபாத்ரத்தனியனின் அஸாங்கத்யம் (அல்லது) அசட்டுத்தனம்.
60 லக்ஷ்மீநாதேத்யாதிதனியன்களில் பிரதிபக்ஷிகளுக்கு அந்வயலேசமுமில்லாமை
61—63 ஸ்ரீரங்கபாஷ்யர்கள் ஸ்ரீரங்கஸ்ரீயை வாழ்த்துவது அநுசிதமென்று காட்டுதல்.
64. ஸ்ரீராமாநுஜர் தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்த உண்மை.
65—68. கிடாம்பியப்புள்ளார்தனியனை மாற்றினதிலிருந்து வெளிப்பட்ட சாயங்கள்.
69. திவ்யதேசங்களில் திகழும் தேசிக விக்ரஹங்களை வெறுத்த அநீதியைக் காட்டுதல்.
70. தேசிக விக்ரஹத்தில் இற்றைக்கும் தென்கலையாருடைய ப்ரதிபத்தி குன்றுமை.
71. ஸ்ரீரங்கத்தில் தேசிக விக்ரஹ பரிஸ்திதியை ஸநிதர்சனமாகக் காட்டுதல்.
72. திருப்புட்குழியப்பாஸ்வாமியின் அருமையான ஸ்ரீஸூக்தியொன்று.
73—79 பிரபந்தஸாரத்தின் நவீநத்வஸ்தாபனம் அவிசால்யமென்பதுபற்றி.
80. "மாநகரில் மாறன் மறைவாழ" என்கிறவாழ்த்தின் அபஹாஸ்யதை.
81. தேசிகப் பிரபந்தமென வழங்கப்படும் பாட்டுக்களின் உண்மையான பரிஸ்திதி
82—86 தேசிக திவ்யக்ரந்தங்களில் தென்னுசார்ய ஸ்ரீஸூக்திகளைத் தழுவும் முறைமைகள்.
87—89. தேசிகர்க்கு அக்காலத்து ஸ்ரீவைஷ்ணவர்களோடிருந்த ஸாமரஸ்யம்.
90—100. நிகமாந்தகுரு திவ்யஸூக்தி பரிஸ்திதி பரிசீலனங்கள்.

# Works Of Manavala Mamunigal

Srimad Vara Vara Muni Granthamala — Vol. 1- Edited and published by Sri Kanchi P. B. Annangaracharya, Little Conjeevaram.

THE collected edition of the works of an author has obvious advantages especially when they are of perennial value as in the case of the works of our Acharyas. The varied works of Sri Vara Vara Muni who comes as the last in the line of Srivaishnava Acharyas belong to this category. These works reveal such vast scholarship, analytical intellect, lucidity and precision that they comprehend the entire school of thought of Sri Ramanuja in a concise form. The Vedanta school of Hindu philosophy being wholly interpretative of the Vedic texts, the special merit of Sri Ramanuja's exposition as a Vedantin lies in his synthetic approach, reconciling the apparently contradictory Vedic statements with a close and scrupulous adherence to tradition. In his commentary on the Brahma Sutras known as Bhashyam, he acknowledges these original sources without laying any special claim to originality. In this attempt to present the teachings of the Vedas in accordance with the traditional line of thought Sri Ramanuja seeks light from the inspired outpourings of the Alwars in Tamil contained in the Divya Prabandham and thus establishes his darsana on what is known as Ubhaya Vedanta. Tradition has it that the Great Teacher, with the publication of his Sri Bhashya accomplished only one part of his great task leaving the other part to be taken up in his next incarnation as Sri Vara Vara Muni. Thus the works of Sri Ramanuja and following him, those of his successors culminating with Sri Vara Vara Muni form such a continuous whole that to confine to one part leaving out the other results in an incomplete and imperfect understanding of Sri Ramanuja's system.

## PRINCE OF CLARITY

In a review like this it is not possible nor is it necessary to dwell on the life and history of Sri Manavala Mamunigal, as Sri Vara Vara Muni is commonly known, but suffice it to say that the works of this great saint, mostly commentaries fully justify his well-known appellation 'Visada Vak Sikhamani'—the Prince of Clarity of Expression.

The long interval between Sri Ramanuja and Saint Vara Vara Muni witnessed the birth of the special type of religious literature in Tamil on the lines of the Sanskrit sutras of Vyasa. Aphoristic in form and, in essence, rahasyas or esoteric collections from all sources, this branch of writings needed elucidation. Even as the sutras of Vyasa came to be explained by Sri Ramanuja, these cryptic texts though in Tamil had to be expanded for common understanding. The crowning pieces of Sri Manavala Mamunigal are to be found in his exposition of these sutras in his inimitable and exquisite manner, and it is no exaggeration to say that but for these commentaries, in particular the commentary on Acharya Hridhyam—the Heart of Nammalwar—the original aphorisms will remain sealed books for posterity.

## COLLECTED EDITIONS

To Sriman Annangaracharya Swami belongs the credit of conceiving and bringing out collected editions of the works of eminent acharyas. Coming in the line of his previous publications, the Granthamalas of Sri Ramanuja and Sri Vedanta Desika, the present one entitled "Srimad Vara Vara Muni Granthamala" is a valuable addition to the series. Intolerant as the Swami is of any faults in other writers and publishers, he has taken extreme pains in avoiding the pitfalls common to printing and editing in this, the first volume of the Granthamala which contains 12 out of the 17 works of this Acharya and released as a commemoration volume on the last birthday festival of Sri Mamunigal. Correct rendering of the text free from the errors which have crept into extant publications, illustrations in his preface of a few instances of the unique literary virtues of the great author, references to quotations cited running into thousands (which await further amplification in a future publication promised by the Swami) mark out this volume and distinguish it from the existing editions of these works individually. This volume fully establishes the fame already achieved by the Swami as the editor par excellence. The get-up leaves nothing to be desired and considering the prevailing costs the price of Rs. 25 for this 800-page volume is but modest.

It is to be earnestly desired that this and its companion volumes are read with close and reverent attention by all the votaries of the Ramanuja school irrespective of the sub-sect to which they may belong in a spirit of preference and not exclusion, and that all these three Granthamalas so far published by the Swami should adorn the bookshelves of every Srivaishnavite so that the courtesy title of Ubhaya Vedanthacharya, which is now an indiscriminate prefix, gains real significance.

C. S. Parthasarathi

*In Free India Weekly*

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

மிக முக்கியமான அறிவிப்பு:—நமது ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபையின் மூலமாக ஸம்பிரதாய நூல்கள் பலவும் அச்சிடப்பட்டு வருகின்றனவென்பது உலகம் பரவியுள்ளது. ஆஸ்திகர்கள் பலரும் இச்சபையில் மெம்பராகச் சேரும்படி கோரப்படுகிறார்கள். இதற்குச் செலுத்தவேண்டிய வருடச்சந்தா ரூ. 25 மட்டுமே. 213 நெ. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, ஜி. டி. மதராஸ் - இந்த விலாஸத்தில் விவரங்கள் தெரிந்துகொள்க. ... .... ( )

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், சின்ன காஞ்சீபுரம்.

(2) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(3) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
L. KANCHEEPURAM.

366. Sri Vangeepuram Raghavacharya,
MELKOTE (Mysore State)



Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, L. Kanchipuram.